# யோக வாசிஷ்டம்

(முதல் ஐந்து பிரகரணங்கள்)

தமிழாக்கியவர் :

S. V. கணபதி



அல்லயன்ஸ் கம்பெனி

மயிலாப்பூர் :: சென்னை - 4

 1948 5—0—0

# முகவுரை

மனது என்னும் சொரூபத்தையுடையவனே மனிதன். இம்மனதானது அறிவின் வேறுபாடு. ஆகையால், தன் சுய நிலையாகிய அறிவை அறிந்துகொள்வதே மனித உருவமாக இயங்கினதன் நோக்கம், இதுதான் மனித ஜன்மத்தின் குறியும் பலனும்.

ஜன்ம ஸாபல்யம் இப்படி இருக்க, அறிவுதான் அனைவராலும் அறியப்படாமலிருக்கிறது. லக்ஷக்கணக்கான வருஷங்கள் மானிட உருவத்தில் கழிந்தும், இந்த 'அறிவு' என்னும் சொரூபத்தை அறிந்து அதை அடையும் முறைகளைப்பற்றி உரைத்தவரோ, எழுதினவரோ இதுவரையில் எத்தேசத்திலும் தென்படவில்லை. அதாவது வசிஷ்டர் ஒருவரைத் தவிர, இதர உலக வியவகாரங்களைப்பற்றியும், மானிட வாழ்க்கையைப் பற்றியும், அதைச் சீர்திருத்திக்கொள்ளும் முறைகள், இன்னும் அநேகவித சித்தாந்தங்கள் பற்றியும் எல்லாம் அநேக மகான்களிடமிருந்து கேட்டோ, படித்தோ இருக்கிறோம். ஆனால் பிரபஞ்சத்திற்கு சாரமாயுள்ள அறிவைப்பற்றி நாம் அறியோம். வசிஷ்டர் ஒருவரே இதைப்பற்றிப் பூர்ணமாக எடுத்துரைத்தவர்.

அதாவது வால்மீகி மகரிஷியால் கேட்டு எழுதப்பட்ட காவியமாகிய "யோக வாசிஷ்டம்" அல்லது "மகாராமாயணம்" என்பதே இங்கு குறிப்பிடுவது. இது வெகு காலங்களுக்கு முன் எழுதப்பட்டிருந்தும், இதர காவியங்களாகிய ராமாயணம், பாரதம், பகவத்கீதை, உபநிஷத் இவைகளைப்போல் அவ்வளவு பிரபலமாக வெளிப்படையாகவில்லை. ஏனெனில், இதை அறிந்தவர்கள் மிகவும் சொல்பமென்றே சொல்லவேண்டும்.

வேதாந்த பண்டிதர்களாலும் இந்நூல் வெகுவாய்த் தள்ளப்பட்டதுபோலும். மேல் சொல்லப்பட்ட நூல்களெல்லாம் பல பாஷைகளில் மொழிபெயர்க்கப்பட்டும், இவைகளுக்கெல்லாம் திலகம்போல் விளங்கும் இந்நூல் பெரியோர்களால்கூட மதிக்கப்படாமலிருந்தது உலகத்திற்கே ஒரு பெரிய நஷ்டந்தான்.

இதற்குக் காரணமென்ன வென்பதை ஊகிக்கத்தான் முடியும். நாம் நினைப்பதாவது:—

(1) இக் காவியம் ஞானமார்க்கத்தைப்பற்றியே முற்றிலும் எடுத்துரைப்பதாலும், இம்மார்க்கம் பெரும்பாலும் ஜனங்களுக்கு ஒவ்வாதென்றும், அவர்களால் மிகக் கடினமானதாக பாவிக்கப்படுவதாலும் இருக்கலாம். எல்லா மார்க்கங்களிலும் மிக எளிதானது பக்தி மார்க்கமே யாகும். இதற்கும் அடுத்தபடியானது கர்ம மார்க்கம். இதிலும் மேன்மையானதும் மிகவும் சொல்ப ஜனங்களாலே மாத்திரம் அனுசரிக்கப்படும்படியானதும் யோக மார்க்கம். எல்லாவற்றைக் காட்டிலும் சிலாக்கியமானதும் கடினமானதுமாகவே ஞான மார்க்கம் சகஜமாய்க் கருதப்படும்.

(2) இந்நூல் பல கொள்கைகளுக்கு இடம் கொடுப்பதும் ஒரு காரணமாகும். எல்லாக் கொள்கைகளும் இந்நூலில் சமமாகப் பாவிக்கப்படுகின்றன. ஆகையால் கொள்கைகளில் மூழ்கிக் கிடப்பவர்களுக்கு இதில் ஆதாரம் யாதும் இல்லை. இக் காரணத்தால் எல்லோராலும் தள்ளப்பட்டிருக்கலாம். கொள்கைகளையும் மார்க்கங்களையும் வசிஷ்டர் மதிக்கவில்லை. இவைகளின் உதவியால் அடையவேண்டிய பதவியை அடைவதே வசிஷ்டரால் அங்கீகரிக்கப்பட்டது.

(3) பொது ஜனங்களால் அங்கீகரிக்கப்பட்ட தெய்வம் என்பதன் கல்பித சொரூபமும் தெய்வ பக்தியும் வசிஷ்டரால் தள்ளப்பட்டதும் காரணமாகலாம்.

காரணம் எதுவாயினும் இக்காவியம் வெளிவராதது நமக்கு நஷ்டமே.

ஞான மார்க்கத்தைப்பற்றிப் பேச, இம் மார்க்கம் இக்காலத்தும் மிகக் கடினமென்று பாவிப்பது சரியோ வென்று நாம் எண்ணுகிறோம். இதுவரையில் நடைபெற்ற மனித சரித்திரத்தை நோக்குமிடத்து, நாம் தெளிவாய் அறிவது என்னவென்றால், முற்காலத்தில் பிரஜைகளை ஆதரித்துவந்த அரசர்களே புத்தி, திறமை, ஒழுக்கம் இவைகளில் மேன்மையாகப் பிரகாசித்து வந்தார்களென்று. இது நம் தேசத்தில் மாத்திரமல்லாமல் எல்லாத் தேசங்களிலும் தென்படும். காலப்போக்கில் இவ்வரசர்கள் நன்னெறிகளிலிருந்து நழுவவே, இக்குணங்களெல்லாம் படிப்படியாக பிரஜைகள் வசமாயின. இக்காரணத்தாலேதான் அரசாக்ஷி பதவியும் அரசர்களிடமிருந்து பிரஜைகள் வசம் ஒப்பிக்கப்படலாயிற்று. இம்முறை இன்னும் பூமி முழுவதும் பரவிவருவதை நாம் கண்டுவருகிறோம்.

மேலும், நாளுக்கு நாள் பொது ஜனங்களின் புத்தி நுட்பமும், அனுபவமும், ஆராய்ச்சித் திறமையும் எல்லாம் அதிகரித்து வருகின்றன. புதிய புதிய தத்துவங்களும் சாஸ்திரங்களும் கண்டுபிடிக்கப்பட்டு இவைகள் சில வருஷங்களில் பொது ஜனங்களிடம் சாமானிய அறிவு ஆவதையும் நாம் கண்டுவருகிறோம்.

இவைகள் போலவே, ஞானமும் ராஜ வம்சங்களிலிருந்து பிரஜைகள் வசம் பரவினதையும் நாம் அறிவோம். ஆகையால் பிரஜைகள் ஞான மார்க்கத்திற்கு உரியவரல்லரென்று இப்பொழுதும் நினைப்பது தவறாகும். நம் கொள்கையாவது, ஞானத்தை ஜனங்களுக்குப் பிரபலமாகப் போதித்துவந்தால், அக்ஞானம் நீங்கி எல்லோருமே சௌக்கியமாயும், சந்தோஷமாயும் வாழ்நாளைக் கழிப்பதுடன், சீக்கிரமே முக்தியையும் அடையலாம் என்பதே.

சென்ற மூவாயிர வருஷத்தின் உலகப் போக்கைக் கவனிப்போமாகில், இவ்வளவு காலமும் பொதுஜன சந்தோஷத்தின்பொருட்டு செய்திருப்பது மிகவும் சொல்பம். எவ்வளவோ புதிய விஷயங்கள் கண்டுபிடிக்கப்பட்டு விருத்தியடைந்தும், இவை யாவும் வாழ்க்கையை இன்பமாகச் செய்வதில் பிரயோஜனமற் றிருக்கின்றன. ஏனெனில் இன்பமும் சந்தோஷமும் நம் மனதைத் தழுவியே இருக்கின்றன. எவ்வளவு சௌகரியங்களும் ஐசுவரியமும் இருந்தாலும் வாழ்க்கையைச் சந்தோஷப் படுத்த இவை யாதொன்றாலும் முடியாது. ஞானத் தால்தான் மனதிற்குச் சந்தோஷம் ஏற்படும். ஞான மொன்றே மோக்ஷத்திற்கு உபாயமாகும். மற்ற மார்க் கங்கள் யாவும் ஞானத்திற்கு உபாயமாகலாம். இதை அறியாமல் இவ்வளவு காலம் ஜனங்கள் கஷ்டங்களுக் கும், விசனத்திற்கும் பாத்திரமானார்கள். ஆகையால் ஞானத்தை ஜனங்களுக்கு எடுத்துரைப்பது மிகவும் அவசியம்.

இதுவரையில் பக்தி, கர்ம, யோக மார்க்கங்களே ஜனங்களால் கடைப்பிடிக்கப்பட்டுவந்தன. இம்மார்க்கங் களால் பொது ஜனங்கள் அடைந்த பிரயோஜனம் ஒன்றுமில்லை. இங்குமங்கும் சில மகான்களைக் கண்டோ கேட்டோ இருக்கலாம். இதைத் தவிர ஜனக்கூட்டங் களுக்கு மொத்தமாக ஒரு நல்வழியைக் காட்டி அவர் களின் வாழ்க்கையை இன்பமுறச் செய்ய இம்மார்க்கங் களால் முடியவில்லை. ஏனெனில் இவைகளால் புத்திக் குத் தெளிவு ஏற்படவில்லை. ஆகையால்தான் மௌட் டிகமான பக்தியும், கருணையில்லாக் கர்மமும், இன்ப மற்ற யோக யாகப் பயிற்சியும் நாம் பார்க்க நேரிடுகின் றது. பார்த்தும், இவைகளில் நம்பிக்கை இழந்து திகைக் கிறோம். ஆகையால் இம்மார்க்கங்கள் சிலருக்குப் பயன் அளிப்பதாக இருந்தாலும், ஜனங்களின் தற்கால

நாகரிகத்திற்கும் பழக்க வழக்கங்களுக்கும் பயன்படா. இதை நாம் அனுபவத்தால் அறிவோம். ஞானத்தைப் புகட்டுவதால்தான் உலகம் ஒருவாறு சீரடையும்.

பொதுஜனங்கள் தற்சமயம் இருக்கும் தாழ்ந்த நிலைமைக்கு இன்னொரு காரணமும் உண்டு. அதாவது மதபேதம். இந்த மத சம்பந்தமான விஷயத்தில், கொள்கை வேறுபாடுகளினால் கடந்த இரண்டாயிரம் வருஷத்தில் ஜனங்களுக்கு ஏற்பட்டுவந்த கஷ்டங்கள் சொல்லி முடியாது. உலகத்தின் போக்கே இம்மதங்களை அனுசரித்து நடைபெற்றுவந்தது.

சத்யமென்பது எல்லோராலும் அங்கீகரிக்கப்பட வேண்டியது. அது எக்காலத்திலும் சத்யமாக இருக்க வேண்டும். எல்லோராலும் அங்கீகரிக்கப்படாதது அசத்யமென்பதில் சந்தேகமுண்டோ? ஆகையால் மத பேதங்கள் இருப்பதற்கு நியாயமே கிடையாது. பல பெயரிட்டுச் சொன்னாலும், எல்லோரும் ஒரு தெய்வத்தைத்தான் நம்புகிறார்கள். அப்படி இருந்தும் சண்டைச்சச்சரவுக்குக் காரணமென்ன?

இக் காரணத்தை "தெய்வம் என்பது என்ன? அதன் சொரூபம் எவ்வாறு" இவைகள் ஜனங்களுக்குச் சரியாக விளங்காமலிருப்பதில் காணவேண்டும். பல கொள்கை பேதங்கள் ஏற்பட்டதையும் இதிலேதான் காணவேண்டும். இத் தெய்வத்தைப்பற்றி மிகத் தெளிவாகவும் பூர்ணமாகவும் வசிஷ்டர் எடுத்துரைத்திருப்பதை இப்புஸ்தகத்தில் காணலாம்.

இதை இங்கே சுருக்கமாகச் சொல்வோமாகில், தெய்வமென்பது எல்லா வஸ்துக்களிலும் பிராணிகளிலும் வியாபித்திருப்பது. அதன் சொரூபம் அறிவே, இப் பிரபஞ்சம் அறிவு மயமாயிருக்கிறது. இவ்வறிவின் அசைவே பிரபஞ்சமாகிய தோற்றம். எல்லாம் தெய்வ

மாக இருப்பதால், அறிகிறதும் அறியப்படுவதும் அதுவே. ஆகையால் எல்லாம் ஒன்றில் முடிவு என்பதுதான் சத்யம்.

ஆனால் இத் தெய்வம் எல்லாவற்றிற்கும் சாக்ஷியாய் இருப்பதைத் தவிர வேறு விஷயங்களில் ஈடுபடுவதில்லை. ஆகையால் மனித யத்தனங்களிலும் எண்ணங்களிலும் தெய்வம் கலந்துகொள்வதில்லை. அவனவன் செயல்களுக்கு அவனவனே காரணம். பலனை அனுபவிப்பவனும் அவனே. தெய்வத்தால் ஒரு அணுக்கூட இதில் பிரயோஜனமில்லை. இதுதான் கர்மமென்று சொல்லப்படுவது. கர்மமென்பது மனிதச் செயல்களுக்கு மாத்திரமில்லாமல் பிரபஞ்சத்தின் போக்குக்கே காரணமாகும்,

இவ்விரண்டு விஷயங்கள்தான் எல்லோராலும் அறியப்படவேண்டியது. இது எல்லா சமயத்தாராலும் ஒப்புக்கொள்ளும்படிதான் இருக்கிறது. ஆகவே இக் கொள்கைகள் மாத்திரம் பிரபலமாய்ப் பரவிவந்தால் உலகமெல்லாம் ஒரு மதமாய் ஒற்றுமையுடன் வாழ நேரலாமென்பதற்குச் சந்தேகமில்லை. இந்த நோக்கத்தைக் கருதியும், யோக வாசிஷ்டம் மிகவும் மேன்மையான காவியமென்று கருதப்படும்.

இந் நூல் எக்காலத்தில் எழுதப்பட்டதென்பதைப் பற்றி ஒரு நிச்சயத்திற்கு வரும்படி இல்லை. ஐரோப்பிய சித்தாந்திகளும், சில இந்திய சித்தாந்திகளும் சுமார் 1200-1400 வருஷங்களுக்கு முன் இக் காவியம் ஏற்பட்டதாக எண்ணுகிறார்கள். ஆதிசங்கராசாரியாருக்குச் சற்று முன்னோ பின்னோ என்பர் பலர். இவர்களுடைய கொள்கைகளுக்கெல்லாம் ஆதாரமே கிடையாது. நமது அபிப்பிராயமாவது உபநிஷத்துகளுக்கு முன்னமே இக் காவியம் ஏற்பட்டிருக்க வேண்டுமென்றும், இவ் உபநிஷத்துகளுக்கும் இதுவே ஆதாரமென்றும். இதற்குக் காரணம் பின்வருமாறு :

(1) முக்கிய உபநிஷத்துகளில் சொல்லப்பட்ட தத்வ ஞானமெல்லாம் யோக வாசிஷ்டத்தில் அடங்கியிருப்பதுடன் இவைகள் இன்னும் விவரித்தும் தெளிவாகவும் சொல்லப்பட்டிருக்கின்றன.

(2) இவ்வுபநிஷத்துகள் யோக வாசிஷ்டத்திற்கு ஒரு படி அடுத்ததாகத்தான் கருதப்படும்; மேலாகச் சொல்லும்படி இல்லை.

(3) ஆகவே, ஒரு குருவினிடம் பெற்ற உபதேசங்களைப் பல சிஷ்யர்கள் தாங்கள் கிரஹித்த வரையில் ஒவ்வொரு உபநிஷத்தாக வெளியிட்டிருக்கின்றனர் என்பதே வாஸ்தவமென்று தோன்றுகிறது. இவ்வுபநிஷத்துகளின் சாரமாக யோக வாசிஷ்டத்தைச் சொல்லும்படி இல்லை. ஏனெனில் தத்துவங்கள் அனைத்தும் விஸ்தரித்தும், காரணங்களுடன் ஸ்தாபிக்கப்பட்டும் இருப்பதால்.

(4) உபநிஷத்துகளில் சொல்லப்பட்ட மகரிஷிகளும், அவைகளை ஏற்படுத்திய மகரிஷிகளும் குரு உபதேசம் அடைந்தவர்களாகவே பேசப்படுகிறார்கள். வசிஷ்டரோ உபதேசம் பெற்றதாக யாவராலும் சொல்லப்படவில்லை.

மேற்சொல்லிய காரணங்களால், வசிஷ்டரே வேதங்களின் ஞான பாகங்களாகிய உபநிஷத்துகளுக்கு மூலாதாரமென்பது நம் அபிப்பிராயம்.

இம்முக்கிய உபநிஷத்துகளைத் தவிர்த்து, பிற்காலத்தில் ஏற்பட்ட அநேக சிறிய உபநிஷத்துகளுக்கும் இதுவே மூலம். யோக வாசிஷ்டத்திலிருந்து அநேக சுலோகங்கள் ஒரு மாறுதலுமின்றி இவ்வுபநிஷத்துகளில் அடக்கப்பட்டுள்ளன. அவைகள் இங்கே குறிப்பிடப்பெற்றுள்ளன.

* (1) மகா உபநிஷத்; (2) அன்ன பூர்ணா; (3) அக்ஷி; (4) முக்திகா; (5) வராகே; (6) பிரகத் சன்யாஸ;

---

* This information is obtained from "Yoga Vashista" by Mr. B. L. Atreya.

(7) சாண்டில்ய; (8) யாக்ஞவல்க்ய; (9) யோக குண்டலீ; (10) பிங்கல; (11) மைத்ராயணீ; (12) ஜபால தர்சன; (13) அமிருத பிந்து; (14) யோக சிகா; (15) திருபுர தாபினீ; (16) தேஜோ பிந்து; (17) சௌபாக்ய லக்ஷ்மீ.

இவ்வுபநிஷத்துகளை ஏற்படுத்தினவர்களைத் தவிர்த்து, இதர மகான்களும் யோகவாசிஷ்டத்திற்குக் கடமைப்பட்டவர்களாக இருக்கிறார்கள். அதாவது கௌடபாதர், சங்கரர், ஸுரேஸ்வரர், பவபூதி, பர்த்ருஹரி, காளிதாசன், பாரவி எல்லோரும் விஷயத்தை மாத்திரம் கிரகித்ததோடன்றி, எல்லோரும் முழு சுலோகங்களை உபயோகித்திருக்கின்றார்கள்.

எல்லாவற்றிற்கும் மேலான ஆதாரம், யோக வாசிஷ்டத்தின் எளிய நடையும், எவ்வளவு மேலான தத்வத்தையும் மனதைக் கவரும்படி நேராகவும் ஸ்பஷ்டமாகவும் சொல்லும் ரீதியும். கடினமான வார்த்தைகளை உபயோகித்து, தர்க்கம் முதலிய சித்தாந்தங்களைப் பிரயோகித்து ஒருவருக்கும் புரியாமல் வாதிப்பதை ஒழித்து, தன் அனுபவத்தை அப்படியே நேராகச் சொல்லி இருப்பதும் நமது கொள்கைக்கு இடங்கொடுக்கும்.

பிறகு வசனங்களையும் நடையையும் கவனிக்கும் பொழுது, பாணினி வியாகரணம் ஏற்படுவதற்கு முன் ஏற்பட்ட காவியம் இது என்பதில் சந்தேகமில்லை.

இந்த வாசிஷ்ட அல்லது மகா ராமாயணம் வெறுங் காவியமாகச் சோதிக்கப்பட்டாலும், மற்றெல்லாக் காவியங்களைக் காட்டிலும், ராமாயணம், பாரதம் உள் பட, மேன்மையானதென்றே சொல்லப்படும். வசன நடையிலும், வார்த்தைகளின் கோர்வைகளிலும், வர்ணனைகளிலும், கற்பனுசக்தியிலும் இவ்வளவு அழகிய நூல் எந்த பாஷையிலும் கிடையாது என்று சொல்வதில் ஒரு தவறும் கிடையாது. இயற்கை அமைப்பிலுள்ள அறிவிலும், இவைகளைச் சமயோசிதமாக உபயோகிக்கும்

திறமையிலும், இயற்கை அழகை வர்ணிப்பதிலும் நிகரற்ற நூலாகும் இந்த மகாராமாயணம்.

இந் நூலின் இன்னொரு விசேஷமாவது எளிய நடை. ஆகையால் எல்லோராலும் சுலபமாய்ப் புரிந்துகொள்ள முடியும். வித்வான்களால் மாத்திரம் படிக்கும்படி இல்லை. ஆதலால், எல்லோரும் இதில் புகட்டப்படும் ஞானத்தை அறிந்துகொள்வதே கவியின் கருத்து என்பதில் சந்தேகமில்லை. மேலும் தத்துவங்களை விளக்க அநேகம் கதைகளை சொந்தமாகக் கற்பனை செய்து வெகு அழகாகவும் கவி சொல்லி இருக்கிறார். பெரிய சித்தாந்தங்களை இம்மாதிரிதான் சொல்லவேண்டியது கிரமம் என்பதே கவியின் கொள்கை.

சித்தாந்தங்களைப்பற்றிப் பேசும்பொழுது இதர சாஸ்திரங்களாகிய அத்வைத, சாங்கிய, நியாய, வைசேஷிகம் என்ற கொள்கைகளைப்பற்றியும், பௌத்த மதக் கொள்கையையும் கவனித்து அவைகளின் சில குறைகளையும் எடுத்துக் காட்டியிருக்கிறார். இதனால் இக்கொள்கைகளெல்லாம் வசிஷ்டர் காலத்திலேயே வழங்கி வந்தனவென்றும், பிற்காலத்தில் ஒவ்வொரு சாஸ்திரமாக அந்தந்தப் பெரியோரால் கிரமமாக ஏற்படுத்தபட்டதென்றும் நாம் அறியலாம். இந்த சாஸ்திரங்களெல்லாம் ஏற்பட்ட பிறகுதான் வசிஷ்ட ராமாயணம் எழுதப்பட்டதென்பதை நாம் அங்கீகரிக்கவில்லை. ஆனால் எக்காலத்தில் எழுதப்பட்ட போதிலும் இதற்குச் சமமான நூல் எந்தப் பாஷையிலும் கிடையாது. ஆகையால் இதை எல்லோரும் அறியவேண்டியது அவசியம்.

'இக்காவியத்தைப்பற்றி சிலரால் ஒரு குற்றம் எடுத்துக்காட்டப் பட்டுள்ளது. இதர சாஸ்திரங்களைப் போலும் வேறு பெரியோர்களால் செய்யப்பட்ட நூல்களைப் போலும் ஒரு கிரமமாகவும் ஒழுங்காகவும் இல்லாமல், சொன்ன தத்துவங்களே திரும்பத்திரும்பச்

சொல்லப்பட்டிருக்கிற தென்பதே. இது ஒருவாறு வாஸ் தவமாயினும், இந்நூல் கேள்வியும் விடையுமான பாவனை யில் எழுதியுள்ளதென்பதை நாம் கவனிக்கவேண்டும். சிஷ்யனுக்கு வேண்டிய குரு உபதேசங்களாக எழுதப் பட்டுள்ளதே தவிர, ஒரு கொள்கையை ஸ்தாபிக்கும் ரீதியில், பல அங்கங்களாய்ப் பிரித்து ஒவ்வொரு தத்துவத் தையும் விஸ்தாரமாக ஆராயும் கிரமத்தில் எழுதப்பட வில்லை. ஆகையால் சொன்ன தத்துவங்கள் அடிக்கடி ஞாபகப்படுத்தப்பட் டிருக்கின்றன. மேலும் கேட்ப வனின் சந்தேகங்கள் பலவாருக ஏற்படுகின்றன. இக்கேள்விகளுக்கு விடை அநேகமாய் ஒன்ருகவே இருக் கின்றது; இச்சமயங்களில் சொன்னவைகளைத் திரும்பிச் சொல்லாமலிருக்க முடியாது. பிறகு மிகவும் அபூர்வ மானதும் கடினமானதுமான தத்துவங்கள் ஒரு தடவை சொல்லி முடித்துவிட்டால் புத்திக்குத் தெளிவுபடுவது மிகவும் கடினம். ஒரே விஷயம் பல சந்தர்ப்பங்களில், தகுந்தவாறு மறுபடியும் விளக்கப்பட்டால்தான் புத்திக்குத் தெளிவுபடும். இக்காவியத்தின் கருத்து ஞானத்தைப் பரிபூரணமாக போதிப்பதாக இருப்பதால் மேற்சொன்னது ஒரு பிழையாகாது.

இங்கே, தத்துவங்களைப் போதிக்கும் முறை மிகவும் சிலாக்கியமானதென்றெ கருதப்படும். பிரத்யக்ஷப் பிரமாணத்திற்கு ஒவ்வாதது ஒன்றும் அங்கீகரிக்கப்பட வில்லை. நம் அனுபவத்திற்கு விரோதமானதையும் இந்திரியங்களுக்குப் புலப்படாதவைகளையும் ஒப்புக் கொள்வதில்லை. முதலில் தத்வங்களைச் சுருக்கிச்சொல்லி, பிறகு விஸ்தரித்துரைத்துப் பிரமாணங்களுக்கு ஒத்தும் விரோதமாயும் இருப்பதை எடுத்துக்காட்டி, இவை மனதில் பதியும்படி ஒரு கதையைச் சொல்வதுமே அங்கீகரிக்கப்பட்ட முறையாகும். வேறு நூல்களையாவது சாஸ்திரங்களையாவது ஆதாரமாகக்கொள்ளவில்லை.

இவைகளைப் பிரமாணமாகவும் மதிக்கவில்லை. சத்யத்தை ஸ்தாபிக்க பிரத்யக்ஷப் பிரமாணத்தைத் தவிர்த்து வேறு பிரமாணங்களை வசிஷ்டர் ஒப்புக்கொள்ளவில்லை. மேற்சொல்லியவைகளை இங்கே குறிப்பிட்டிருப்பது அவைகளின் குறையை எடுத்துக்காட்டும் பொருட்டே ஒழிய, ஆதாரமாக இல்லை. தார்க்கிகர்களும் இவர் கையில் அகப்படாமல் போகவில்லை.

இவ்வளவு சிலாக்கியமாகக் காவியத்தை எழுதியும் மற்றவர்கள்போல் மூர்க்கமான நம்பிக்கையை வசிஷ்டர் எதிர்பார்ப்பதில்லை. இங்கே சொல்லப்படும் மார்க்கங்களையே கடைப்பிடிக்க வேண்டுமென்று கட்டாயப் படுத்துவதில்லை. வேறெந்த மகானும் இவ்வளவு அகண்ட நோக்கத்தையுடைவராகத் தென்படவில்லை.

இன்னொரு விஷயம் கவனிக்கத்தக்கது. சாஸ்திரங்களை ஏற்படுத்தினவராவது அல்லது இவைகளைக் கரை கண்டவராவது எவரும் வசிஷ்டரைப்போன்ற புத்தி நுட்பம், தெளிவு, ஆராய்ச்சி அடைந்தவராக இல்லை. இவர்களெல்லாம் ஏதாவது சில பிரபஞ்ச விஷயங்களில் ஞானக்குறைவைக் காண்பிக்காமலில்லை. வசிஷ்டரிடமோ இவ்விதமான குறைகள் யாதுமில்லை.

அவரால் சொல்லப்பட்ட விஷயங்களெல்லாம் தற்காலத்து சாஸ்திரங்களை யொத்தே இருக்கின்றன. அவைகளில் சிலதைக் கூறுவோமாகில் :—

(1) தெய்வத்தின் சொரூபம் என்ன? (2) கூடு விட்டுக் கூடுபாயும் தத்துவமாவது எப்படி? (3) பிரளயம் மகாப் பிரளயம் எவ்விதம் சம்பவிக்கின்றன? (4) மனிதப்பிறவி எப்படி ஏற்பட்டது? (5) நியதியின் தத்துவம் என்ன? (6) மனம், புத்தி, சித், அகங்காரம், கர்மம், வாசனை இவைகளின் தத்துவமென்ன? (7) கர்மங்களின் நடை எப்படி? (8) சுதந்தரம், வினைப்பயன்

இவைகளின் சொரூபம் (9) ஜகத்தின் உற்பத்தி எப்படி? (10) தேசகாலங்களின் சொரூபமும், அவைகளால் பந்தம் ஏற்படும் முறையும்.

இவைகளும், இன்னும் அநேக தத்துவங்களும் சம்சார நடத்தையை ஓட்டியவைகளும், லௌகிக விஷயங்களும், சித்தாந்தங்களும் வெகு மேன்மையாகவும் தெளிவாகவும் ஆராயப்பட்டுச் சொல்லப்பட்டிருக்கின்றன.

இந்த வசிஷ்ட ராமாயணத்தில் இன்னொரு விஷயம் முக்யமாக கவனிக்கத்தக்கது, அதாவது மனது என்பதைப் பற்றி வசிஷ்டர் வெகுவாய்ச் சொல்லி இருப்பது. மனதே நம் கிரியை, நடத்தை, ஒழுக்கம் எல்லாவற்றிற்கும் மூலகாரணம். ஆரம்பத்தில் சொல்லியபடி மனந்தான் மனிதனாகும். இப்படியிருந்தும் இம்மனதின் சொரூபத்தைப்பற்றி இக்காலம் வரையில் அறிந்தவர்கள் வெகு சொல்பம். அதைப்பற்றி விளங்கச்சொல்லி இருப்பவர் இன்னும் சொல்பம். வசிஷ்டர் ஒருவரே இம்மனதின் சொரூபத்தைப் பரிபூர்ணமாக ஆராய்ச்சி செய்து, வெகுத் தெளிவாகவும், மிக விஸ்தாரமாகவும், பற்பல திருஷ்டாந்தங்களும் கதைகளும் சேர்த்தும் பலவாறாக எடுத்துரைத்திருக்கிறார். மனம் வியவகரிப்பதால் ஜகத் தோற்றம் ஏற்படுகிறது. மனம் சாந்தியடைந்தால் ஆத்ம லாபம் சித்திக்கிறது, ஆகையால் மனதின் போக்கை அறிவதே ஞான மார்க்கமாகும். இந்நூலில்தான் இது தெளிவாக விளங்கும். சாதாரண ஜனங்களும் இதை அறிந்துகொள்ளலாம்.

சமீபகாலத்தில் மேல்நாட்டு சாஸ்திரிகள் இம் மனதைப்பற்றி வெகு ஊக்கத்துடன் ஆராய்ச்சி செய்துவருகிறார்கள். இவ்வாராய்ச்சிகளின் சாரமாக அநேக புஸ்தகங்களும் எழுதப்பட்டுள்ளன. ஆனால் இவைகளை ஆராய்ந்து பார்த்தால், மனதின் வாஸ்தவமான

சொரூபத்தை இவர்கள் அறிந்ததாகப் புலப்படவில்லை. எல்லாம் பேத்தலாகத்தான் தோன்றுகின்றன. இச்சாஸ்திரத்தில் மிகப் பிரபலமாக வழங்கிவரும் Freud, Adler, Jung கூட வெகு சொல்ப அறிவை அடைந்தவர்களாகத் தான் தோன்றுகிறார்கள். வாஸ்தவமான தத்துவங்களும், அம்சங்களும் இவர்கள் புத்திக்குப் புலப்படவில்லை. இந்த அறிவின் குறைபாட்டால்தான் சில நூதனமான சாஸ்திரங்களும் வெளிவரக் லாயின ~~காரணமாயிற்று~~. அதாவது, Hypnotism, Mesmerism, Telepathy, Clairvoyance Clairaudience, Spirit-World. மனதின் தத்துவத்தை அறியாத குறையே இவைகளும் சாஸ்திரங்களாக வெளிக் கிளம்பின. மனதை அறிய வசிஷ்டரிடம் செல்ல வேண்டும்.

இன்னொரு விஷயமும் கவனிக்கத்தக்கது; ஞானத்திற்கு மூல ஆராய்ச்சி 'நான் யார்" என்னும் விசாரணை யென்பது வசிஷ்டரால் எடுத்துச் சொல்லப்பட்டது. அவருக்குப் பின் சமீபகாலத்தில் ஸ்ரீ ரமண மகரிஷி ஒருவரால் தான் இவ்வாராய்ச்சி மூலக்கருவியாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விருவர்களைத் தவிர்த்து வேறொருவரும் இதை விசேஷமாக எடுத்துச் சொன்னதாக நாம் அறியோம்.

மேற்சொல்லியதை வேறுவிதமாகவும் பலவித தத்துவங்களாக, ஞானோதயத்திற்குச் சாதனமாகப் பெரியோர்களால் சொல்லப்பட்டுள்ளன. இவைகளில் எது உண்மை, எது உண்மையல்ல என்பதில் அபிப்பிராய பேதமுண்டு. இத் தத்துவங்களாவன:—

(1) ஆத்மாதான் பிரபஞ்சம். பிரபஞ்சமே ஆத்மா. இவைகளை வெவ்வேறாகக் கருதுவதுதான் அக்ஞானத்திற்கும் பந்தத்திற்கும் காரணம் என்பது முதல் தத்துவம்.

(2) பிரபஞ்சத்தின் ஒவ்வொரு அணுவிலும் ஆத்மா வியாபித்து நிற்கிறது என்பது இரண்டாவது தத்துவம்.

(3) நான் ஆத்மா, எல்லாமுமே ஆத்மா என்பது மூன்றாவது தத்துவம்.

(4) நான், ஜகத் எல்லாம் சூன்யம் என்பது நான்காவது நோக்கம்.

இந்த நான்குவிதக் கொள்கைகளில் எதை அனுசரித்தாலும் விடுதலைக்கு முறையாகும். இவைகளெல்லாம் சமமான நோக்கங்களே; பேதமொன்றுமில்லை. இவைகளின் கருத்து மனதிற்கு ஒரு நிச்சயத்தைக் காட்டி, வித்தியாசங்களையும் அவைகளால் ஏற்படும் சஞ்சலத்தையும் ஒழித்து மனதை ஒருமுகப்படுத்துவதே. பாவனை அல்லது சங்கல்பத்தால்தான் மனது தன்னை விஸ்தரித்துக் கொண்டு அவைகளில் ஈடுபட்டுத் திண்டாடுகிறது. இதிலிருந்து விடுபட்டுக்கொள்ள பாவத்தின் எதிரடியான அபாவம் அல்லது அசங்கல்பமே முறை. இந்த அசங்கல்பத்தை சாதனம் செய்வதற்கு மேற்சொன்ன தத்துவங்களில் எதையனுசரித்தாலும் உபாயமாகும். இவைகளில் எது உண்மையென்ற கேள்விக்கே இடமில்லை. அப்படி உண்மையல்லாமல் இருந்தபோதிலும் பொய்யிலே பிறந்து வளர்ந்து பொய்யாகவே இருக்கும் மனதை இன்னொரு பொய்யால் விடுவிப்பதா யிருந்தால் மறு கேள்வி ஏது?

இந்த யோக வாசிஷ்டத்தை வடமொழியிலிருந்து தமிழில் எழுதுவதில் எனக்கு மிகவும் உதவியாக இருந்தவர் ஸ்ரீமான் வி. ஸ்ரீனிவாச சாஸ்திரிகள் (சம்ஸ்கிருத பண்டிட், தேசீய பெண்கள் உயர்நிலைப் பள்ளி, திருவல்லிக்கேணி). அவருடைய பெரு முயற்சியும் தீவிர உழைப்புமே இந்த நூல் மொழிபெயர்த்து முடிவதற்குக் காரணமாக இருந்தன. மேலும் எனக்கு இந்நூலில் ஊக்கத்தை அதிகரித்ததற்கு அவருடைய வாக்கு சாதுர்யமும் சொல் அழகும், அதாவது மொழிபெயர்ப்பதில், ஒருவாறு காரணமாகும்.

பிறகு இந்த நூலை எழுதுகையில் எனக்குப் பல வாறாக உதவி புரிந்து பிழைகளையும் திருத்தியவர் ஸ்ரீ பி. ஹனுமந்த ராவ் அவர்.

மேலும் பலவிடங்களில் சொல் நடைகளையும் பதங்களையும் வேறுபடுத்தி உதவி புரிந்ததற்கு ஸ்ரீமதி சகுந்தலா லக்ஷ்மீரதனுக்குக் கடமைப்பட்டவனாவேன். சிறிய வயதில் அவர் இந்நூலை வெகு ஊக்கத்துடன் வாசித்து அனுபவித்தது ஆச்சரியப்படத்தக்கதே.

கடைசியாக, இப் புத்தகத்தை அழகிய முறையிலே அச்சிட்டு வெளியாக்கிய அல்லயன்ஸ் கம்பெனியார் அவர்களுக்கும் நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன்.

எல்லோருக்கும் என் வந்தனத்தை இங்கு தெரிவித்துக்கொள்கிறேன்.

எஸ். வி. கணபதி

---

உ

# யோக வாசிஷ்டம்

# 1

## வைராக்கியப் பிரகரணம்

### 1. சுதீக்ஷ்ணன் சந்தேகம்

சுதீக்ஷ்ணன் என்னும் ஒரு பிராம்மணனுக்குத் தத்துவ விசாரணையில் ஒரு சமயம் ஒரு சந்தேகம் தோன்றிற்று. அதை நிவர்த்தி செய்துகொள்ளும் பொருட்டு அவன் அகஸ்தியர் என்னும் ரிஷியின் ஆசிரமத்தை அடைந்து அவரைப் பணிந்து பின் வருமாறு கேட்டான்: "மகர்ஷே, மோக்ஷத்தை அடைய, சாதனம் செய்யவேண்டியது கர்மமா அல்லது ஞானமா?"

ரிஷி இக்கேள்விக்கு, "பறவைகள் எவ்வாறு தம்முடைய இரண்டு இறக்கைகளையும் உபயோகித்துத் தங்களைப் பாதுகாத்துக் கொள்ளுகின்றனவோ, அதேமாதிரி மோக்ஷ சாதனத்திற்குக் கர்மம், ஞானம் இரண்டையும் கடைப்பிடிக்க வேண்டும். இதற்கு உதாரணமாக ஒரு கதை சொல்லுகிறேன், கேள்" என்று சொன்னார்.

## 2. காருண்யன் வரலாறு

"அக்னிவேசியனென்ற ஒரு ரிஷியின் புத்திரனான காருண்யனென்ற இளைஞன் உரிய காலத்தில் கல்வி பயிலும்பொருட்டு, தகப்பனாரால் குருகுலத்திற்கு அனுப்பப்பட்டு, காலக்கிரமத்தில் எல்லாம் கற்றுக் கொண்டு வீடு திரும்பினான். கற்ற வித்தையின் பயனாக எல்லாக் கர்மங்களையும் விட்டுவிட்டு வீண் காலம் கழிக்கத் தொடங்கினான். இதன் காரணம் தகப்பனுக்கு விளங்கவில்லை. ஆகவே ஒரு நாள் பிள்ளையைக் கூப்பிட்டு, "மகனே, கர்மங்களையெல்லாம் விட்டதற்குக் காரணம் யாதோ?" என்று கேட்டார். புத்திரன், "பிதா, நான் ஸ்மிருதி, சுருதி இவைகளை ஆராய்ச்சி செய்ததில், கர்மங்களையே சாகும் பரியந்தம் அநுசரிக்கவேண்டுமெனச் சில இடத்திலும், கர்மத்தையெல்லாம் ஒழித்து ஞானமார்க்கத்தைத் தழுவினால்தான் மோக்ஷம் சித்திக்கும் என்று வேறு சில இடத்திலும், (ஆகவே இரண்டு வழிகளையும்) உபதேசித்திருப்பதைக் கண்டேன். இவைகளில் எதைக் கடைப்பிடிப்பதென்று நிச்சயிக்க முடியாமல் கர்மங்களை விட்டுவிடத் தொடங்கினேன்" என்று பதில் சொன்னான். விபரீத புத்தியால் பீடிக்கப்பட்ட மகனின் முன்னேற்றத்தைக் கருதிய தகப்பனார், தாம் ஒரு சிறிய கதை சொல்வதாகவும், அதைக் கேட்டுத் தாத்பர்யத்தை மனத்தில் வாங்கிக்கொண்டு பிறகு தன் இஷ்டம்போல் நடந்துகொள்ளலாமென்றும் சொல்லி விட்டுப் பின்வரும் கதையை உரைத்தார்.

## 3. சுருசி, தேவதூதன் வரலாறு

சுருசி என்னும் அப்ஸர ஸ்திரீ ஒருத்தி ஹிமோத் கிரிச் சாரலில் ஒரு நாள் உல்லாஸமாகக் காலம் கழித்து

வருகையில், ஒரு தேவதூதன் ஆகாயமார்க்கமாகப் போவதைக் கண்டு, அவன் அம்மார்க்கமாய்ப் போவதன் காரணம் அறியும் ஆவலால், தன்னைப் பார்க்கும்படி அவனுக்கு அறிக்கை கொடுத்துக் கீழே வரும்படியும் அழைத்தாள். வந்ததும் வணங்கி, "இந்த மார்க்கம் செல்வது அபூர்வமாகையால், இன்று போகும் காரணம் என்னவோ?" என்று கேட்டாள். இவள் வேண்டுகோளுக்கு இணங்கித் தேவதூதன் காரணத்தைச் சொன்னான்.

4. அரிஷ்டநேமியின் வரலாறு

அரிஷ்டநேமி என்னும் ஒரு ராஜரிஷி, ராஜ்ய பாரம் சலித்துப்போய் மோக்ஷோபாயத்தைத் தேடும் பொருட்டு, ராஜ்யங்களைத் தம் பிள்ளை வசம் ஒப்பித்து, தாம் கந்தமாதனம் என்னும் மலைச்சாரிலிருந்த ஒரு காட்டில் கோரமான தபஸ் செய்யத் தொடங்கினார். அவரைக் கண்டு வரும்படி தேவேந்திரனால் நான் அனுப்பப்பட்டேன். இப்பொழுது அவ்விடமிருந்து திரும்பிச் செல்லுகிறேன்" என்றான் தேவதூதன்.

இதைக் கேட்ட அப்ஸரஸ் போனதன் கருத்தைச் சொல்லும்படி வேண்டிக்கொண்டாள்.

தேவதூதன் - ராஜரிஷியின் தவ மகிமையைக் கண்டு களித்த தேவேந்திரன் அவருடைய பிரயத்னங்களுக்குப் பலன் அளிக்கும்பொருட்டு என்னை இந்திர விமானத்தை எடுத்துக்கொண்டு, எல்லா வைபவங்களையும் அமைத்து, மேள தாளங்களும், அப்ஸரஸ் கந்தர்வ கின்னரர்களும் கூடி ராஜரிஷியைச் சொர்க்க போகம் அநுபவிக்கச் செய்யும்பொருட்டு அமராவதிக்கு அழைத்துவரச் சொன்னான். கட்டளைப்படி

ராஜரிஷியினிடம் சென்று இந்திரனுடைய விருப்பத்தைத் தெரிவித்தேன். அதற்கு அவர் சொர்க்க போகங்களால் தாம் அடைவது என்னவென்று கேட்டார். "மனிதர்கள் தாங்கள் செய்த புண்ணிய கர்மங்களுக்கு ஏற்றபடி சொர்க்கபோகம் அநுபவிக்கிறார்கள்; அநுபவம் முடிந்ததும் மறுபடியும் பூமியில் ஜனனமாகிறார்கள்" என்று நான் விடையளித்தேன். இதைக் கேட்ட ராஜரிஷி இவ்வித அநித்யமான போகங்களில் தமக்கு இச்சை இல்லையென்றும் ஆகையால் நான் இந்திரனிடம் திரும்பிச் செல்லலாமென்றும் சொல்லிவிட்டார். தேவேந்திரனிடம் போய் நான் நடந்ததைச் சொல்ல, அவன் ராஜரிஷியின் மேலான நோக்கத்தை ஊகித்து அவருக்குச் சரியான ஞான மார்க்கத்தைக் காட்டும்பொருட்டு வால்மீகி ரிஷியிடம் அழைத்துச்செல்ல விரும்பி என்னை மீண்டும் ரிஷியிடம் அனுப்பினான். கட்டளைப்படி ரிஷியை வால்மீகி முனிவரிடம் அழைத்துச் சென்றேன். அவரைக் கண்டு அரிஷ்டநேமி வணங்கி, "இப்பிரபஞ்சத்தில் அறியப்பட வேண்டியதையும், அறிவுக்குக் காரணமாயிருப்பதையும்பற்றித் தமக்குத் தெளிவாக உபதேசம் செய்யும்படி வேண்டிக்கொண்டார்.

## 5. வால்மீகியின் வசனம்

ரிஷியின் வேண்டுகோளை நிறைவேற்ற வால்மீகியானவர் ராமாயணத்தைப்பற்றிச் சொல்லி, அதில் நேர்ந்த வசிஷ்ட - ராம ஸம்வாதத்தைக் கேட்டு அறிந்துகொண்டால் எல்லா ஞானமும் சித்திக்குமென்று சொன்னார். இதைக் கேட்ட ராஜரிஷி, ராமன் யாரென்றும், எவ்வாறானவன், அவன் பந்தப்

பட்டவனு அல்லது முக்தனு என்னும் விவரமெல்லாம் தமக்குச் சொல்லும்படியும் வேண்டிக்கொண்டார். ராமன் விஷ்ணுவின் அவதாரம் என்றும், தனக்கு ஏற்பட்ட சில சாபங்களின் காரணமாக இந்த ராமாவதாரம் எடுத்ததாகவும் சொன்னுர். "சச்சிதானந்த சொரூபியாயுள்ள நாராயணனுக்கும் சாபம் ஏற்படுவது முறையா?" என்றும், ஏற்பட்ட விவரத்தைத் தமக்கும் தெரிவிக்கும்படியும் ராஜரிஷி வேண்டிக்கொண்டார். வால்மீகி பதிலுரைத்ததாவது:

6. ராமாவதாரத்தின் காரணம்

வால்மீகி – விஷ்ணுவானவர் ஒரு சமயம் பிரம்மாவைப் பார்க்க ஸத்யலோகம் போயிருந்தபோது, ஸத்யலோக வாசிகள் எல்லோராலும் பூஜிக்கப்பட்டு, ஆனுல் நிஷ்காமியாகிய ஸனத்குமாரரால் மட்டும் பூஜிக்கப்படாமலிருந்ததைக் கவனித்தார்; அவருக்கு அவ்வளவு கர்வமா என விஷ்ணு சபிக்கலானுர். தபோ சக்தியில் கொஞ்சமும் குறையாமலிருந்த ஸனத்குமாரரும், இதற்குப் பிரதியாய்க் கொஞ்சகாலம் அக்ஞானியாய் இருக்கக்கடவது என்று விஷ்ணுவைச் சபித்துவிட்டார். மற்றொரு சந்தர்ப்பத்தில் பிருகு என்னும் ரிஷியைப் பத்னியிடமிருந்து பிரித்துவைத்ததால் அந்த ரிஷியும் தமக்கு ஏற்பட்ட சம்பவம் விஷ்ணுவுக்கும் நேரும்படி சபித்தார். தவிர, பிருந்தை என்பவளாலும், தேவதத்தன் என்பவனுலும் சாபத்திற்குப் பாத்திரமாகி, இந்தச் சாபங்களின் சாக்காக இவைகளைத் தீர்த்துக்கொள்ளும்படி விஷ்ணு மானிட அவதாரத்தை எடுத்தார். திரிலோக அதிபதியாக இருந்தாலும் தாம் செய்த கர்மங்களின் பலனை அநுபவிக்

காமல் எவனும் தப்ப முடியாது. இதுவே நியதி." இவ்வாறு கூறி வால்மீகி மகரிஷி மேலும் சொல்லத் தொடங்கினார்.

## 7. மகாராமாயணம் ஏற்பட்ட முறை

வால்மீகி — மேற்கூறிய இந்த ராமாயணத்தை எவன் ஒருவன் ஊக்கத்துடன் கேட்டுக் கதாரூபமாய்ச் சொல்லிய தத்துவங்களை விவேகத்தால் அறிந்து கொள்ளுகிறானோ அவனுக்கு மறுபடியும் பிறப்பு என்பதே கிடையாது. பரத்வாஜ முனிவர் என்னை ஒரு சமயம் குருவாக அடைந்தபொழுது அவருக்கு இந்த ராமாயணம் சொல்லப்பட்டது. அதை அவர் அடிக்கடி மனத்தில் சிந்தனை செய்த காரணமாய் ஞான திருஷ்டி ஏற்பட்டு ராமன் ஜீவன்முக்தனாக எப்படி நடந்துகொண்டான், வாழ்நாளை எவ்விதம் கழித்தான் என்பவைகளை விவரமாக எடுத்துச் சொன்னால் மானிடர்களுக்குக் கடைத்தேறும் வழி ஏற்படும் என்று என்னிடம் சொன்னார். இதை அவர் என்னிடம் சொன்ன மாத்திரத்தில் எனக்கும் ஞான திருஷ்டி ஏற்பட்டது. பிறகு பரத்வாஜரால் மறுபடியும் ஞாபகம் செய்யப்பட்டு, அவருக்கு "வசிஷ்ட - ராம ஸம்வாதம்" என்பதைப்பற்றிச் சொன்னேன். அதை இப்பொழுது உனக்கு நான் விவரமாய்ச் சொல்லுகிறேன்.

## 8. ராமனுடைய வைராக்யம்

ராமன் இளைய வயது தாண்டியதும், தேச யாத்திரை செய்ய ஆவலுற்றுத் தன்னை வெளியே அனுப்பும்படி தகப்பனாரை வேண்டிக்கொண்டான். இந்த வேண்டுகோளுக்கு இணங்கித் தசரதன் தகுந்த ஏற்பாடுகளெல்லாம் செய்து ராமனைத் தேசயாத்திரை

செய்ய அனுப்பினுன். ராமன் பல தேசங்களைச் சுற்றிப் பார்த்து, காடு, மலை, வனம், நதிகள் எல்லாம் கடந்து பல க்ஷேத்திரங்களைக் கண்டு, பல ஜனங்களையும் அவர் களின் பழக்கவழக்கங்களையும் அறிந்து, கொஞ்சகாலம் கழிந்தபின் தன் ராஜ்யத்திற்குத் திரும்பினுன்.

தேச யாத்திரைக்குப் பிறகு ராமனு டைய மனநிலையே வேருக இருந்தது. வயது பதினுறு நிரம்பாமலிருந்தும், அந்தப் பிராயத்திற்கேற்ற உலக நோக்கமும் ஈடுபாடுமில்லாமல் முதிர்ந்தவர்க்கேற்ற மனநிலையுடையவனுக இருந்தான். ஒரு பொருளி லாவது அல்லது யாதொரு காரியத்திலாவது ஊக்கமோ சந்தோஷமோ இல்லாமலும், வாழ்க்கையிலேயே ஒரு விதப் பற்றுமில்லாமலும் இருந்தான். சாப்பாடு, தூக்கம் எல்லாம் குறைந்து, நாளுக்கு நாள் உடம்பு மெலிந்து தேஜஸ் குன்றி க்ஷீணகதி அடைந்து நின்ருன். இளவரசன் இவ்வாறிருந்ததால் தாய்தகப்பன்மார்கள், சகோதரர், பந்துக்கள், மித்திரர்கள், வேலையாட்கள் முதலிய எல்லோருடைய நிலைமையும் நாளடைவில் சீர்கெட்டது. அரசன் என்ன செய்வதென்று தெரியாம லிருந்தான்.

## 9. விசுவாமித்திரர் வரவும், வேண்டுகோளும்

இப்படி இருக்கும் காலத்தில் ஒரு நாள் ராஜ சபை நடைபெறும்பொழுது காவலாளிகள் வந்து ஒரு விஷயம் தெரிவித்தார்கள். விசுவாமித்திர ரிஷி வந்திருப்பதாகவும், சக்கரவர்த்தியைக் காண விரும்பு வதாகவும் கூறினர். இம் மகா புருஷன் வந்ததைப் பற்றித் தசரதன் சந்தோஷித்து, நல்வரவேற்று, வேண்டிய உபசாரங்களையும் செய்து அவர் தன்னைத்

தேடிவந்த காரணத்தைத் தெரிவிக்க வேண்டிக் கொண்டான். தனக்கு இவ்வரவினால் ஏற்பட்ட பாக்யத்தின் நிமித்தமாய் அவர் எதைக் கேட்டாலும் தருவதாகவும் வாக்களித்தான். விசுவாமித்திரர் தசரதனை ஆசீர்வதித்துப் பிறகு தாம் ஒரு பெரிய தவம் செய்ய உத்தேசித்திருப்பதாகவும் அது பத்து நாட்கள் அல்லும் பகலும் நடக்கவேண்டி இருப்பதால் அதற்கு ராக்ஷஸர்களால் யாதோர் இடையூறும் ஏற்படாமலிருக்க ராமனுடைய உதவியை நாடி வந்திருப்பதாகவும் தெரிவித்தார். தாமே சிட்சிப்பதற்கு மேற்கொண்ட யாகமே தடையாய் நிற்பதாகவும் தெரிவித்தார். ராக்ஷஸர்களின் பலம் தற்சமயம் அதிகரித்திருப்பதாலும், அவர்கள் மாயப்போர் புரிவதாலும், இவர்களைச் சிட்சித்துத் தவத்தைக் காப்பாற்ற ராமனே ஏற்றவனென்றும் சொன்னார்.

## 10. தசரதனின் மனக்கலக்கம்

இதைக் கேள்வியுற்றுத் தசரதன் ஸ்தம்பித்து நின்றான். ராமனை அனுப்பிவிட்டுத் தான் எப்படி ஜீவித்திருப்பது என்று எண்ணினான். ஆனால் மகரிஷியின் வேண்டுகோளைத் தான் நடத்திக் கொடுக்கக் கடமைப்பட்டவன். கடமையை நிறைவேற்றினால், தான் உயிர் இழப்பது நிச்சயம். ஆனாலோ ரிஷியின் கோபத்திற்கு ஆளாவதும் சரியல்ல. இவ்வாறு மனம் கலங்கி, ஆயினும் அந்தச் சமயத்திற்குத் தகுந்தவாறு நிதானித்தும் யோசித்தும் ரிஷியின் மனம் நோவாமலிருக்கும் வண்ணம் பின்வருமாறு சொல்லலுற்றான் :

"மகர்ஷே, வெகு காலம் சந்ததியில்லாமல் அந்திய காலத்தில் புத்திரபாக்யம் அடைந்ததும், எனக்கு

ராமனிடமுள்ள வாஞ்சையும் நீர் அறிந்ததே. ~~பிறகு~~ ராமனுக்கு இன்னும் பால்ய வயது. அவன் செல்வத்தில் பிறந்துசெல்வத்திலே வளர்ந்து அந்தப்புரத்தைத் தவிர்த்து வேறொன்றும் அறியாதவனாக இருக்கிறான். ராமன் சண்டை செய்வதில் அநுபவமில்லாதவன். எதிரியின் பலத்தை அறியும் சக்தியும், அதற்கேற்றபடி போர் புரியும் சாதுர்யமும் இந்தப் பிராயத்தில் எங்கிருந்து வரும்? மேலும் தாங்கள் சொன்ன ராக்ஷசர்களை எதிர்த்துச் சண்டை செய்ய ராமன் உரியவனாவானா? ஆனால் உங்கள் கட்டளையை நிறைவேற்ற நானே என் படைகள் அனைத்தையும் திரட்டிவந்து உங்கள் தவத்தைப் பூர்த்தி செய்விக்கிறேன். என் படைகள் அநேக சண்டைகள் செய்து நல்ல பயிற்சி அடைந்தும் வெற்றி பெற்றும் இருக்கின்றன. இச்சேனைகளே தேவேந்திரன் சகாயத்திற்கும் பல தடவை சென்றிருக்கின்றன. இவற்றின் உதவியால் ராக்ஷஸர்களை நிர்மூலமாக்கி விடலாம். ஆகையால் தாங்கள் ராமனை அழைத்துப் போகும் எண்ணத்தை விட்டு என் உதவியை ஏற்றுக் கொள்ள வேண்டும். ராமன் இந்தக் காரியத்தில் பிரவேசிக்க நேர்ந்தால் நான் உயிருடன் இருப்பது அசாத்தியமே.”

## 11. விசுவாமித்திரரின் கோபம்

இவ்வாறு கொடுத்த வாக்கைத் தசரதன் மீறிச் சொன்னதைக் கேட்டு விசுவாமித்திரர் கோபங் கொண்டு, ஆனால் அதை அடக்கிக்கொண்டு, சக்கரவர்த்தி தாம் எதைக் கேட்டாலும் கொடுப்பதாகவும், எந்தக் கொடைக்கும் தாம் தகுந்தவரென்றும் சொல்லி விட்டு, இப்பொழுது பின்வாங்குவது சரியல்லவென்று

சொன்னார். ஆயினும் அரசனை ஆசீர்வதித்துத் திரும்பிச் செல்ல விடை கேட்டுக்கொண்டார்.

### 12. தசரதனுக்கு வசிஷ்டர் போதனை

நடந்த சம்பவங்களை யெல்லாம் அங்கிருந்தவாறு கவனித்து வந்த வசிஷ்டர், விசுவாமித்திரரின் அருமைக்குத் தசரதன் பாத்திரமாவதுசரியல்லவென்று தசரதனை நோக்கிச் சொன்னார். "தசரதா, நீ செய்வது இக்ஷ்வாகு குலத்திற்கே அவமானமாய் நேரிடும். நீயே தர்ம நெறி தவறினால் பிரஜைகள் அதனை எப்படி அநுசரிப்பார்கள்? விசுவாமித்திரருடைய யோக்யதைகளைப்பற்றி நீ மறந்தாய் போலும். அவர் சகலமும் அறிந்தவர். அவர் ராமனுடைய உதவியே தேவை என்றதில் ஒரு மர்மம் இருக்க வேண்டும். மேலும் மூன்று லோகங்களையும் ஜயித்த விசுவாமித்திரரே ராமனை மேற்பார்வையிட்டு வருகையில் உனக்கு ராமனைப்பற்றிய கவலை ஏன்? ராமனைப் பறிகொடுப்பதாக இருந்தால் அவர் அவனுடைய உதவியைக் கேட்டிருப்பாரா?" என்று சொல்லி முடித்தார்.

### 13. ராமன் சபைக்கு வருதல்

உடனே தசரதன் முனிவர்களின் வாக்கைத் தட்டுவது சரியல்ல என்று அறிந்து, மனத்தைத் தைரியம் செய்துகொண்டு, ராமனை அழைத்துவரக் கட்டளை இட்டான். சிப்பந்திகளில் ஒருவன் உடனே ராமனை அழைத்துவரச் செல்ல, வேறு சிலர் தசரதனுக்கு ராமன் தற்சமயம் இருக்கும் நிலைமையையும் அவனுடைய தேகஸ்திதியைப்பற்றியும் தெரிவித்தனர். அவனைச் சீர்திருத்த மகாபுருஷன் ஒருவனைத் தேட வேண்டுமென்று சொல்லி முடிக்க, ராமனும் சபைக்கு

வந்து தகப்பனுர், பிறகு பெரியோர்கள், பிராம்மணர் கள் சபையோர்கள் எல்லோரையும் வணங்கி நின்ருன்.

## 14. ராமனின் வைராக்யம்

தசரதன் ராமனை ஆலிங்கனம் செய்துகொண்டு பிறகு அவன் தற்சமயம் இருக்கும் நிலைமையை எடுத்துக் காட்டி, அப்படி இருப்பது சரியல்ல என்றும், பெரியோர்களை ஆசிரயித்து அவர்கள் சொற்படி வாழ்நாளைச் சீர்திருத்தம் செய்துகொள்ள வேண்டுமென்றும் உபதேசித்தான். தசரதன் பேசி முடித்ததும் வசிஷ்டர் ராமனை நோக்கிச் சில நல்ல வார்த்தைகளைச் சொல்லி, பிறகு அவனுக்கு விவேகம் ஏற்பட்டிருப்பதாகவும், சிற்சில சந்தேகங்களைப் பெரி யோர்களிடம் கேட்டுத் தீர்த்துக்கொண்டால் மனக் கலக்கம் நீங்கி ஞானம் உதயமாகுமென்றும் கூறினுர். பிறகு விசுவாமித்திரர் ராமனைப் பார்த்து, "உன் மனம் கலக்கமடையக் காரணமென்ன? எவ்விதமான சந்தே கத்தால் நீ பீடிக்கப்பட்டாய்? அதை விவரித்துச் சொன்னுல், அதைத் தெளிவு செய்து கலக்கம் நீங்க ஏற்பாடு செய்கிறேன்" என்று சொன்னுர்.

பெரியோர்களின் வார்த்தைகளை ராமன் கேட்டு மனமகிழ்ந்து தன் மன நிலையைப் பற்றிச் சொன்னுன். "நான் தீர்த்தயாத்திரை செய்து முடித்த திலிருந்து, பல தேசங்கள், ஜனங்கள், அவர்களின் நாகரிகம் எல்லாம் பார்த்து உலக அறிவு ஏற்பட்ட காரணமாய், என் மனத்தில் ஒரு பெரிய சந்தேகம் தோன்றி அதன் தொடர்ச்சியாக வாழ்வில் விரக்தி ஏற்பட்டுவிட்டது. இந்தப் பிரபஞ்சத்தின் வாழ்வில் என்ன நீடித்த சந்தோஷம் இருக்கின்றது? நமது

வாழ்நாள் அநித்யம். பிறந்தது முதல், இறப்பை எதிர் பார்க்க வேண்டி இருக்கிறது. யமன் கையில் அகப் பட்ட பொம்மையே நாம். நமது மனநிலை எவற்றிலும் நீடித்த சுகத்தை அநுபவிக்க முடியாமலிருக்கிறது. நம் ஆசைகளுக்கும் ஓர் அளவில்லை. ஓர் ஆசை தீரும்முன், நம் மனது மற்றொன்றைப் பின்பற்றி நிற்கிறது. நமது தேகம் வருத்தத்திற்கும் பிணிக்கும் இருப்பிடமாக உள்ளது. குழந்தைப் பருவத்தில் தேக வலிமையும் அறிவுமின்றி விளையாட்டுத் திரவியம்போல் கருதப் படுகிறோம். இளைஞர் ஆன பிறகு புத்தி பலவிதப் பற்றுதலால் கெட்டுப் பருவம் வெகு சீக்கிரம் காலமாகின்றது. அதன் பிறகு பெண் மோகம் பிடித்து, புத்தி கெட்டு, தேக சௌக்யத்தையும் சந்தோஷத்தை யும் இழந்து நிற்கின்றோம். பிறகு வெகு சீக்கிரம் முதுமையை எதிர்பார்க்கும் நோக்கம். அதிகரிக் கின்றது. ஆகவே நம் வாழ்வு பரிதபிக்கப்படும் ஒரு விளையாட்டு; நாம் படும் சந்தோஷங்களே நமது தீவினைக்குக் காரணமாகின்றன. நம் இந்திரியங்களே நமக்குச் சத்துருக்கள். எல்லாம் அநித்யம். ஒரு விவேகி யானவன் சந்தோஷப்படும்படியாகப் பிரபஞ்சத்தில் என்ன இருக்கிறது? ஆகையால் நான் அறிய விரும்பு வது இந்த வாழ்க்கையைத் தவிர வேறு எந்த வாழ்வி லாவது நாம் பார்க்கும் சுக துக்கங்கள் இல்லாமலிருக் கின்றனவா என்பதே" என்று ராமன் சொல்லி முடித்தான்.

ராமன் வார்த்தைகளைக் கேட்டுச் சபையோர்கள் எல்லோரும் மிகவும் ஆச்சரியப்பட்டார்கள். இளைய வயதில் இவ்வளவு அறிவும் வைராக்யமும் ஏற்பட்டது அபூர்வம். பூர்த்தியான ஞானம் உதயமாயிருப்பதை

முனிவர்கள் கண்டறிந்தார்கள். ஆகையால் அவன் கேள்விகளுக்குப் பதில் சொல்லப் பெரியோர்கள் கடமைப் பட்டவர்கள் ஆயினர். ஆகவே விசுவாமித்திரர் ராமனைப் பார்த்துச் சில வார்த்தைகளைச் சொன்னார்.

வைராக்கியப் பிரகரணம் முற்றிற்று



# 2

## முமுக்ஷு வியவகாரப் பிரகரணம்

## (தெய்வம் என்பது என்ன? மோக்ஷ உபாயங்கள்)

### 15. விசுவாமித்திர உபதேசம்

விசுவாமித்திரர் - ராமா, நீ அறியவேண்டியது ஒன்று மில்லை. வாழ்வில் தெரிந்துகொள்ள வேண்டியவைகளை நீயாகவே தெரிந்துகொண்டு ஆகிவிட்டது. அதன் காரணமாக உனக்கு வைராக்யம் ஏற்பட்டு ஞானமும் உதயமாயிருக்கிறது. இனி நீ புதியதாக அறியவேண்டியது ஒன்றுமில்லை. அறிந்ததைப் பெரியோர்களிடம் நிர்ணயித்துக்கொள்ள வேண்டியதுதான் பாக்கி. இதற்கும் ஏற்பாடு செய்துவிட்டால் சுகரைப்போல் பக்குவமடைவாய்.

### 16. சுகர் விருத்தாந்தம்

வால்மீகி - இதைக் கேட்ட ராமன் சுகர் யாரென்றும் அவர் எப்படி இருந்தாரென்றும், எப்படிப் பக்குவமடைந்தாரென்றும் தெரிந்துகொள்ள ஆவலாக இருப்பதாகச் சொன்னான்.

விசுவாமித்திரர் அவன் இஷ்டப்படி சுகருடைய விருத்தாந்தத்தைச் சொன்னார்

" உன் தகப்பனாருகில் உட்கார்ந்திருக்கும் ஞானியாகிய வியாசருக்குச் சுகர் என்னும் நாமதேயம் பூண்ட அபூர்வமான புதல்வன் ஒருவன் இருந்தான். பிறவியிலேயே ஞானம் ஏற்பட்டிருந்ததால் இளைய வயதிலிருந்தே ஞான மார்க்கத்தை அநுசரித்து, 16 வயதுக்குள் சித்தி அடைந்துவிட்டான். ஆனால் எல்லாம் தம் சொந்த முயற்சியால் அறிந்துகொண்டபடியால் தாம்

அறிந்ததற்கு மேலாக ஏதாவது தத்வம் உண்டா இல்லையா என்ற நிச்சயம் ஏற்படவில்லை. இதைப் பெரியோர்களிடம் கேட்டு நிர்ணயம் செய்துகொள்ள விரும்பித் தம் தந்தையாகிய வியாஸரையே குருவாகப் பாவித்துப் பின்வருமாறு கேட்டார்:—"சம்சாரம் என்பது எப்படி ஏற்பட்டது? யாரால் ஏற்படுத்தப் பட்டது? இதற்கு எப்பொழுது ஓய்வு?" வியாஸர் இந்தக் கேள்விகளைக் கேட்டுத் தக்கவாறு பதில் சொன்னார். சுகர் இவைகளைத் தாமாகவே அறிந்திருப்பதாகவும் இவைகளுக்கு மேல் ஏதாவது தத்வமுண்டா என்றும் கேட்டார். நீ தெரிந்து கொண்டிருப்பதைத் தவிர வேறொன்றுமில்லையென வியாசர் பதிலளிக்கச் சுகர் சாந்தி ஏற்படாவண்ணம் இருந்தார். இனிச் சந்தேகம் வேறொருவர் சொல்லித் தான் தீருமென்று அறிந்துகொண்டு வியாஸர் தமக்குத் தெரிந்தது அவ்வளவுதானென்றும் அதற்குமேல் ஜனக மகாராஜனிடமிருந்து தெரிந்துகொள்ளலாமென்றும் சொன்னார்.

சந்தேக நிவர்த்தியில் ஆவலுற்றிருந்த சுகர் ஜனகரைக் கூடிய சீக்கிரமே காணும்பொருட்டு விதேக தேசத்திற்குப் புறப்பட்டுப் போனார். மகாராஜனின் அரண்மனையை அடைந்ததும், அரசனைப் பார்க்க விரும்புவதாகக் காவலாளியிடம் சொல்லியனுப்பினார். மகாராஜன் சேதி கேட்டதும் காணவந்தவர் யாரென்றும், வந்த காரணத்தையும் ஒருவாறு ஊகித்துக் கொண்டு, சில நாள் கழித்துப் பார்ப்பதாகத் தகவல் சொல்லியனுப்பினார். அதன்படி ஏழு நாள் வரையில் சுகர் காத்து, பிறகு அரண்மனைக்குள்ளே அழைக்கப்

பட்டு, அங்கே ஏழு நாட்கள் கழித்து, பிறகு அந்தப்புரவாசம் ஏழு நாள் ஏற்பட்டது. இங்கே ஷோடசோபசாரங்கள் நடந்தன. இவ்விதச் சோதனைகளுக்கெல்லாம் மனக்கலக்கமில்லாமல் நின்ற சுகரின் யோக்யதையை அறிந்த ஜனகர் இனிச் சோதனை போதுமென்று, பாலனைப் பார்ப்பதாகச் சொல்லியனுப்பினர். சுகர் அண்டையில் வந்ததும், ஜனகர் எழுந்து நமஸ்கரித்துத் தம்மை நாடி வந்ததன் காரணத்தைக் கேட்டார். சுகர் தம் சந்தேகங்களை எடுத்துச் சொல்ல ஜனகரும் வியாசரைப் போலவே விடையளித்தார். முன் போலவே சுகர் அவைகளைத் தாமாகவே ஏற்கனவே அறிந்திருப்பதாய்த் தெரிவித்தார். இதைக் கேட்டு ஜனகர், "நீர் பூர்ண ஞானத்தை யடைந்து முக்தர் ஆகிவிட்டீர். உம்மால் அறியப்படவேண்டியது இனி ஒன்றுமில்லை. விஷய சுகங்களிலும் உமக்கு இச்சை ஒழிந்துவிட்டது. ஆகவே நீர் என்னைக்காட்டிலும் மேலானவரே. உம் தகப்பனுருக்குக்கூட இவ்வளவு காலமாகியும் உமக்கு ஏற்பட்டிருக்கும் பக்குவம் ஏற்படவில்லை. இனி நீர் அடைந்திருக்கும் பதவியில் ஸ்திரமாய் இருக்கக்கடவீர்" என்று ஆசீர்வதித்தார்.

வால்மீகி - இந்த விஷயத்தைச் சொல்லி முடித்ததும் விசுவாமித்திரர் ராமனை நோக்கி, அவனும் அந்த ஸ்திதியிலிருப்பதாகவும், பெரியோர்களின் அநுக்கிரகம் பெற்று, புத்தி ஸ்திரமடைந்தால் பரம முக்தனுகி விடுவானென்றும், இவ்வநுக்கிரகம் செய்யத்தகுந்தவர் பரம ஞானியாயும் ரகு குலத்திற்கே குருவாயுமுள்ள வசிஷ்டரே. ஆகவே தொடர்ந்து அவரை நோக்கித் திரிகாலத்தை அறிந்த அவரே இந்தப் பரம உபதேசம்

செய்வதை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றும், தாங்கள் இருவரும் முன்னொரு காலத்தில் நீடித்திருந்த பகையைத் தீர்த்துக்கொண்டு பிறகு இருவருமாக அடைந்த பிரம்மோபதேசத்தை இப்பொழுது ராமனுக்கு எடுத்துரைக்க வேண்டுமென்றும் சொன்னார். இப்படிச் செய்வதால் குருவுக்கும் சார்த்தகம் என்பதைத் தெரிவித்தார்.

வால்மீகி: இந்த வேண்டுகோளுக்கு இணங்கி வசிஷ்டர் உடனே ராமனுக்கு உபதேசிக்கும் பொருட்டு அவன் முகத்தைச் சற்று உற்று நோக்கி அவனுடைய சந்தேகங்களை யெல்லாம் நீக்குவதாகச் சொன்னார். உடனே ராமன் முனிவரை நோக்கி, "மகா மேதாவியாயும் எல்லோராலும் பூஜிக்கத்தகுந்தவராயு மிருக்கும் வியாஸர் முக்தனுகாமலிருக்க, பாலனை சுகர் எப்படி முக்தனுனர்?" என்று கேட்டான். வசிஷ்டர் பதிலளித்ததாவது :—

## 17. வசிஷ்டர் உபதேசம்

வசிஷ்டர்: நாம் திரும்பித் திரும்பி எடுக்கும் ஜன்மங்களில், சிறப்பு, குணம், செல்வம் எல்லாவற்றிலும் சில ஒரே மாதிரியாகவும், மற்ற ஜன்மங்கள் வேறுபட்டும் இருக்கின்றன. எனக்குத் தெரிந்தவரையில் வியாசருக்குத் தற்சமயம் முப்பத்திரண்டாவது ஜன்மம். இந்த ஜன்மத்தில் செய்த காரியங்களாகிய வேத விபாகங்களும் இதர சாஸ்திரங்களும் திரும்பிச் செய்ய வேண்டிய கடமை இருக்கிறது. அதன் காரணமாகத்தான் இந்த ஸ்திதியிலிருக்கிறார். ஆயினும் அவர் ஜீவன்முக்தரே. அவர் இன்னும் பிரம்ம பதவியை அடைய நேரும். நீ இப்பொழுது அறிய

வேண்டியது, ஜீவன்முக்தனான பிறகு விதேக முக்தியை அடைவது மிகவும் எளிதென்பதே. இவ்விரண்டு ஸ்திதிகளுக்கும் வித்யாசம் சொல்பமே. இது இப்படி நிற்க.

## 18. பௌருஷம்

பிரபஞ்ச வாழ்க்கையிலே நாம் முக்கியமாக அநுசரிக்க வேண்டியது 'பௌருஷம்' அல்லது தன் ஆண்மையை அடிப்படையாகக் கொண்ட தீவிர முயற்சி. தகுந்த முயற்சியால் உலகத்தில் அடைய முடியாதது ஒன்றுமே இல்லை. பிரம்ம பதவியுங் கூடத் தீவிரமும் ஒழுக்கமும் சேர்ந்த முயற்சியால் அடையத்தக்கதே.

ஆனால் செய்யும் முயற்சிகளைச் சரியான மார்க்கத்தை அனுசரித்தும் இடைவிடாமலும் செய்துவர வேண்டும். பலன் சித்திக்காவிடின் இதற்குக் காரணம், செய்த முயற்சியின் கோளாறே தவிர வேறு காரணமல்ல. தகுந்தபடி முயற்சி இருந்தால் காரியம் கைகூடியே தீரவேண்டும். இதுவே நியதி. இப்படிப் பலனை அடையும் வரையில் இடைவிடாமல் முயற்சி செய்கிறவர்கள் உலகத்தில் (எக்காலத்திலும்) மிகவும் சொற்பம். பெரும்பாலும் ஜனங்கள் காரியம் எடுத்த பிறகு, அதில் ஊக்கம் குறைந்து முயற்சியில் தளர்ச்சியடைவதாலேயே அதில் அபஜயம் அடைகிறார்கள். சோம்பலே எல்லா ஜனங்களுடைய கஷ்ட நிஷ்டூரங்களுக்கும் முதல் காரணம். உலகத்தில் நாம் பார்க்கும் வலிமை, எளிமை, எல்லாவற்றிற்கும் காரணம் சோம்பலே. உலகமே க்ஷீண தசை அடைவதற்குக் காரணமும் சோம்பலே.

## 19. வினைப்பயன்

தவிர அநேகர் தங்களுக்கு விளையும் வினைப்பயன்களைப் பூர்வ ஜன்மத்தின் பலனாகக் கருதி சோர்வடைகிறார்கள். இதுவும் அக்ஞானமே. பூர்வ ஜன்மத்தில் செய்த பிரயத்தனங்களின் பலன்களை இந்த ஜன்மத்தில் நாம் அனுபவிப்பது வாஸ்தவமே. ஆனால் இனி நடக்கவேண்டிய யத்தனங்களில் அதன் வேகம் தற்சமயம் செய்யக்கூடிய முயற்சிகளுக்குக் குறைந்ததே. இவ்வித வாசனை வினைப்பயன்களைத் தற்சமயம் செய்யக்கூடிய பிரயத்தனங்களால் ஜயிக்கலாம். இது நம் வசத்தில் இருக்கிறது. இவ்வாறு எண்ணுவதை விட்டு நடப்பதெல்லாம் வினைப்பயன் என்று கருதி, வாழ்க்கையில் சோகமடைந்து, செய்யவேண்டிய முயற்சிகளைச் செய்யாமல் நிற்கும் மானிடர்கள் பரம மூடர்களே.

ஆலோசித்துப் பார்த்தால் நம் செயல்களுக்குக் காரணம் வினைப்பயனும் இப்பொழுது செய்யும் முயற்சியுமே. இவ்விரண்டைத் தவிர எந்தக் காரியத்திற்கும் அனுகூலமாகவோ பிரதிகூலமாகவோ இருப்பதற்கு வேறொரு காரணமுமில்லை. நடக்கவேண்டிய காரியங்கள் இவ்விரண்டின் பலத்தைத் தழுவியே நடந்து தீரவேண்டும். எதற்குத் தீவிரம் அதிகமோ அது ஜயமடைகிறது. ஆனால் வினைப்பயன் நம் நோக்கத்திற்கு எட்டாதது. அதை நாம் எவ்விதமும் மாற்ற முடியாது. வினைப்பயன் அளவில் பட்டது, வளராது. முயற்சியோ நம்முடைய வசம். இம்முயற்சியை யுக்தி, புத்தி, விடாமுயற்சிகளோடு செய்துவந்தால் வினைப்பயனை நசிப்பித்துக் காரியங்களில் ஜயமடையலாம்.

பெரும்பாலும் ஜனங்கள் தங்களுக்கு விளைவதெல்லாம் தெய்வச் செயலாகக் கருதி, செய்யவேண்டியவைகளைச் செய்யாமல் மதிகெட்டிருக்கிறார்கள். அதாவது வினைப் பயன்களே தெய்வச் செயலாகக் கூறப்படுகின்றன. ஆனால் இவ்வினைப்பயன்களோ நம்முடைய பூர்வப் பிரயத்தனங்கள். ஆகையால் நமது தேகம் ஒரு பூர்வ — பிரத்யக்ஷ வினைகளின் போர்க்களமாயிருந்து அப் போரின் முடிவே நமது வாழ்வாக ஏற்படுகின்றது.

## 20. தெய்வம் - அதன் சொரூபம்

நமக்கு வேண்டியவைகளைத் தேடிக்கொள்ள நம் பிரயத்தனத்தால் முடியுமே தவிர வேறொன்றினாலும் முடியாது. தீவிர முயற்சியே தெய்வம். இதையே ஒவ்வொருவரும் ஆசிரயிக்கவேண்டும். நமது முயற்சி இல்லாமல் ஒரு காரியமும் சித்தி பெறாது. நம் புத்திக் குப் புலப்படாமல் தெய்வம் எங்கிருந்தோ நம் செயல் களுக்குப் பலனை அளிப்பதாக எண்ணுவது மூடத் தனம். இதைவிட அக்ஞானம் வேறில்லை.

நம்மால் செய்யப்படும் காரியங்களெல்லாம் நம் இந்திரியங்களால் செய்யப்படவேண்டும். இந்திரியங் கள் மனத்தால் ஏவப்படுகின்றன. மனது புத்தி யின் அசைவு. நாம் அநுபவிப்பதெல்லாம் கிரியை களின் பலனே. ஆகையால் புத்தியின் அசைவுதான் பலன் ரூபமாக அநுபவிக்கப்படுகின்றது. நியதி இப்படி இருக்க, தெய்வத்தால் நடைபெறவேண்டியது என்ன?

மேலும் நாம் பிரபஞ்சத்தில் அடைவதெல்லாம் இங்கே சொல்லப்படும் மார்க்கத்தில் ஒன்றைத் தழுவியே அடையப்படவேண்டும்; அதாவது (1) சாஸ்

திரங்களை அறிந்து ஆராய்ச்சி செய்து சித்தியடைவது; அல்லது (2) குரு முகமாக உபதேசமடைந்து தெரிய வேண்டியவைகளைத் தெரிந்துகொண்டு சித்தியடைவது; இதுவுமில்லாவிட்டால் (3) தன் சொந்த ஞானத்தாலோ பிரயத்தனத்தாலோ சித்தியடைவது. இந்த மூன்று மார்க்கங்களில் எதை அநுசரித்தாலும் நம் முயற்சிதான் தேவையாக இருக்கிறதே தவிர, தெய்வத்தால் கொடுக்கப்பட்டு நாம் அடைவது ஒன்றுமில்லை.

## 21. மனிதப் பிரயத்தனம்

மனிதப் பிரயத்தனம் இல்லாமல் எப்பொழுது அவர்களின் காரியங்கள் யாதும் முடிவதில்லையோ, அப்பொழுது தெய்வாதீனம் என்னும் கொள்கையால் என்ன பயன்? உதாரணமாக, ஒரு பிராணியை உடல் வேறு, கழுத்து வேறாகக் கொன்ற பிறகு அதற்கு உயிர் கொடுப்பதாக இருந்தால் கடவுள் செயலென்று நம்பலாம். இப்படிப் பிரபஞ்சத்தில் நடப்பதாக நாம் அறிந்ததில்லை.

தெய்வம் என்ன ரூபமாக இருக்க முடியும்? பதார்த்த ரூபமாகவாவது, புத்தியால் ஸ்மரிக்கப்படும் படியாவது இருக்கவேண்டும். இவ்விரண்டில் எந்த விதமாகவும் இருப்பதாகச் சித்தாந்தம் செய்யமுடிவதில்லை. அல்லது ஒரு சமயம் தெய்வமென்பது மூன்று உலகங்களுக்கும் அதிபதியாயிருந்து சகலத்தையும் ஆண்டுவருவதாக இருந்தால், நாம் ஒரு செயலிலும் ஈடுபடாமலும், எல்லாம் தெய்வம் செய்துவிடுமென்றும் சும்மா இருந்துவிடலாம்; நமது முயற்சிக்குத் தேவையே இல்லை.

ஆகையால் தெய்வம் என்னும் கற்பனை மூடர்களுக்கு ஓர் ஆறுதலாகப் பிரயோஜனமே தவிர வேறு பிரயோஜனம் ஒன்றும் இல்லை. பலனைக் கொடுக்கப் பிரயத்தனத்தால் முடியுமே தவிரத் தெய்வத்தால் முடியாது. பலன் கிரியா ரூபமாக உள்ளது; இது ஆகாய ரூபமாக எண்ணப்படும் தெய்வத்தால் நடைபெறாது. அதே இனமாக, அதாவது கிரியா ரூபமாக இருந்தால்தான் முடியும். ஆகவே பிரயத்தனமே பிரதானம். பிரயத்தனம் இல்லாமல் ஒரு மனிதன் பண்டிதனாக முடியுமா? அல்லது ஒரு சூரன் தன் பராக்கிரமமில்லாமல் சண்டையில் ஜயமடையக் கூடுமா? நமது அருகிலிருக்கும் விசுவாமித்திரரைப் பற்றிப் பேசுவோமாகில் அவர் க்ஷத்திரிய குலத்தில் பிறந்தும் பிரம்ம ரிஷி ஆனது எவ்விதம்? தம் பிரயத்தனத்தால் இப்பதவி அடையப்பட்டதே தவிர, தெய்வ சகாயத்தால் அல்ல.

வால்மீகி: அப்பொழுது ராமன், "அப்படியானால் ஜனங்கள் எதைத் தெய்வமாகக் கொண்டாடுகிறார்கள்?" என்று கேட்டான்.

## 22. விடாமுயற்சியும் தெய்வமும்

வசிஷ்டர் இக்கேள்விக்குப் பதில் சொன்னதாவது:—

வசிஷ்டர்: பிரயத்தனத்தின் காரணமாகக் கிடைக்கும் பலன்களைத்தான் ஜனங்கள் தெய்வ சங்கல்பமாக எண்ணுகிறார்கள். வாஸ்தவத்தில் பலன்கள், மேலே சொல்லியபடி, அவரவருடைய பிரயத்தனமின்றிக் கிடைப்பதில்லை. இவ்விதப் பிரயத்தனங்கள் இப்பிறப்பிலாவது முற்பிறப்பிலாவது செய்யப்பட்டிருக்கலாம். மேலும் இப் பிரயத்தனங்களுக்குக்

காரணம் மனதே. ஆகையால் தெய்வத்தால் நடக்க வேண்டியது ஒன்றுமில்லை. மனத்தின் ஆறுதலுக்காகக் கற்பிக்கப்பட்டதே தெய்வம்.

ஆகவே தற்சமயம் நமக்கு ஏற்படும் அநுபவங்களுக்குக் காரணம் இப்பொழுது செய்யும் கோரிக்கைகளோ பூர்வ வாசனைகளோ ஆகும். பூர்வ வாசனை எப்படி இருந்தபோதிலும், தங்கள் முன்னேற்றத்தின் பொருட்டு ஜனங்கள் இப்பொழுது நல்வழிகளில் பிரயத்தனம் செய்து வருவதுதான் முறை. இவ்விதந்தான் பலனைச் சீக்கிரம் அடையலாம். பூர்வ வாசனை ஒரு சமயம் விரோதமாக இருப்பினும், இன்னும் அதிகப் பிரயத்தனத்திற்கு அதுவே காரணம். ஆகையால் பிரயத்தனமே பிரதானமென்று கருதி, நல்ல சாஸ்திரங்களைப் படித்து ஆராய்ச்சி செய்தும், அல்லது தகுந்த பெரியோர்களின் சகவாசத்தை அநுசரித்தும் ஞான மார்க்கத்தைக் கடைப்பிடிக்கவேண்டும். இதற்கு மனமே பிரதானம். இந்த மனத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக, பலாத்காரமில்லாமல் வசப்படுத்துவதிலேயே பௌருஷத்தைச் செலுத்தவேண்டும்.

இவ் விடாமுயற்சியைச் சிறு வயதிலிருந்தே பயின்று வருவது உசிதம். மேலும் முயற்சியுடன் யுக்தியையும் உபயோகித்துச் செய்யும் காரியங்களை, தகுந்த முறைகளோடு செய்வதால்தான், எல்லா விஷயங்களிலும் சந்தேகமின்றி வெற்றி பெறலாம்.

## 23. உபதேசத்திற்கு முன்னுரை

வால்மீகி; வசிஷ்டர் இனி உபதேசம் ஆரம்பிக்கும் பொருட்டுத் தாம் இப்பொழுது சொல்லப்போவதை

நிர்மலமான மனத்துடன் கவனித்துக் கேட்டால் இகத்திற்கும் பரத்திற்கும் உபாயமாகும் என்றார். ராமனுக்குத் தற்சமயம் ஏற்பட்டிருக்கும் மனக்குழப்பம் தமக்கும் ஒரு சமயம் ஏற்பட்டதாகவும் அப்பொழுது அவர் அடைந்த பிரம்மோபதேசத்தை இப்பொழுது எடுத்துரைப்பதாகவும் சொன்னார்.

## 24. வசிஷ்டர் பிறவியும், ஞானமடைந்த முறையும்

வசிஷ்டர்: முன்னொரு காலத்தில் இந்தப் பிரம்மாண்டம் ஒரே சாந்தமயமாயும் அறிவுமயமாயும் இருந்தது. அப்பொழுது நியதியைத் தழுவி இவ்வறிவுக் கடலில் ஓர் அசைவு ஏற்பட்டது. இந்த அசைவினால் தோன்றியதே சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மா. அவனது செயல் சிருஷ்டியே. பல யுகங்கள் இந்தச் சிருஷ்டி ஏற்பட்டுவந்த பிறகு, இவைகளுக்கு ஒரு முடிவு வேண்டாமா என்ற எண்ணம் அவர் மனத்தில் உதிக்க அப்பொழுது என்னைச் சிருஷ்டி செய்தார். பிரம்மாவினால் படைக்கப்பட்ட பிரம்ம புத்திரனாகிய நானும் அறிவு ஒளியாகவே இருந்தேன். ஆனால் இப்படி இருப்பதால் தன் எண்ணம் நிறைவேறாதென்று ஓர் அசைவால் அறிவுருவாயிருக்கும் என் நிலைமையைக் கலக்கிச் சம்சாரத்தில் ஈடும்படி செய்துவிட்டார். இந்த ஸ்திதியில் நான் கொஞ்ச காலமிருந்து, மிகவும் துக்கித்து, பிறகு விவேகம் கொஞ்சம் உதித்து, அதனால் சம்சாரத்திலிருந்து விடுபட்டுக்கொள்ளும் எண்ணம் மேலிட்டு, பிதாவாகிய பிரம்மாவையே இதற்கு வழி காட்டும்படி வேண்டிக்கொண்டேன். இதற்கு இணங்கி எனக்கு உபதேசம் செய்ய அதன் பலனைச் சீக்கிரம் பழைய நிலைமையை அடைந்தேன். ஞானம்

மீண்டும் ஏற்பட்டதிலிருந்து நான் அதே நிலைமையில் தான் இருந்து வருகிறேன். எனக்கு இப்பொழுது வாழ்க்கையில் அடையவேண்டியது ஒன்றும் இல்லை. ஆயினும் உலகத்திற்கு ஞானமார்க்கத்தை உபதேசிக்கும் பொருட்டே நான் உயிர் வாழும் கருத்து.

கதா ரூபமாக ராமனுக்கு மேலே சொல்லியதன் பொருளாவது :—

பிரபஞ்சம் இயற்கையில் அறிவு மயமாயுள்ளது. சமுத்திரத்தில் ஏற்படும் ஓர் அலைபோல், இந்த அறிவுக் கடலில், நியதியின் காரணமாகவே அதாவது தனக்குத் தானாகவே அசைவு ஏற்பட்டுச் சிருஷ்டி உண்டாகிறது. சிருஷ்டி ஏற்பட்டவுடன் எல்லையில்லாமல் பெருகிப் பிரபஞ்சம் விஸ்தாரம் அடைகிறது. கிரியைகள் அதிகரித்தும் வருகின்றன. இச் சிருஷ்டிக் கிரமமாகப் பஞ்ச பூதங்கள், பிறகு மர வர்க்கங்கள், அப்புறம் ஜீவ ஜந்துக்கள் எல்லாம் அடுத்தடுத்து ஏற்பட்டுக்கொண்டே வந்து கடைசியாக மானிட ஜந்துவாக முடிகிறது. மானிட ரூபம் தரித்த பிறகுதான், சம்சார நிலையில் சுழன்று வருவதன் காரணம் என்னவென்று விசாரணை செய்வதற்கும் அதிலிருந்து விடுதலை அடையப் பிரயத்தனம் செய்வதற்கும் விவேகம் உதிக்கின்றது. இந்த முயற்சியின் பலனாக ஞானம் சித்தித்துச் சுய நிலை அடையப் படுகின்றது.

## 25. அரசர்களும், ஞானோபதேசம் செய்யப்பட்ட முறையும்

வால்மீகி : வசிஷ்டர் மேலும் சொன்னதாவது :—

வசிஷ்டர் : எனக்குப் பிறகு சனத்குமாரர், நாரதர் இன்னும் இதர மகான்களும் காலக் கிரமத்தில் ஜனனமானார்கள். மானிட வாழ்க்கை சீர் திருத்தம் அடையும் பொருட்டு இம் மகான்களால் கர்மானுஷ்டானங்கள், நியம நிஷ்டைகள், யாக

யோகாதிகள் எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக ஏற்படுத்தப்பட்டன. ஆனால் நாளுக்கு நாள் ஜனக் கூட்டங்கள் அதிகரிக்க இவர்களை ஆட்சி செய்தும் ரக்ஷித்தும் வரும்படி இப்பெரியோர்களால் அரசன் நியமிக்கப்பட்டு, நாளடைவில் ஓர் அரசன் போதாமல், பல அரசர்களும் நியமிக்கப்பட்டார்கள். எப்பொழுது பல அரசர்கள் ஏற்பட்டார்களோ அப்போதே இவர்களுக்குள் புத்தி மாறுதல் அடைந்தது. தவிர, பொது ஜனங்கள் நியமநிஷ்டைகளில் வேரூன்றி அவைகளின் தாத்பர்யத்தை மறந்தார்கள். அதனால் உலகத்தில் பலவிதத் தொந்தரவுகளும், சண்டை சச்சரவுகளும் புத்தி ஈனமும் உண்டாயின. காலக்கிரமத்தில் ஜனங்கள் பரிதபிக்கும் நிலைமையை அடைந்தார்கள். இக்கஷ்டங்களைப் பார்த்து ஞானிகள் கருணை புரிந்து, இவர்களைக் கை தூக்கிவிடும்பொருட்டு அரசாட்சி செய்துவந்த ராஜாக்களுக்கு ஞானோபதேசம் செய்தார்கள். ஏனெனில் இவர்களின் ஒழுக்கத்தைப் பார்த்துப் பிரஜைகளும் அப்படியே சீர்திருத்தம் செய்துகொள்வார்கள் என்ற அபிப்பிராயத்தால். ஆகவே இந்த ஞானோபதேசம் முதலில் அரசர்களுக்கே செய்யப்பட்டது. இப்படி உபதேசம் பெற்ற அரசர்களில் ஒருவனாகியும், இக்ஷ்வாகு குலத்தில் உதித்தவனுமானவனே உன் தகப்பனாராகிய தசரதன்.

## 26. ராமன் - ஞானோபதேசத்திற்குத் தக்க பாத்திரன்

இப்படி உயர்ந்த குலத்தில் பிறந்து சுயமாகவே ஞானம் இருப்பதால் உன் மனம் மிகவும் பக்குவமடைந்திருக்கிறது. மேலும் நிஷ்காரணமாக வைராக்யமும் ஏற்பட்டிருப்பதால், நான் சொல்லப்போகும் தத்வங்

களை அறிந்துகொண்டு ஆராய்ச்சி செய்வதற்கு உன் மனம் தயாராக இருக்கிறது. வைராக்யம் கஷ்டத்தாலோ, வெறுப்பாலோ அல்லது மரண பயத்தாலோ உண்டாவது சகஜம். ஆனால் நிஷ்காரணமாகவும் நிஷ்பிரயோஜனமாகவும் வைராக்யம் ஏற்படுவதற்குப் பூர்வசித்தி இருக்க வேண்டும். ஆகையால் நீ சீக்கிரமே முக்தி யடைவாய். இதன் பொருட்டு நான் இனிச் சொல்லப்போவதைக் கவனித்துக் கேட்டு, அவைகளை அநுசரித்து வாழ்நாளை செலுத்தக்கடவாய்.

## 27. முக்தியும் சம்சாரமும்

எல்லா மகான்களாலும் விரும்பப்படும் பதவி ஒன்றே. ஆனால் அதை அடையும் மார்க்கங்களும், அதைப்பற்றிய கொள்கைகளும் பலவாறாக இருக்கின்றன. ஏதாவது ஒரு வழியைக் கடைப்பிடித்து அடையவேண்டிய பதவியை அடைந்துவிட்டால் பிறகு எல்லாப் பேதங்களும் அடிபட்டுப்போய்ச் சாந்தம் ஒன்றே பூர்ணமாக நிலை நிற்கும். ஆனால் அந்த நிலைமையை அடைந்தபிறகு அதிலிருந்து நழுவாமல் ஸ்திரமாய் நிற்கவேண்டும்.

இந்த நிலையை அடைய முழு முயற்சியையும் செலுத்திச் சம்சாரமாகிய கடலைத் தாண்டவேண்டும். இந்தச் சம்சாரத்தில் அகப்பட்டவர்கள் படும் துயரங்கள் எண்ணமுடியாமலிருக்கின்றன. நாம் புராணங்களிலிருந்து அறிந்த கொடூரமான நரக தண்டனைகளெல்லாம் வாஸ்தவத்தில் நமது வாழ்விலேதான் அநுபவிக்கப்படுகின்றன. ஆனால் எவன் இந்தச் சம்சார பந்தத்தை ஒழித்து மன அமைதியை அடைகிறானோ, அவன் சம்சாரத்தை அநாயாசமாக நடத்திக்கொள்

வான். அந்தச் சம்சாரத்திலும் அவன் சந்தோஷத்தையே அடைகிறான். இங்கே கூடியிருக்கும் மகரிஷிகள் இந்த ஸ்திதியை அடைந்தவர்களே. அவர்கள் இப்போதும் சம்சாரத்தை நடத்திவந்தும் அதனால் துன்பப்படுவதில்லை.

## 28. முக்தியை அடையும் உபாயங்கள்

இந்த நிலையை அடையப் பௌருஷத்தால்தான் முடியும். வேறு யாதோர் உபாயத்தாலும், அதாவது யாத்திரை, கர்மாநுஷ்டானங்கள், யோகாப்பியாசம் முதலியவைகளா லெல்லாம் முடியாது. சம்சாரத்தில் ஒருவித விரக்தியும், ஆத்ம விசாரத்தில் ஆசையும் ஊக்கமும் இருந்தால் நாளடைவில் ஞானம் சித்திக்குமென்பதில் ஒருவிதச் சந்தேகமும் இல்லை.

பிறகு உலக விஷயங்களை யுக்தியோடு ஆராய்ச்சி செய்யவேண்டும். யுக்தியில்லாமல் மௌடீகமான ஆராய்ச்சியால் ஒன்றும் கைகூடாது. மூடத்தனத்தை விடக் கேவலம் வேறொன்றுமில்லை.[1] இவ்விதச் சங்கல்பத்துடன் பிரயத்தனத்தை மேற்கொண்டு ஆத்ம விசாரணையில் மனத்தைச் செலுத்த வேண்டும்.[2] சொந்த முயற்சியுடன், சாஸ்திரங்களை ஆராய்ந்து வருவதும், [3]குரு உபதேசம் பெறுவதும் வெகு சீக்கிரம் பலனைக் கொடுக்கும். இந்த மூன்று உபாயங்களால் நிர்ணயிக்கப்படுவது அநேகமாய்ச் சாத்தியமாகவே இருக்கும். இவ்வுபாயங்களால் அடையப்படுவது எல்லாப் பொருள்களிலும் விஷயங்களிலும் சம திருஷ்டி. அதனால் ஏற்படுவது சாந்தம். இதை அநுபவத்தில் பூர்ணமாகக் கொண்டுவந்து விட்டால் பிறகு ஆத்ம சித்தியை அடைவது மிகவும் எளிது. சம நோக்கமும்

சாந்தமும் இருந்தால் அதற்கு ஈடாக இகத்திலாவது பரத்திலாவது ஒரு சந்தோஷமும் போகமும் இல்லை. சாந்தகுண முடையவர்களை விஷ்ணுவுக்குச் சமானமாகச் சொல்லவேண்டும். ஏனெனில் அவர்களுக்கு இந்த மூன்று லோகத்திலும் தேவையென்பதே இல்லை. இப்படி இருப்பவர்களைக் காட்டிலும் மேலானவர் ஏது?

## 29. விசாரணையே மூலக்கருவி

கொஞ்சம் சமதிருஷ்டியும் சாந்தமும் ஏற்பட்ட பிறகு, சம்சாரத்திலிருந்து விடுதலையடையச் செய்ய வேண்டிய உபாயம் என்னவென்றால் விவேகத்துடன் கூடிய விசாரணையே. வாழ்க்கையில் இன்ப துன்பங்களைக் கொடுக்கும் ஒவ்வொரு விஷயத்தையும் ஊகித்தும், ஆராய்ந்து பார்த்தும், இடைவிடாமல் பழகிவந்தால் வெகு சீக்கிரம் மனச்சாந்தி அதிகரிக்கும். விவேகத்துடன் ஆராய்ச்சி செய்வதால், எல்லாவித கஷ்டங்கள், மனக் குறைகள், மோகங்கள் நீங்குமென்பதில் சந்தேகமே இல்லை. உதாரணமாக, நல்ல இருட்டில் தனியாக ஒருவன் அகப்பட்டுக்கொண்ட சமயத்தில், பேயோ பிசாசோ இருப்பதாகவும், அது இவனை நாடியே வந்திருப்பதாகவும் நினைப்பதை நாம் அறிவோம். அதே க்ஷணத்தில் அவன் ஆராய்ச்சி செய்து பார்த்தால் பேய் மறைந்துவிடுகிறது. இவ்விதமே நம் வாழ்வில் அநேக விதமான மோகங்கள் தோன்றி, காரணமில்லாமல் மனத்தைக் கலக்குகின்றன. ஆனால் அப்போதைக்கப்போது ஒவ்வொரு விஷயத்தையும் ஒருவன் ஆராய்ச்சி செய்துவந்தால், அவன் சீக்கிரமே அக்ஞானத்திலிருந்து விடுபட்டு மனச் சாந்தி

யும், காரியங்களில் ஐயமும் அடைவான். சம்சாரத்தில் ஏற்பட்ட பந்தத்தை விலக்கிக்கொள்ள இதுவே முதல் தரமான கருவி.

விசாரணை செய்யாமலிருப்பதாலும் விவேகத்தை ஒவ்வொரு விஷயத்திலும் உபயோகிக்காமலிருப்ப தாலும் வாழ்வில் நேரிடும் துன்பங்கள் கணக்கிட முடியா. நினைத்ததெல்லாம் சந்தேகத்திற்கும், தொட்டதெல்லாம் ஆபத்திற்குக் காரணமாயும் விளங் கும். அதைரியமும் அபஜயமும் எப்பொழுதும் கண் முன்னே நிற்கும். இவைகளை யெல்லாம் விலக்கி, வாழ்வைச் சந்தோஷப்படுத்துவன விவேகமும் விசா ரணையுமே.

## 30. விசாரணை எவ்விதம் ?

இந்த விசாரணை என்பது என்ன ? "நான் யார்?", "இந்த சம்சாரமாவது என்ன ?" "எனக்கும் இதற்கு முள்ள சம்பந்தம் என்ன?", இவைகளை ஆராய்ச்சி செய்வதே விசாரணையாகும். இதை இடைவிடாமல் பயின்று வருவதே பெருத்த தவம்.

இப்படிச் செய்யும் தவத்தால் மனத்திற்கு எப் பொழுதும் ஒரு சந்தோஷம் ஏற்படும். இந்தச் சந்தோ ஷம் நீடித்திருக்கும்பொருட்டுப் பேராசையை ஒழித்து கிடைத்ததைக்கொண்டு திருப்தி அடைவது அவ சியம். சந்தோஷம் கிட்டினால் நமக்கு வேறென்ன வேண்டும் ? எப்பொழுதும் முகமலர்ச்சியுடன் இருப்ப வர்களைக் கண்டால் பார்ப்பவர்களும் சந்தோஷமடை கிறார்கள். தங்கள் சந்தோஷத்தை அவர்கள் எங்கும் பரவச் செய்கிறார்கள். இந்தப் பாக்கியத்தால் மனம் நாளடைவில் சாந்தி அடையும். மனச்சாந்தி அடைந்த

வர்களே எல்லோராலும் பூசிக்கப்படுபவர்கள். அவர்களே எல்லா மகரிஷிகளுக்கும் மேலானவர்கள். ராமா! இந்தப் பதவியை நீ அடையவேண்டுமென்பது என் கருத்து.

**வால்மீகி :** அன்று காலம் இத்துடன் கழிந்தது.

## 31. சம்சாரத்தைக் கடக்க உபாயங்கள் :

மறுநாள் சபை கூடியதும் வசிஷ்டர் பேசத் தொடங்கினார் :—

**வசிஷ்டர் :** பிரயத்தனத்தாலும், விவேகத்தாலும் மனத்தைச் சந்தோஷ நிலையில் வைத்துக்கொண்டு, மேலும் ஞானிகளின் சங்கத்தையும் தேடிக்கொள்ள வேண்டும். சம்சாரத்தைக் கடப்பதற்கு இந்த உபாயம் மிகவும் சிலாக்யமானது. பெரியோர்கள் தங்கள் அநுபவத்திலிருந்து எல்லாம் சொல்வதால் கேட்போருக்குச் சந்தேகங்கள் சீக்கிரமே நிவர்த்தியாகின்றன. அவர்களை அண்டி இருப்போர்களுக்கு உலக வாழ்க்கையிலுள்ள பிரமங்களும் அக்ஞானங்களும் நீங்கிப் புத்தி தெளிவடைகின்றது. ஆகவே இந்த நான்குவித உபாயங்களின் பலன்கள் (1) சந்தோஷம் பரம லாபத்தைத் தருகின்றது; (2) பெரியோர்களின் சேர்க்கை சரியான மார்க்கத்தைக் காட்டுகின்றது; (3) விசாரணை ஞானத்தை அளிக்கின்றது; (4) சமகுணமோ எல்லா ஐசுவரியத்திற்கும் மேலான பரம சுகத்தில் ஸ்திரம் செய்கின்றது. ஆகையால் நீ இந்த உபாயங்களைக் கைப்பற்றினால் முக்தியை அடைவாய்.

## 32. இன்னுமோர் உபாயம் - முக்தனின் குணாதிசயங்கள்

மேற்சொல்லிய உபாயங்களைத் தவிர்த்து இன்னுமொரு மார்க்கமாவது, சித்தின் சூக்ஷ்ம ரூபத்தை

இடைவிடாமல் விவேகத்தால் ஆராய்ச்சி செய்துவரு வது. இவ்விதமும் மேற்சொன்ன ஸ்திதியை அடை வது நிச்சயம். இப்படி ஜீவன்முக்தனு யிருப்பவன் சம்சாரத்தில் இருந்துவந்தாலும், எந்த விஷயத்திலும் பற்றுதலில்லாமல் ஒரு சாக்ஷி கர்த்தாவைப்போல் மிஞ்சிய காலத்தைக் கழித்துவருவான். தேடாமல் வந்த போகங்களை அநுபவித்தும், வராதவைகளைப்பற்றி யாதொரு குறையின்றியும் இருப்பான். சுகம், கஷ்டம், சந்தோஷம், விசனம் ஒன்றும் அவன் மனத்தை வேறு படுத்துவதில்லை. சுருக்கமாகச் சொல்லும்பொழுது, மனம் ஒருவிதப் பற்றுதலுமில்லாமல், அசைவின்றிச் சம திருஷ்டியில் நிற்கின்றது. பிறகு இந்த ஜீவன் முக்த ஸ்திதியில் இருந்துகொண்டு, பதார்த்தம் – நான் என்று துவைத திருஷ்டியை நாசம் செய்யவேண்டும். நான் என்ற உணர்ச்சி நசித்தால் பிரம்மந்தான் மிஞ் சும். பிரபஞ்சமெல்லாமுமே பிரம்மம். இந்த நோக் கத்தில் இருப்போரை வாயால் உரைப்பதோ அல்லது மனத்தால் அறிவதோ அசாத்யம். அந்த ஸ்திதியின் சொரூபத்தைச் சொந்த அநுபவத்தில்தான் தெரிந்து கொள்ள முடியுமே தவிர வேறு எவ்விதத்திலும் அறிய முடியாது.

## 33. மகாராமாயணத்தின் பாகங்கள்

நான் சொல்லிவரும் இந்த ஞானோபதேசம் முப்பத்திரண்டாயிரம் சுலோகங்களில் அமைந்துள் ளது; ஆறு பாகங்கள் கொண்டது.

1. முதல் பாகமானது வைராக்யத்தைப் பற்றி ஆயிரத்து ஐந்நூறு சுலோகங்களில் சொல்லி இருக்கின்றது. விசாரணைக்குக் காரணம் வைராக்யமே.

2. இரண்டாவதான முமுக்ஷுப் பிரகரணம், தெய்வம் என்பதைப் பற்றி விவரித்துச் சொல்லி, மோக்ஷத்தை அடையக் கைப்பற்றும் உபாயங்களையும் எடுத்துக் காட்டுகின்றது. இது ஆயிரம் சுலோகங்களில் அமைக்கப்பட்டிருக்கின்றது.

3. மூன்றாவதான உற்பத்திப் பிரகரணம் நம்முடைய உற்பத்தியைப் பற்றியது. அதாவது "நான் யார்" என்ற விசாரணையைக் கொண்டது. அநேகமாய் எல்லாம் கதா ரூபமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இது ஏழாயிரம் சுலோகங்களில் அடங்கியுள்ளது.

4. நான்காவதான ஸ்திதிப் பிரகரணம், நாம் இருக்கும் நிலையை, அதாவது அகங்காரத்தைப் பற்றி மூவாயிரம் சுலோகங்களில் சொல்லியிருக்கிறது.

5. ஐந்தாவதாகிய உபசாந்திப் பிரகரணம், ஐயாயிரம் சுலோகங்களில் அடங்கி, சம்சாரத்திலிருந்து விடுதலை அடைய வழி காட்டுகிறது. இது ஒன்றை ஆராய்ந்து அறிந்துகொண்டால் விடுதலை அடைவதில் சந்தேகமில்லை.

6. கடைசியான நிர்வாணப் பிரகரணம் 14,500 சுலோகங்களால் விஸ்தாரமடைந்தது. இது முக்தியைப் பற்றியும், முக்தி அடைந்தவர்கள் சொரூபத்தைப் பற்றியும் சொல்லுகின்றது.

இந்நூலில் சொல்லியவை யெல்லாம் நியாயத்திற்கோ யுக்திக்கோ விரோதமாக இல்லாமல்,

அநுபவத்திலிருந்தே சொல்லப்பட் டிருக்கின்றன. ஆகையால் விவேகிகளால் அங்கீகரிக்கப்படாதது எதுவும் இல்லை. சகல சாஸ்திரங்களின் சார மாகவே இருக்கும், இங்கே சொல்லப் பட்டவை. இதைப் பற்றிச் சந்தேகமே தேவையில்லை. எவன் இந்த நூலைப் படித்துக் கிரகித்துக்கொண்டு விடா முயற்சியோடு ஆராய்ந்து வருகிருனே அவன் சம்சா ரத்திலிருந்து விடுதலை அடைவது திண்ணம். இதையே படித்துச் சாதகம் செய்வோருக்கு வேறு எவ்வித மார்க் கமும், அதாவது தீர்த்த யாத்திரை, கர்மாநுஷ்டானங் கள். யோகம், நிஷ்டை இவைகள் யாவுமே தேவை யில்லை. தனிமையாகவும் சௌகரியமாகவும் அமர்ந்து ஆராய்ச்சி செய்வதே இங்கே உரைத்திருக்கும் ஞான மார்க்கம்.

### 34. இந்த ராமாயணம் அமைக்கப்பட்ட முறை

இந்த ஞானோபதேசத்தைப் படிக்கத் தெரியாத வர்கள்கூடப் பண்டிதர்களைக் கொண்டு படித்துக் கேட்டு அறிந்துகொள்ளலாம். எல்லோருக்கும் புரியும் படி எளிய அழகிய நடையில் சுலோகங்கள் அமைக் கப்பட் டிருக்கின்றன. விவேகம் கதா ரூபமாக அநேக திருஷ்டாந்தங்களோடு போதிக்கப்பட் டிருக்கிறது. சொரூபமில்லாத பிரம்மம் சொரூபமுள்ள திருஷ்டாந் தங்களால்தான் நிரூபிக்கப்பட் டிருக்கிறது. ஆனல் இந்த உபமானங்களில் சந்தர்ப்பத்திற்கு வேண்டிய அளவுதான் பொருத்தத்தை எதிர்பார்க்கவேண்டும். முழுப் பொருத்தமும் எதிர்பார்க்கத் தகாது. ஏனெ னில் பிரம்மம் புத்தியின் எல்லையைக் கடந்தது; திருஷ் டாந்தங்களோ அளவுக்கு அடங்கியவைகள். ஆனல்

இவ்வித உபமானங்கள் இல்லாமல் தத்துவங்கள் புத்திக்குப் புலப்படா. கேட்பவர் புத்தியும் ஓர் அளவுக்கு உட்பட்டதே. அதேமாதிரிதான் சொல்லுபவரின் வாக்கும். ஆகையால் விஸ்தாரமாக எடுத்துரைத்து உபமானங்களால் தெளிவு படுத்தாமல் புத்தியால் கிரகிக்க முடியாது.

ஆகையால் அளவுக்குட்பட்ட திருஷ்டாந்தங்களால் ரூபமற்ற பிரம்மத்தை எப்படி நிர்ணயிப்பது என்னும் கேள்விக்கு இடமில்லை. அது கோணல் யுக்தியே தவிரச் சரியான கேள்வி ஆகாது. பார்க்கும் பொழுது இந்தப் பிரபஞ்சமே ஒரு கற்பனை; அநித்தியம்.

## 35. பிரத்தியக்ஷப் பிரமாணம் – இதனுல் ஆத்மாவை அறிவது

ஆத்ம சத்தியத்தை ஸ்தாபிக்கத் திருஷ்டாந்தங்கள் இல்லாமலும் முடியும், அதாவது எவற்றையும் சந்தேகமில்லாமல் ஸ்தாபிக்கக்கூடிய பிரத்தியக்ஷப் பிரமாணத்தால். பிரத்திய்க்ஷம் என்பது நம் இந்திரியங்களால் அறியப் படுபவைகளுக்குச் சொல்வதே. இந்த அறிவை மனத்தில் ஏற்றுக்கொண்டால் அதுதான் அநுபவம். எல்லா அநுபவத்திலும் மேலானது, கண்களினுல் அறிந்த அநுபவம். இதைத்தான் முதல் பிரத்தியக்ஷமாக அங்கீகரிக்கிறேம். இது மூன்று வகைப்பட்டது; (1) முன் ஜன்மத்திலே: பார்த்ததையோ அல்லது இந்த ஜன்மத்திலேயே பார்த்தது ஒன்றை மறந்து இருக்கும் நிலையிலோ இதரப் பிரமாணங்களினுல் ஒன்றை நம்புவது; (2) ஏற்கனவே பார்க்கப்பட்டது ஒன்று மறுபடியும் கண்ணுக்குப் புலன்பட்டால் அப்பொழுது அநுபவமாகிறது;

(3) தற்சமயம் முதல் தடவை நம் கண்முன் இருப்பதை மனத்தில் ஏற்றுக்கொள்வது உணர்ச்சியாகும். இம் மூன்றுவிதப் பிரமாணங்களும் சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு பெயரிடப்பட்ட ஒரே பிரமாணமாகிய பிரத்தியக்ஷம். இதுவே அறிவு, இதுவே ஜீவன், இதுவே புருஷன். இதுவே நமது அகங்காரத்திற்குக் காரணமாக இருப்பதும். அறிவுக்கு வஸ்துக்கள் புலப்படுகிறபொழுது பார்க்கப்படுபவைகளெல்லாம் தோற்றங்களாக நிற்கின்றன. அகண்டமான பார்வையே பிரபஞ்சமான தோற்றம். தண்ணீர் எப்படி அலையாகத் தோற்றமளிக்கிறதோ அதுபோல இந்த ஜீவன் தன்னிடத்திலிருந்து கிளம்பியதும் தன் சொரூபமாயுள்ளதுமான பிரபஞ்சத்தைத்தான் தோற்றமாகக் காண்கிறது. ஆனால் ஆராய்ச்சி செய்கையில் இந்தத் தோற்றம் பொய்யென அறிந்து பிறகு மகத்தான பரம பதத்தைப் பிரத்தியக்ஷமாக்கிக் கொள்கிறது. அதாவது அஞ்ஞானம் அழிந்ததும் ஜீவன் பிரம்மத்தைப் பிரத்தியக்ஷமாக அநுபவித்து அதிலேயே கலந்து நிற்கின்றது.

36. முடிவு

ஆகவே இந்த ஆத்ம லாபத்தை அடைய நாம் எடுத்துக் காட்டிய மார்க்கங்களைத் தவிர்த்து வேறு மார்க்கம் கிடையாது. இருந்தபோதிலும் இவைகளை ஏற்றுக் கொள்ளாதவர்கள் வேறு சாஸ்திரங்களை யாவது ஆராய்ச்சி செய்து அடைய வேண்டிய பதவியை அடைந்தால் சரியே. எப்படியும்* சாந்தகுணம், ஞானிகளின் சேர்க்கை, தீவிர விசாரணை ஆகியவை மிக அவசியம். இவை ஒன்றுக்கொன்று ஆதாரமாயிருப்பதால் நாளடைவில் மூன்றும் பலப்பட்டுப்

பலனைக் கொடுக்கும். நீ ஏற்கனவே விவேகியாயிருப்பதால் வெகு சீக்கிரம் உனக்கு முக்தி சித்திக்கும்.

முமுக்ஷு வியவகாரப் பிரகரணம் முற்றிற்று.

---

மொழிபெயர்த்தவர் குறிப்பு

தெய்வம் என்னும் கொள்கை எல்லாத் தேசங்களிலும் எக்காலத்திலும் மிகப் பிரபலமாக இருந்துவருகிறது. இதைப்பற்றி ஆராய்ச்சி செய்து வாஸ்தவமென்னவென்று அறிந்தவர்கள் வசிஷ்டரைப் போன்ற சில மகரிஷிகளே. இவர்களால் அறியப்பட்ட தத்துவம் வெளியிடப்பட்டும், அது பிரபலமாக வழங்காமல் ஜனக்கூட்டங்கள் மோகத்திலேயே இருந்து வருகிறார்கள். இதற்குக் காரணங்கள் இரண்டு வகை:—(1) கஷ்டங்கள் நேர்ந்த காலத்தில் இவைகளை நீக்கிக்கொள்ள வழிதெரியாமல் பொது ஜனங்கள் தெய்வத்தின்மேல் பாரத்தைச் சுமத்துகிறார்கள். அவர்களுடைய கஷ்டங்களை ஏற்றுக் கொள்ள ஒரு தெய்வம் வேண்டியிருக்கிறது. எவ்வளவு ஞானி இருந்தாலும் சில சந்தர்ப்பங்களில் அவனுக்கும் மனம் சோர்வடைந்துவிடுகிறது; (2) தெய்வமென்பது கிடையாது என்னும் கொள்கை, பொது ஜனங்களுக்குள் பரவினால், பயமழிந்து அநீதியும் அக்கிரமமும் அதிகமாக ஏற்படுமே என்ற பயம்.

இவ்விரண்டு காரணங்களையும் சோதித்துப் பார்க்கையில், ஒரு பொய்யான கற்பனையை ஜனங்களுக்குப் போதிப்பது தவறென்றே தோன்றுகிறது. முதலில், கஷ்டங்கள் சம்பவித்தால், வசிஷ்டர் சொல்லியபடி, அவைகளை நீக்கிக்கொள்ள வேண்டிய உபாயங்களைச் செய்தால் தீருமே ஒழிய தெய்வத்தால்

செய்யக்கூடுமா? இல்லாத தெய்வம் எதைச் செய்யக் கூடும்? நமது குற்றங்களால் ஏற்படும் கஷ்ட நிஷ்டூரங் களை தெய்வமா ஏற்றுக்கொள்ள வேண்டும்? நாம் செய்த முயற்சிகள் சரியாயிருந்தால் கஷ்டம் தானாகவே நீங்கும். முயற்சி சரியின்றி எவ்விதம் நீங்கும்? பல னடையாவிட்டால் இன்னும் அதிக யத்தனம் செய்ய வேண்டியதே முறை; அதாவது பலன் கைகூடும் பரியந்தம்.

இரண்டாவது காரணமும் சரியென்று சொல்வ தற்கில்லை. தெய்வம் என்னும் கொள்கையில் ஈடு பட்டவர்களால் செய்யப்படும் அக்கிரமங்கள் கணக் கிட முடியா. தெய்வத்தின் பெயராலேயே அநேக அநியாயங்கள் நடந்துவருகின்றன. ஒரு மதத்தார் இன்னொரு மதத்தாரைத் தங்கள் தெய்வத்தின் காரண மாகச் செய்திருக்கும் அநியாயங்கள் கணக்கில் அடங்கா. ஆகையால் துன்மார்க்கங்கள் இக்கொள்கை யால் குறையுமென்பதற்குக் காரணமே இல்லை. இதை ஒழித்து, அவனவன் செய்யும் கர்ம பலன்களை அவ னவன் அநுபவித்தே தீரவேண்டுமென்றும், தப்பவே முடியாதென்றும் அறிந்துகொண்டால் அநியாயம் கட்டாயம் குறையும்; அப்படிக் குறையாவிட்டாலும் அதிகரிக்காது. ஆகவே அசாத்தியமான ஒரு கொள்கையை ஜனங்களுக்குப் போதித்து ஏன் ஏமாற்ற வேண்டும்?

# 3

## உற்பத்திப் பிரகரணம்

## ("நான் யார்?" என்னும் விசாரணை)

### 37. "நான்" என்பதும் "பந்தம்" என்பதும் என்ன?

வால்மீகி: இந்தப் பிரகரணத்தில் மேலே சொல்லப் போகிறவைகளை இங்கே சுருக்கமாகச் சொல்லுகிறேன் கேள், என்று வசிஷ்டர் சொல்லத் தொடங்கினார்.

வசிஷ்டர் 1. அது, இது, நான் என்னும் சப்தங்கள் கூடிய வாக்கின் பிரகாசங்களால் சுட்டிக் காட்டப்படும் பிரபஞ்சம், அல்லது பிரம்ம வித், தன்னிடத்திலே பிரம்மம் காணும் கனவாகிய தோற்றமே. இந்தப் பிரபஞ்சம் பிரம்மத்தில் அடங்கியுள்ளது. இது ஒரு தோற்றமல்லாது வாஸ்தவமில்லை. வாக்கின் குறைப்பாட்டினால் பிரம்மத்தை விட்டு வேருகக் கருதப்பட்டு வருகிறது. யதார்த்தமாக, பிரம்மமேதான் ஜகத் தோற்றமும்.

2. பிரம்மத்தை எவன் யாதொன்ருகக் கருதுகிருனே அவன் பிரம்மத்தை அதாகவே உணருகிருன். அதாவது பிரம்மம் நம்மால் எவ்விதமாகக் கருதப்பட்டாலும் அவ்விதமான தோற்றத்தையோ, உணர்ச்சியையோ அது கொடுக்கிறது. ஏனெனில் கருதுபவனும் தோற்றமும் பிரம்மத்தில் அடங்கியவையாதலால்.

3. இந்தப் பிரபஞ்சம் என்பது என்ன? இது யாருடையது? இது எங்குள்ளது? என்னும் கேள்விகளுக்கு பதில் மேல் சொன்னதிலேயே காணலாம்,

அதாவது பிரபஞ்சம் பிரம்மத்தைத் தவிர வேறல்ல என்பதில்.

4. அடுத்த கேள்வியாகிய "பந்தம் என்பது என்ன?" என்பதற்கு இங்கே விடையளிப்போம்.

நமது இந்திரியங்களுக்குப் புலன் படுபவைகளே பந்தத்திற்குக் காரணம். இந்திரியங்களுக்குப் புலப் படாவிட்டால் பந்தமே கிடையாது. ஒரு பதார்த்தத் தைப் பார்க்கும்பொழுது நேத்திரஉணர்ச்சியால் அறிவு ஏற்படுகிறது, அதாவது அறிவு பதார்த்தத்திற்குச் சாட்சியாய் நிற்கிறது. இதன் பிறகு இந்தப் பதார்த் தத்தை மனத்தில் ஸ்மரித்து வந்தால் அதனுல் பந்தம் ஏற்படுகிறது. ஸ்மரிக்கப்படாம லிருந்தால் பந்தம் ஏற்பட முடியாது.

ஆகவே பந்தமென்பது உணர்ச்சிகளால் ஏற் படுவது. இந்த உணர்ச்சி என்பது எப்படி ஏற்படு கிறது? என்பது அடுத்த கேள்வி. எவன் உற்பத்தி யாகிருனே அவனுக்குத்தான் உணர்ச்சியும் உண்டு. உணர்வோனில்லாமல் உணர்ச்சியுமில்லை. இந்த உணர் வோன் எங்கே உற்பத்தியாகிருன் என்று கேட்டால், சம்சாரத்திலேதான், அதாவது பிரபஞ்சத்தில். அப்படி யானுல் இந்தப் பிரபஞ்சம் ஏற்படுவதற்கு முன்னுல் எப்படி இருந்தது என்று கேட்கலாம்.

## 38. பிரம்மத்திற்கும் பிரபஞ்சத்திற்குமுள்ள சம்பந்தம்

பிரபஞ்சம் உற்பத்தியாகும் முன் எப்படி இருந்த தென்ருல், ஒருவன் சொப்பனத்திற்குப் பிறகு நல்ல நித்திரையில் என்ன காட்சியைக் காண்கிருனே அது போலவேதான். அலை அடங்கின சமுத்திரம்போல் கம்பீரமான காட்சி. அங்கே பிரகாசமுமில்லை, இருளும்

இல்லை. எல்லாம் அடங்கி ஒடுங்கி அமைதிக் கடல் போல் நிற்கும். வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாத சாசுவதமான ஸ்திதி. வியவகாரத்தின் பொருட்டு இதைத்தான் பல பெயரிட்டுப் பிரம்மமென்றும், ஆத்மாவென்றும், சித்தென்றும் சொல்லிவருகிறோம்.

சமுத்திரத்திலிருந்து கிளம்பும் ஜலத்தை ஜலமென்றோ கடலென்றோ கூறாமல் அலையென்று தனிப்பெயரிட்டு அழைப்பதுபோல, பிரம்மத்தில் அடங்கியும் அந்தரங்கமாயும் இருக்கும் பிரபஞ்சம், இயக்கத்தால் ஏற்படும் அசைவினால், வெளிக்கிளம்பிய தோற்றத்தைக் கொடுக்கிறது. ஜீவனென்பதும் இவ்விதம் ஏற்பட்ட பிரம்மவித்தே. பிரம்மத்திலிருந்து வெளிக்கிளம்பியதும் தான் வேறென்று தானாகவே தோன்றுகின்றது. இந்த எண்ணம் உதித்தவுடன் தன் பூர்வ நிலை மறந்து, தனித்தோற்றம் அதனால் அதிகரித்து இதன் காரணத்தால் பூர்வம் மேலும் மறந்து பிரபஞ்ச நோக்கத்தில் ஈடுபட்டுக் கொள்கிறது. இந்த ஈடுபாட்டினால் நாளடைவில் பூர்வ நிலைமை அடியோடு மறந்து பிரபஞ்சத் தோற்றத்திலேயே முற்றும் வேரூன்றி, பந்தத்திற்கு உட்பட்டு, அதிலிருந்து தப்பித்துக்கொள்ள முடியாமல் ஜீவன் திண்டாடுகிறது. ஆகவே பிரம்மத்திலிருந்து கிளம்பின தன்னை வேறாக நினைத்ததும் ஜீவனாகக் கருதப்பட்டு, இந்த ஜீவன் தன் கூடவே கிளம்பிய பிரபஞ்சத்தை நோக்கி அதில் நாளடைவில் ஈடுபட்டு, மனதாக நின்று, பந்தத்தில் வேரூன்றி, அதிலேயே பிறப்பு இறப்பை அநுபவித்து வருகிறது. ஆதலால் நாம், அதாவது பிரபஞ்சம், எவ்வித நிலைமையிலிருந்தாலும் பிரம்மத்தில் அடங்கியும் அதைத் தவிர்த்து வேறாக

மலுந்தான் நிலை நிற்க முடியும். பிரம்மம் பிரபஞ்சத்தின் ஒவ்வொரு பரமாணுவிலும் தண்ணீரில் இருக்கும் சர்க்கரைபோல் வியாபித்து, தன்னைவிட்டு வேருக இராவண்ணம் ஊடுருவி நிற்கிறது. தங்கத்திஞல் செய்யப்பட்ட பொருள் வளையலென்று கூறப்படினும் அதன் ஒவ்வொரு பரமாணுவிலும் தங்கத்தைத் தவிர்த்து வேறென்றுமில்லை. வளையல் தங்கமயமாகத்தான் இருக்கிறது. பிரபஞ்சத்திலும் அப்படியே; அதில் பிரம்மத்தைத் தவிர வேறென்றுமில்லை, பிரம்மமின்றி நிலைநிற்க முடியாது. உண்டாஞலும் அழிந்தாலும் அது பிரம்மமே.

## 39. பிரம்மமும் மனஸும்

இப்படி எல்லாம் பிரம்ம மயமாக இருந்தும், பந்தத்தின் காரணமாக, பிரம்மம் மனதென்ற தாழ்ந்த நிலையை அடைந்தவுடன், அதன் காட்சியும் நோக்கமும் மாறிவிடுகின்றன. இந்த ஸ்திதியில்தான் பந்தம் மாயை என்னும் பலவாருகக் கூறப்படும் மோகம் ஜீவனுக்கு ஏற்படுவதுபோல் தோன்றுகிறது. இவைகள் நாளுக்கு நாள் ஸ்திரப்பட்டும் வளர்ந்தும் பிரம்மாண்டமென்பது ஏற்படுகிறது. இப்படி வெளிப்படையில் ஜகத்தாகத் தோன்றுவது, மனது என்னும் ஸ்திதியை அடைந்த பிரம்மத்தில் சூக்ஷ்மமாக இருந்து கொண்டே இருக்கிறது. மரமானது விதையில் எப்படி சூக்ஷ்மமாக இருக்கிறதோ அப்படியே பிரபஞ்சமும் நம் மனத்தில் எப்பொழுதும் சூக்ஷ்மமாக இருக்கிறது.

## 40. பந்தம் நீங்க அநுசரிக்கப்படும் உபாயங்கள்

மேற் சொன்னதிலிருந்து நாம் அறிவது, மோக்ஷத்தை அடைய நாம் செய்ய வேண்டிய

உபாயம் "உணர்ச்சி" என்பதைத் தழுவி நிற்பதாக. ஏனெனில் இதுதான் பந்தத்திற்குக் காரணம். ஆகவே விடுதலை அடைய உணர்ச்சி நசிக்கவேண்டும். இதை எப்படி அடைவது? ஜபம், தபம் என்னும் முறைகள், அவைகளில் பந்தத்தை அதிகரிக்கின்றனவே தவிர இருப்பவைகளை ஒழியச் செய்வதில்லை. தீர்த்த யாத்திரை, தர்க்கம் இவைகளாலும் முடியாது. இவைகளுக்கெல்லாம் மேலாகக் கருதப்படும் "இல்லை, இல்லை" என்னும் சித்தாந்தத்தினுலாவது அடையப் படுமா? இருப்பதை இல்லையென்று சொல்வது எவ்வாறு? இல்லாதிருந்தால் தோற்றம் எப்படி ஏற்படுகிறது? இம்மார்க்கத்தினுல் பந்தம் இன்னும் ஸ்திரப்படுமே தவிர நீங்குவதில்லை. யோகப் பயிற்சியாலும், இந்திரியங்களை அடக்கிக் கல்லைப்போலிருந்தும் பந்தத்தை நீக்கிக் கொள்ளலாமென்று சிலரின் உத்தேசம். இதுவும் நடவாத காரியம். கல்லைப் போல் எவ்வளவு நாள் இருக்க முடியும்? அல்லது நிர்விகல்ப சமாதியால் அடையலாமா? அப்படி நீங்குவதாக இருந்தாலும் கண்ணை விழித்தவுடனே பழைய நிலைக்குத்தானே திரும்பவேண்டும்? மேலும் இப்படிச் சொற்பகாலம் துரீய பதவியை அடைவதில் லாபமென்ன? ஆகவே மேற்சொன்ன உபாயங்கள் அனைத்தும் நம்மை நாமே ஏமாற்றிக்கொள்ளும் வித்தைகளே. இம்மார்க்கங்களை அநுசரித்து 'திருச்யம் அல்லது உணர்ச்சி'யை நீக்கிக்கொண்டவர்களை இங்கே கூடியிருக்கும் மகரிஷிகளில் யாரும் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. ஆகையால் அவை யாவும் சரியான மார்க்கங்களாகா.

பூவைவிட்டு மணம் எபபடித் தனித்திருக்காதோ, அல்லது எள்ளில் எண்ணெய் எப்படி வியாபித்திருக்

கிறதோ, அதேமாதிரி பார்வை உணர்ச்சி என்பது பார்ப்பவன் உணர்வோனுடன் கூடியே இருக்கப் பட்டது. ஆகையால் பார்ப்பவன் அழிந்தால்தான் பார்வை நசிக்கக்கூடும். பார்வை என்பதில் நோக்க மில்லாமல் செய்துகொள்ளுவதில்தான் அது நசிக்கும். இப்படிச் செய்வதால் சித்தானது விகற்பமற்ற தன்மையை அடைகிறது. இதற்குத் திருஷ்டாந்தமாக ஒரு கதை சொல்லுகிறேன் கேள்.

41. ஆகாசஜன் கதை

முன்னொரு காலத்தில் யுகாந்தரமுடிவில் மகாப் பிரளயம் ஏற்பட்டபொழுது, யமதர்மராஜனுடைய காரியதரிசிகள், தங்களுக்கு ஏற்பட்ட கட்டளைப்படி, எல்லா ஜீவன்களையும் இரையாக்கிக் கொண்டு வரு கையில் 'ஆகாசஜன்' என்னும் பிராம்மணன் மட்டும் ஒரு கவலையுமில்லாமல் ஜீவித்திருந்தான். யமனுடைய முக்கிய காரியதரிசியான மிருத்யு இதைக் கவனித்து, தனக்குக் கீழ்ப்பட்டவர்களால் விடப்பட்ட ஜீவனைத் தானே அழிப்பதாகப் புறப்பட்டான். பிராம்மணன் இருப்பிடத்தைச் சேர்ந்து, ஆனால் அவனை நெருங்க முடியாமலிருப்பதைக் கண்டான். அவனிடமிருந்து கிளம்பிய தேஜஸ் அவ்வளவு பிரகாசமாக இருந்தது. பிறகு தன் சக்திகளை யெல்லாம் சேர்த்து ஒருவாறு உள் நுழைந்து பிராம்மணனை வாரியெடுக்க முயன்றான். ஆனால் அவன் கைக்கு ஒன்றும் உருப்படியாக அகப் படவில்லை. வெகுநேரம் சிரமப்பட்டான். யாதும் பயனில்லை. என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்து, கடைசியில் தன் யஜமானனை யோசனை கேட்டு வரலாமென்று திரும்பினான். யஜமானனுக்கு

நடந்த சம்பவங்களைத் தெரிவித்தான். யமன் அவைகளைக் கேட்டு மிருத்யுவை நோக்கி, "உன் இஷ்டப்படி ஜீவன்களை அழிக்கலாமென்று நீ எண்ணுவது தவறு. அதைச் செய்ய எவராலும் முடியாது. ஒவ்வொரு பிராணியும், தன் கர்மத்தாலேதான் தன் நாசத்தை விதித்துக் கொள்ளுகிறது. கர்மந்தான் ஜீவன்களுக்குக் காலம். ஆகையால் தானாகவே நசித்து வருவதுதான் உனக்கு இரையாகும். ஆதலால் அந்தப் பிராம்மணனுடைய கர்மத்தைத் தெரிந்துகொண்டால் அவனுடைய ஆயுள் காலத்தையும் அறிவாய்" என்றான். இதைக் கேட்டதும் மிருத்யு உடனே புறப்பட்டுப் பிராம்மணனுடைய கர்மங்களைத் தேடும் பொருட்டுப் பிரபஞ்சமெல்லாம் அலைந்து திரிந்து எங்கும் தகவல் அகப்படாமல் கவலையுடன் மறுபடியும் யமனை நாடிச்சென்றான். எங்கே தேடியும் கர்ம சேஷம் யாதும் இருப்பதாகத் தெரியவில்லை என்று யமனிடம் சொல்லி, இந்த ஆகாசஜனுடைய சொரூபத்தைப்பற்றிச் சொல்லும்படியும் வேண்டிக்கொண்டான்.

யமன்: ஆகாசஜனுடைய சொரூபம் நிர்மலமான ஆகாசந்தான். பஞ்ச பூதங்களின் சம்பந்தம் இல்லாததால், உருவமும் அமைப்பும் அவனுக்கு இல்லை. உதவிக் காரணங்களைத் தழுவியோ அல்லது அவைகள் சம்பந்தமில்லாமலோ எது ஒன்று உண்டாகிறதோ அது தன் மூல காரணத்தைத் தவிர வேறாக, அதாவது இவ்விடத்தில் காரியமாக, மாறுதல் அடைய முடியாது. இது அநுபவத்தில்

தெரிந்த தத்துவம். இங்கே இந்த ஆகாசஜ னுக்குப் பூர்வ கர்மம் ஒன்றுமில்லை. இப் பொழுதும் கர்மமாகிய அநுபவம் இல்லை. அதாவது அவனுக்குப் பிரபஞ்சத்தில் நோக்கமே இல்லை. சித்தின் அசைவின்றி இருக்கிறன். ஒரு பிராண அசைவு இருப்ப தாகத் தோன்றுவதும் பார்ப்போர்க்கே தவிர, அவனுக்கு அதிலும் நோக்கம் இல்லை. அவன் கேவல சித் சொரூபமாக இருக்கிறன். இக்காரணங்களால் அவனுக்கு அழிவே இல்லை. மரணத்தின் நினைவு யார் மனத்தில் உதிக் கிறதோ அவன்தான் அதற்கு இரையாவான். ஆகாசஜனே இவ்வித நினைவு யாதுமின்றி ஞான சொரூபமாகவே இருக்கிறன்.

நாம் காணும் சொரூபம் நமது தோற்றத்தில் ஏற்படுவது; இதற்குக் காரணம் அமைதிக் கடலா கிய பிரம்மத்தில் ஆதியில் ஏற்பட்ட அசைவே. இந்த அசைவு எங்குள்ளது என்றல் அது பிரம்மத்தில் அடங்கியுள்ளதே, அதைவிட்டுப் பிரிக்க முடியாததே. தண்ணீரிலிருந்து ஓடும் தன்மையைப் பிரிக்க முடியுமா? அல்லது காற்றி லிருந்து அசைவை அகற்ற முடியுமா? அது போல் பிரம்மத்திலிருந்து 'ஸ்பந்தம்' அல்லது இயக்கம் என்பதைப் பிரிக்க முடியாது. இந்த ஸ்பந்தத்தின் காரணமாகத்தான் சிருஷ்டி ஏற்படுவதும், இத்துடன் 'நான்' என்னும் நினைவு அதிகரிப்பதால் பிரபஞ்சமும் விஸ்தார மடைகிறது. ஆகவே இந்த ஆகாசஜன் உதவிக் காரணங்களின்றித் தன் சுய சொரூபமாகிய

சூன்யத்தில் நிற்கிறான். ஆதலால் இப்பேர்ப் பட்டவனை நீ எப்படி உன் வசமாக்கிக் கொள்ள முடியும்?

மிருத்யு: சூன்யத்திலிருந்து உண்டாவது எப்படி? பஞ்சபூதங்கள் இருப்பது எப்படி? இல்லாமல் போவது எப்படி?

யமன்:—மகாப் பிரளயமென்ற ஸ்திதி ஏற்பட்டால் சர்வமும் ஐக்கிய மடைகின்றன. அப்பொழுது மிஞ்சுவது என்ன? அது சூன்யமே, அதுவே பூர்ணமும். காரணம் காரியம் இரண்டும் நசித்தால் மிஞ்சுவது என்ன? அது சூன்யமே, அதுவே பூர்ணம். சொப்பனத்தில் அநுபவிப்பதெல்லாம் என்ன? காரணம் சூன்யமாக இருந்தும் ஸ்தூல தேகம் எப்படி அசையப்படுகிறது. அதுபோலவேதான் இந்தச் சூன்யமான பூர்ணத்திலிருந்து உற்பத்தியான தோற்றமும் நாச மடையும் தோற்றமும் உண்டாகின்றன. பிரபஞ்சம் ஏற்பட்டதாக இருந்தால் அது நாசத்தை அடையவேண்டியதும் திட்டம். உற்பத்தியாவதற்கும் நாசமடைவதற்கும் காரணமாய் ஒன்று சாசுவதமாய் இருந்தே தீரவேண்டும். இது எந்த க்ஷணத்திலும், எக்காலத்திலும் உற்பத்தி நாசமாகிய நியதி கர்மங்கள் ஏற்படும்படி, ஸ்திரமாயும் சாக்ஷியாகவும் நிற்க வேண்டும். எப்பொழுதும் சாக்ஷியாக இருப்பதென்றால் அது ஒருவித விகல்பமும் அடையக் கூடாது. ஆனால் அது எவ்வாறும் நம் புத்திக்குப் புலப்படுவதில்லை. ஆதலால் அது சூன்யமே

ஆயினும் இதிலிருந்துதான் இந்தப்பிரம்மாண்டம் உற்பத்தியாவதும் லயமடைவதும் ஆகையால் அதுவே பூர்ணம். இப்படி இருக்கும் பிராமணனை நீ எப்படி உன் வசமாக்கிக் கொள்ள முடியும்?

இதைக் கேட்ட மிருத்யுவுக்குத் தன் யோக்கியதை புலப்பட்டு மேல் செய்யும் பிரயத்தனங்கள் வியர்த்தமென்று அறிந்துகொண்டான்.

வால்மீகி: ராமன், இக்கதை முடிந்ததும், அந்தப் பிராமணன் பிரம்மாவாவென்று வசிஷ்டரைக் கேட்டான். வசிஷ்டர் ஆம் என்று சொல்லி, ராமன் மிக கவனமாகத் தன் வாக்குகளைக் கவனிப்பதைப் பற்றிப் புகழ்ந்தார்.

வசிஷ்டர்:—மேல்சொல்லிய தத்துவங்களைச் சுருக்கிச்சொல்ல, பிரபஞ்சம் சித்தில் சுயமாயும் சூக்ஷ்மரூபமாயும் எப்பொழுதும் இருந்து வருகிறது. சித்திற்கு உணர்ச்சி என்பது இயல்பாகவே ஏற்பட்டிருக்கிறது. உணர்ச்சிகளின் வளர்ச்சியே சம்சாரமாகும். ஆகையால் இவ்வுணர்ச்சிகள் நசிக்கச் சித்தின் நோக்கத்தைத் திருப்புவதில் பிரயத்தனம் இருக்கவேண்டும்.

42. பிரம்மா - மனம்

வால்மீகி: இதைக் கேட்ட ராமனுக்கு ஒரு சந்தேகம் தோன்றி, அதை நிவர்த்தி செய்யும்படி கேட்டான்.

ராமன்: இது வரையில் சொல்லியதிலிருந்து ஏற்படுவது மனஸ் என்பதுதான் பிரம்மா என்று. அப்படியாயின் பூர்வ ஸ்மிருதியினால் நமக்கெல்லாம் ஏற்படும் சம்சார நிலை பிரம்மாவுக்கும்

ஆதி ஸ்மிருதியின் காரணத்தால் ஏன் ஏற்படவில்லை?

**வசிஷ்டர்:**– நமக்கு உண்டாகும் ஸ்மிருதி சங்கல்பத்தோடு கூடி இருக்கிறது; மேலும் அது ஸ்தூல சரீரத்தைச் சேர்ந்தும் இருக்கிறது. ஆகையால் நாம் காரண காரிய விதிக்குப் பாத்திரமாகிறோம். பிரம்மாவுக்கோ பூத சம்பந்தமான சரீரம் இல்லை. ஆகையால் பிரபஞ்ச ஈடுபாடும் இல்லை. இருப்பதெல்லாம் நம் தோற்றத்தில் ஏற்படும் ஒரு சூக்ஷ்ம சரீரமே. மேலும் பிரம்மாவுக்குச் சங்கல்பமாவது அறியும் நோக்கமாவது இல்லை. ஆகையால் தனக்குத்தானே காரணமாக இருக்கிறான்.

## 43. ஜீவராசிகளின் இரு தேகம்

**ராமன்:** எல்லாப் பூத ஜாதிகளும் பிரம்மாவினால் ஏற்பட்டிருக்கும்பொழுது அவனுக்கு மாத்திரம் ஒரு சரீரமும், மற்ற ஜீவன்களுக்கெல்லாம் இரண்டு சரீரமும் எப்படி உண்டாகின்றன?

**வசிஷ்டர்:** நமக்கு இரண்டு சரீரங்கள் ஏற்பட்டது காரண காரிய வசத்தால். இந்த இரண்டாவது சரீரம் ஏற்படும் கிரமம் என்னவென்றால், ஜீவன் தன் சுய நிலையை அப்போதைக்கு அப்போது மறந்து வெளி நோக்கமாகிய உணர்ச்சிகள் அதிகரித்து இதனால் சம்சார சக்கரத்தில் சிக்கிக்கொள்வதே. ஆகவே ஜீவன்களுக்குக் காரண காரிய சம்பந்த பாவம் உண்டு; ஆனால் பிரம்மாவுக்கோ வெளி நோக்கமாவது அதனால் ஏற்படும் கர்மமாவது இல்லாமலிருப்பதால் ஒரு சரீரத் தோற்றந்தான் உண்டு.

## 44. பூத உடல் அசத்தியம்

பிரம்மத்திலிருந்து உண்டான ஜீவன்களுக்கு இந்தச் சூக்ஷ்ம சரீரம் இல்லாமலிருக்க முடியாது. மேலும் இந்தச் சரீரம் மாறுதல் அடையமுடியாது. ஆகையால் அது சத்தியமாகவே பிரவிருத்திக்க வேண்டும். மாறுதல் அடைவதென்றால் சத்தியத்தோடு சத்தியம் கலந்தால்தான் முடியும். அசத்தியம் சத்தியத்துடன் சேர இயலாது. ஆகையால் ஜீவராசிகளிடம் தோன்றப்படும் பூத சரீரம் அசத்தியமே; அதாவது வெறும் தோற்றம்.

பிரபஞ்சம் தோற்றமாக இருந்தால் நம்மை எப்படிப் பாதித்து வருகிறதென்று கேட்கலாம். கனவில் காணும் ஸ்திரீ நம் தேகத்தை எப்படிப் பாதிக்கிறதோ அவ்விதமேதான் அந்தத் தோற்றத்தின் செயலும். உருப்படியாக இல்லாத ஸ்திரீயால் கனமுள்ள உடல் எவ்விதம் அசையப்படுகின்றது? அல்லது, சித்திரம் எழுதுகிறவன் ஒருவன் தன் மனத்தில் கற்பனை செய்த ரூபத்தைச் சித்திரமாக எழுதுகிறான். இந்தச் சங்கல்ப ரூபம் நிஜமா, அதற்கு அளவும் கனமும் உண்டா? இவைகளை ஆராய்ந்து பார்த்தால், அசத்தியமான சித்த விகற்பங்களும் லோக வியவகாரங்களும் அசத்தியமாகிய தேகத்தைத்தான் பாதிக்கின்றனவே தவிர, சத்தியமாகிய சித்தை ஒட்டுவதில்லை. இதை நாம் அநுபவத்தில் அறிந்துவருகிறோம்.

ஆகையால் இந்தப் பூத சம்பந்தமான உடல் ஒரு மோகமே தவிர, சத்தியமல்ல. அறிவு, உணர்ச்சி என்னும் நோக்கங்களால்தான் பிரபஞ்சம் உணரப்படுகிறதே தவிர, உணர்ச்சி உணர்வோனிடம்

ஐக்கியமாகிவிட்டால், பிரபஞ்சமாகிய தோற்றமும் ஏற்படாது. அதாவது சுயநிலே மறந்தால் பிரபஞ்சம்; பிரபஞ்சம் மறைந்தால் சுயநிலே.

வால்மீகி: அன்று காலம் இவ்விதப் பிரசங்கத்தில் கழிய, சபையோர்கள் கலேந்து தத்தம் காரியங்களேக் கவனிக்கப் புறப்பட்டுப் போனுர்கள். மறுதினம் சபையோர்கள் திரும்பவும் கூடி, எல்லோரும் மகரிஷியின் உபதேசத்தைக் கேட்கும்பொருட்டு நிசப்தமாயிருக்கும் தருணத்தில், ராமன் வசிஷ்டரை நமஸ்கரித்துத் தனக்குள்ள ஒரு சந்தேகத்தைத் தீர்க்கும்படி கேட்டுக் கொண்டான்.

ராமன்: நேற்று நீங்கள் சொல்லியதன் தாத்பர்யம், மனஸே பிரம்மமாகக் கருதப்பட வேண்டுமென்று. இந்த மனத்தின் சொரூபம் என்னவென்பதைப் பற்றித் தெளிவாகச் சொல்லும்படி கேட்டுக்கொள்கிறேன்.

## 45. மனத்தின் சொரூபம்

வசிஷ்டர்: மனம் என்பது சூன்யமே, ஆகையால் அதற்கு ரூபமில்லே. ஆகாசம் எப்படியோ அப்படித்தான் மனமும். ஆகாசத்தைப்போல் அது சர்வ வியாபியாயும் இருக்கிறது. அது தானகவே உண்டானது, ஆதியுமில்லே, அந்தமுமில்லே. ஸ்மரித்த க்ஷணம் தோன்றுகிறது. ஆகவே அது சங்கல்பத்தைத் தவிர வேறில்லே. வெளித் தோற்றம் ஏற்படும்பொழுது மனஸ் இருப்பதாக நாம் அறிகிறோம். ஆகவே அது தோற்றத்தைத் தவிர வேறில்லே. அதைத்தான் பிரம்மாவென்று நாம் சொல்லுகிறோம். அதற்குச் சூக்ஷ்ம தேகம் மாத்திரந்தான் உண்டு. சங்கல்பத்தால்

கொஞ்சம் கொஞ்சமாகப் பூதசம்பந்தமான தேகத்தை எடுத்துக்கொண்டு, அதிலேயே ஸ்திரப்படுத்திக் கொள்ளுகிறது. அப்போது மனஸ் என்று சொல்லப் படும். இப்படி மனமாக இருக்கும் தன்மையில்தான் ஜகத்தாகிய தோற்றமும் ஏற்படுகிறது. ஆகையால் இந்தப் பிரபஞ்சமும் எப்பொழுதும் எக்காலத்திலும் அழியாத் தோற்றமே. ஆதலால் அதற்கு உற்பத்தி நாசம் என்பதும் இல்லை. பிரம்மா அல்லது அறி வோன் என்ற சத்தியத்தின் சக்தியாகிய அறியும் தன்மை(அறிவு)வெளிநோக்கங்கொண்டால் பிரபஞ்ச மாகிய தோற்றம் ஏற்படுகிறது. அப்படியின்றி அறிவு அறிவோனிடம் ஐக்கியமாகி இருந்தால் அப்பொழுது இருப்பது ஒரு சத்தியமே, தனிமை. அந்தப் பதவிதான் கைவல்யமெனப்படுவது, அதாவது பிரம்ம பதவி. ஆகையால் ஜகத்தாகிய அசத்திலிருந்துதான் சத்தாகிய பிரம்மத்தை அறிகிறோம். பிரம்மாவில் அடங்கிய "நான்" என்னும் பாவமும் அழிந்தால் பரமசாந்தமும் அமைதியுமாயுள்ள பிரம்மத்தில் லயம் ஏற்படு கிறது.

ராமன்: சத்தியமாய் இருப்பதற்கு முடிவில்லை. அதற்கு அபாவமும் இல்லை. மேலும் தோஷத் தையே விளக்கும் அறியும் தன்மையில் "இல்லை" என்பதும் இல்லை. அது எப்பொழுதும் கூடியே இருந்துவருகிறது. பிறகு இந்த அறியும் தன்மை நம்மை விட்டு எப்படி ஒழியும்?

வசிஷ்டர்: இதற்கு ஒரு மந்திரமுண்டு அதாவது இந்தப் பிரபஞ்சத்தை ஒரு தோற்றமாக அதா வது பொய்யாக அறிவது. பிரபஞ்சமாகிய தோற் றம் ஒரு மதிமயக்கமே என்ற அறிவு ஏற்பட்டால்

அறியும் தன்மை அல்லது உணர்ச்சி என்பதும் நீங்கும்.

ராமன்: அப்படியாயின் நாம் அநுபவிக்கும் யௌவனம், முதுமை, மரணம், மேலும் நம் கண் முன் புலப்படும் உலகம் இவையெல்லாம் பொய்யா? இதை ஏற்றுக்கொள்வது எப்படி?

வால்மீகி: வசிஷ்டர் முன்சொல்லியவைகளை மறு படியும் தெளிவாக ராமனுக்கு எடுத்துச் சொன்னார். இவ்விதம் நினைக்க மனத்திற்கு ஏற்காவிட்டால், பிர பஞ்சம் தன்னைவிட்டு வேறல்ல என்ற பாவனையைக் கைப்பிடித்து உணர்ச்சியிலிருந்து விடுபடலாமென்றார். 'எல்லாம் பிரம்மமாக இருந்தால் அறிவதற்கு ஒன்று மில்லை. ஆகையால் வெளி நோக்கம் என்பதும் இல்லை. உள்ளும் புறமும் பிரம்மமே.

வசிஷ்டர் மறுபடியும் ராமனுக்கு மனஸின் சொரூபத்தைப்பற்றி விளக்கிச் சொன்னார். மகாப் பிரளயம் ஏற்படும் நிலையில் தனிமையாய் நிற்கும் பிரம் மத்திலிருந்து பிரம்மாவென்ற தோற்றம் முதலில் ஏற் பட்டு, அதிலிருந்து உற்பத்தியானதுபோல் தோன்றும் ஜீவன்களுக்குப் பதார்த்தங்களில் சிந்தை ஏற்பட்டு மனஸாகிய தோற்றம் உண்டாகிறது. இந்தச் சிந்தனை வெகுகாலமாக வேரூன்றி, மனிதர்களும் விசாரணை செய்யாத தோஷத்தால் பொய்யே நிஜமாகத் தோன்றி வருகின்றது.

## 46. மனோநாசத்தை அடைய அநுசரிக்க வேண்டிய உபாயங்கள்

வசிஷ்டர்: இத்தோற்றமாகிய உணர்ச்சி ஜாலங்கள் ஞானமார்க்கத்தைக் கடைப்பிடித்தால்தான் முடியும்.

இந்த ஞானம் தேகத்தைக்கூடிய ஸ்திதியிலிருந்துதான் உதயமாக வேண்டும். தானம், தர்மம், கர்மாநுஷ்டானங்கள், பூஜை, யோகம் இவைகள் யாதொன்றினுலும் ஞானம் ஏற்பட முடியாது. ஞானம் என்பது "நான்" என்ற அகங்கார பாவம் நீங்குதல், அதாவது ஜீவன் எதிலும் ஈடுபடாமலிருப்பதும் எதனுலும் இயங்காமலிருக்கும் தன்மையை அடைவதுமே. இத் தன்மையை அடைய முன்னமே சொல்லப்பட்ட உபாயங்களைக் கடைப்பிடிக்கவேண்டும். இவ்வுபாயங்களாவன: (1) விடாமுயற்சியுடன் கூடிய விசாரணை. இதுவே மூலக் கருவி. இதில்லாமல் ஒரு பலனையும் அடைய முடியாது. விசாரணையாவது "நான் யார்?" என்னும் ஆராய்ச்சி. எவ்விசாரணையும் யுக்தியுடன் செய்யப்படவேண்டும்; இல்லாவிடின் பயனில்லை. எதனுல் அறியத்தக்கது அறியப்படுமோ அதுவே யுக்தியாகும். (2) ஞானிகளின் சேர்க்கையும் இந்தச் சாதகத்திற்குப் பயனளிக்கத்தக்கது. ஞானியாவது யாரென்றுல் சாதுக்களாகிய பெரியோர்கள் அனைவராலும் ஞானியாகக் கருதப்படுபவரே. ஞானிகளின் சேர்க்கையை வெகு ஜாக்கிரதையாய்ப் பாதுகாத்து, தெரியவேண்டியவைகளைக் கேட்டும் பார்த்தும் அறியவேண்டும். இவ்விதச் சேர்க்கையாலேகூட முக்தியை அடையலாம். (3) தவிர, சாஸ்திரங்களை ஆராய்ச்சி செய்வதும் அவசியமே. ஆத்ம விசாரணையைப்பற்றிய சாஸ்திரங்களே இங்கே சொல்லப்படுவன. இதர சாஸ்திரங்கள் இந்த விசாரணைக்குத் தேவையில்லை. ஆனுல் சாஸ்திரங்கள் வெறும் சித்தாந்தங்களையே எடுத்துரைத்தும் விசாரித்தும் வந்தால் அவை பயன்படா. ஏனெனில் புத்திக்கு இவ்விதத்தில் தெளிவு ஏற்படாது. இக் காரணத்தைக்

கருதியே நாம் இங்கே சொல்லிவரும் மகாராமாயணம் எல்லாச் சாஸ்திரங்களுக்கும் மேலானதாகவே எண்ணப்படும். ஏனெனில் விஷயங்கள் அநேகமாக இதிகாச ரூபமாகப் புத்திக்குத் தெளிவாகப் புலப்படும்படி சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகையால் கேட்பதற்குச் சலனமில்லாமலும் இன்பமாயும் இருக்கும். இந்த மகா ராமாயணம் எல்லாவித ஜனங்களுக்கும் மனம் ஒப்பும் படி இருப்பதால் எல்லோருக்குமே ஞானவழியைக் காட்டும். ஆயினும் இதர சாஸ்திரங்களால் இந்தச் சித்தி ஏற்படுவதாக இருந்தால் அவைகளையே பின் பற்றி ஆராய்ச்சி செய்யலாம். அறியவேண்டியதை அறிவது தான் பிரதானம்.

## 47. ஜீவன்முக்தன்

வால்மீகி: இம்மொழிகளைக் கேட்டபின் ராமன் ஜீவன்முக்தர் விதேகமுக்தர்களைப் பற்றியும் அவர்களுக்குள்ள பேதங்களையும் லக்ஷணங்களையும் பற்றிச் சொல்லும்படி வேண்டிக்கொண்டான். அதன்படி வசிஷ்டரும் சொல்லத் தொடங்கினார். ஜீவன்முக்தன் சம்சாரத்தில் ஈடுபட்டிருப்பதுபோலிருந்தும், வாஸ்தவத்தில் அதில் ஒட்டாமலே காரியங்களை இச்சையோ வெறுப்போ இல்லாமல் செய்துவருவான். அநுபவத்தில் எல்லோருக்கும் சகஜமாய்த் தெரிந்த மனநிலை ஒன்று உண்டு. அதாவது கண்ணை விழித்திருக்கும் பொழுதே எதிரிலிருப்பது ஒன்றும் மனத்தில் படாமலிருப்பது. இந்த நிலைமை சாசுவதமாயும் நீடித்தும் அநுபவத்திற்கு வந்தால் எப்படி இருக்குமோ அம்மாதிரி ஸ்திதியில்தான் ஜீவன்முக்தர்கள் இருக்கிறார்கள். தானாக ஒரு விஷயத்திலும் பிரவிருத்

திக்காமலும் யதேச்சையாய் வந்தவைகளைத் தள்ளாமல் அநுபவித்தும் வருவான். சுருக்கமாகக் கூறுமிடத்து அவனுக்குப் பிரபஞ்சத்தில் வேண்டியதும் இல்லை, வேண்டாததும் இல்லை.

## 48. விதேகமுக்தன்

விதேகமுக்தன் எல்லா ஜந்துக்களிலும் வஸ்துக்களிலும் தானாக இருந்து மூன்று லோகத்திலும் கலந்தவனாக இருப்பவன்; அவனே பிரம்மா. இப்படியாவதற்கு அறியும் தன்மை நீங்கவேண்டும். அறிவும் அறிவோனும் சமமாக இருக்க அறிவு எப்படி நசிக்குமென்றால், அது தீவிர முயற்சியால் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் நசித்து வரும். வெகு காலங்களாக அக்ஞானத்திலேயே மூழ்கிக் கிடந்தபடியால் படிப்படியாய்த்தான் அப்பியாசத்தின் பலனாக இது சித்திக்கும். முயற்சி சரியாக இருந்தால் முடிவைப் பற்றிச் சந்தேகமில்லை. உற்பத்தியானதாக இருந்தால் முக்தியை ஒவ்வொருவரும் அடைந்தே தீரவேண்டும். இதை அடைவதில் ஜனங்களுக்குள்ள வித்தியாசம், கால வித்தியாசமே தவிரப் பதவி வித்தியாசமில்லை.

## 49. பிரம்மம் சூன்யமுமல்ல, பூர்ணமுமல்ல

ராமன்: மகாப் பிரளயமென்ற ஸ்திதி ஏற்படுவதாக ஒப்புக்கொண்டாலும், அது சூன்யமும் அல்ல, பூர்ணமும் அல்ல என்றும், பிரகாசமும் அல்ல இருளும் அல்ல என்றும் பலவாறாகச் சொல்வது எப்படி நியாயமாகும்?

வசிஷ்டர்: அமைதியாயிருக்கும் ஒரு தடாகத்தில் காற்று வீசினதும் அலை உண்டாகிறது. இந்த அலை வெளிக்கிளம்பும் முன் அது ஜலத்தில் அடங்

கித்தான் இருந்தது. பிற்பாடு வெளிக்கிளம்பிய தோற்றத்தைக் கொடுத்தது. ஆகவே அலையை வைத்துப் பேசும்பொழுது ஜலம் அலை – சூன்யமாக இருந்தது. ஆயினும் அலை ஜலத்தில் கிளம்பும் முன் பூர்ணமாகவே இருந்து வந்தது. மேலும் ஒரு கல் தூணைப்பற்றி யோசிப்போம். சில்பி அதில் ஒரு சிலையைச் செதுக்குவதாக வைத்துக் கொள்வோம். சிலை கல்லில் முதலில் அடங்கி இருந்தது. அதற்கு ஓர் உருவம் அமைத்த பிறகு சிலைக்குக் கல்லிலிருந்து உற்பத்தி ஏற்படுகிறது. ஆகவே சிலை கல்லில் பூர்ண மாகவே இருந்துவந்தது. ஆனால் உற்பத்திக்கு முன் கல் சிலை சூன்யமாகவே இருந்தது. இப்படி ஒரே பதார்த்தத்தில் சூன்யத்தையும் பூர்ணத்தையும் நாம் காண்கிறோம். ஆனால் இவ்வுதாரணங்களில் கால வித்தியாசம் இருக்கிறது. பிரம்மத்திலோ தேசம் காலம் இரண்டும் நாசமடைவதால் ஏக காலத்தில் இரண்டு பாவமும் தோன்றுகிறது. இவ்விதந்தான் பிரம்மத்தில் பூதப்பிரகாசம் ஒரு தோற்றத்தையும் கொடுப்பதில்லை. ஆகிலும் பிரம்மந்தான் எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்கிறது. அதாவது அறியச் செய்கிறது. மேலும் எப் படி ஒரு பதார்த்தத்தின் தன்மையைப் பதார்த்தத்தை விட்டுத் தனியே பார்க்க முடியாதோ அதேமாதிரி பிர பஞ்சமும் பிரம்மத்தைவிட்டுத் தனியே நிற்கமுடியாது.

## 50. உபமானங்களின் ஒற்றுமை, வேற்றுமை

மேலே சொல்லிய திருஷ்டாந்தங்களில் சொற்ப ஒற்றுமையைத்தான் எதிர்பார்க்கலாம். ஏனெனில் பேச்சிற்கும் மனத்திற்கும் எட்டாத பிரம்மத்திற்கு

எதுவும் பூர்ண உபமானமாகாது. எது ஒன்று தன்னுள் இருக்கிறதோ அது தன்னால்தான் அறியப் படுமே தவிர அதைப் பிறரால் அறிய இயலாது.

## 51. ஆத்மாவின் சொரூபம்

வால்மீகி : *ராமன் மறுபடியும் பிரம்மத்தின் சொரூபத்தைத் தெளிவாகச் சொல்லும்படி கேட்க வசிஷ்டர் சொல்லியதாவது:*

வசிஷ்டர் : *ஜீவனுக்கு மகாப்பிரளயமென்ற ஸ்திதி ஏற்பட்ட காலத்தில், காரண காரிய சம்பந்தம் அழிந்து இந்திரியங்களின் வியவகாரங்களும் ஓய்ந்து, மனத்தின் தன்மையும் அடங்கி அதாவது ஜகத்தாகிய உணர்ச்சி நீங்கி அப்பொழுது தோன்றும் தோற்றமே, அல்லது தோற்றமின்மையே பிரம்மமாகிறது. அது சித்தின் சூக்ஷ்மம், மகா சாந்தம், மகா நிர்மலம். ஒரு பொருளைப் பார்க்கும்பொழுது பார்ப்பவனுக்கும் பொருளுக்கும் இடையில் என்ன இருக்கிறதோ அதுவே பிரம்மம். கண்ணுக்கு எட்டாத தூரமிருக்கும் ஒரு பொருளை மனத்தில் ஸ்மரிக்கும்பொழுது இவ்விரண்டிற்கும் இடையில் என்ன இருக்கிறதோ அதுவே பிரம்மம். அது ஆகாசத்தைக் காட்டிலும் பரம ஆகாசமாக இருக்கிறது. அறிகிறவன், அறிவு, அறியப்படுவது இம்மூன்றாகிய தோற்றமும் பிரம்மத்தைத் தவிர வேறில்லை.*

*மகாப்பிரளயம் ஏற்பட்டபொழுது ஜகத்மோகம் அழிகிறதென்றால் அது ஒருகாலம் ஏற்பட்டிருக்க வேண்டுமே என்று கேட்கலாம். இதன் தத்துவத்தை ஒரு பிரதி கேள்வியின் மூலமாக அறியலாம். கனவில் காணும் மலடியின் புத்திரனும் ஆகாசத்தில் காணும் வனமும் எங்கிருந்து வந்தன? அவை எங்கே மறைந்*

தன? இந்த மோகம் எப்படி ஆராய்ச்சி செய்த மாத்திரம் அழிகிறதோ அதேமாதிரி அக்ஞானம் நீங்கியதும் அவ்விடத்தில் ஞானந்தான் மிஞ்சி நிற்கிறது. அப்பொழுது ஞானம் ஏற்பட்டதான தோற்றத்தைக் கொடுக்கிறது. வாஸ்தவத்தில் பிரபஞ்சத்திற்கு உற்பத்தியில்லை; ஆகவே அழிவுமில்லை. பிரபஞ்சத்தைப் பிரம்மத்தைத் தவிர்த்து வேருகக் கருதும் நோக்கம் அழிந்ததும் அதே பிரபஞ்சம் பிரம்மமாகத் தனியாக நிற்கும். தங்கத்தால் செய்யப்பட்ட வளையலில் எந்தப் பாகத்தில் வளையலென்பது இருக்கிறது? ஒவ்வோர் அணுவிலும் தங்கத்தைத் தவிர வேறொன்றையும் நாம் காண்பதில்லை. ஆகாசத்தில் சூன்யமென்பது எங்கிருக்கின்றது? அது முற்றும் சூன்யம், சூன்யமயம். அதே மாதிரி பிரபஞ்சம் பிரம்மத்தைத் தவிர வேறில்லை. அதிலிருந்தே உற்பத்தியான தோற்றம் ஏற்பட்டால் அப்பொழுது அதைப் பிரம்மத்தைத் தவிர வேருகக் கருதுவதேன்?

பிறகு தோற்றமாகிய ஜகத் ஜட சம்பந்தமானது. இது சத்தாகிய பிரம்மத்திலிருந்து எப்படி உற்பத்தியாகும் என்று கேட்கலாம். பிரகாசத்தினுல் நிழல் எப்படி ஏற்படுகிறதோ அதுபோலவேதான் ஜடமாகிய ஜகத்தின் தோற்றமும் ஏற்படுகிறது. பிரகாசம் இல்லாவிட்டால் அதன் பிரதியாகிய நிழல் ஏற்பட முடியாது. அப்படியே பிரம்மமாகிய சத்தியமில்லாமல் அசத்தாகிய ஜகத் தோற்றமும் ஏற்பட முடியாது. ஆகவே ஜகத் என்பது பிரம்மமே. ஆனுல் அந்தத் தோற்றம் ஏற்படுவது நம்முடைய அக்ஞானத்தால்.

வால்மீகி: இவ்வார்த்தைகளால் ராமனுக்குத் தெளிவு ஏற்படாமல் மனக்கலக்கமே அதிகரித்தது.

அவனுக்குத் தோன்றியதாவது: உணர்ச்சி, நோக்கம் அழிந்தால்தான் மோக்ஷம், ஆனால் இவை ஏற்படவே இல்லை; ஆகவே இவைகளுக்கு அழிவே இல்லை. இவை எப்பொழுதும் அறிகிறவனோடு கூடியே இருக்கின்றன. பிறகு எப்படி இந்த மாயையை நீக்கிக்கொள்வது என்று நினைத்தான். இந்தச் சந்தேகத்தைக் கேட்டு, வசிஷ்டர் அதைப் போக்கும்படி சிருஷ்டி, ஜீவன் என்பவைகளைப்பற்றிய சித்தாந்தங்களை எடுத்துரைப்பதாகவும், இவைகளை மிகவும் கவனமாய்க் கேட்கும்படியும், அதாவது ஒவ்வொரு பதத்தையும் வர்ணனைகள், உபமானங்கள் எல்லாம் உட்படச் சொன்னார். இவைகளைச் சரியாக மனத்தில் வாங்கிக்கொண்டு விசாரணை செய்து வந்தால் புத்திக்குத் தெளிவு ஏற்படும் என்றார்.

## 52. ஜகத் மோகம் ஏற்படும் முறை

வசிஷ்டர்: பிரபஞ்சம் என்பது பிரம்மத்தில் தோன்றுவதாகிய ஒரு தோற்றமே. நித்திரை என்னும் அவஸ்தைக்கு முன்னும் பின்னும் சொப்பனமாகிய தோற்றம் ஏற்படுவதைப் போலவேதான் ஜகத் தோற்றமும் உண்டாகிறது. இது ஏற்படும் கிரமத்தை இனிச் சொல்வோம். பிரபஞ்சம் சித்சொரூபமாயுள்ள பிரம்மத்தில் எப்பொழுதும் இருக்கையென்னும் தன்மையுடன் இயல்பாகவே சூக்ஷ்மமாய் இருந்து வருகிறது. இதேமாதிரி அறியும் தன்மையும் அறிவில் சூக்ஷ்மமாய் அடங்கி இருக்கிறது. எப்பொழுது அறிவுக்கு அறியும் தன்மையில் அகங்காரமின்றி நோக்கம் உண்டாகிறதோ அப்பொழுது அதற்கு "அறிவு" என்று வெகு காலத்திற்குப் பிறகு ஏற்பட்ட பெயர்

கொடுக்கப்பட்டது. இவ்வறிவுக்குப் பாத்திரம் "பதார்த்தம்" என்ற கற்பனை வஸ்துக்களே. இவ்வறிவானது ஆகாயத்தைவிடச் சூக்ஷ்மமாயும் சுத்தமாயும் இருந்து தனக்குப் பாத்திரமாகிய பதார்த்தங்களையும் விஷயங்களையும் வியாபித்து நிற்கின்றது. இதுவே மூல உணர்ச்சியுமாகும். ஆகவே இப்படி அறிவாக வியாபித்திருப்பது பரமமான பிரம்மமே.

இவ்வறிவு மேலும் மேலும் அறியும் தன்மையில் ஈடுபட்டுப் பல பொருள்களைத் திவிரமாகக் கற்பனை செய்யுங்காலத்தில் தனக்கும் பிரம்மத்திற்கும் உள்ள சம்பந்தத்தை மறந்து, ஜீவனென்றும் மற்ருென்று என்றும் பலவாருன சப்தங்களால் வியவகரிக்கத்தக்கதாகிறது. பிறகு இதே அறிவு சங்கல்பம் அல்லது பாவனையையே தன்னுடைய முக்கிய நோக்கமாகக்கொண்டு சம்சரிப்பதில் தீவிரமாக ஈடுபட்டு நிற்கின்றது. அப்பொழுது வஸ்துக்களின் தன்மையோடு கூடவே அந்த உருவங்களுடனே தானும் கிளம்புவதாகத் தோன்றுகின்றது. அதன் பிறகுதான் "இருக்கை" என்ற (சூன்யத்) தன்மை அறிவில் கிளம்புகிறது. இந்தச் சூன்யமாகிய ஆகாயந்தான் சப்த குணங்களுக்கு வித்தாகும். "ஆகாயம்" என்று பிற்பாடு பெயரளிக்கப் பட்டது இச் சூன்யத்திற்கே. பிறகு இந்த "இருக்கை" என்ற தன்மையோடு கூடவே "அகந்தை" அல்லது "நான்" என்பதும் உண்டாகிறது. அகங்காரமென்ற சொல்லுக்குப் பொருளாயிருப்பது இதுவே. சம்சாரம் நிலைநிற்க மூல ஆதாரமும் இதுவே. ஆகவே நிர்மலமான பிரம்மத்திலிருந்தே "தன்னை உணர்தல்" என்ற நோக்கம் ஏற்பட்டு அதன் காரணமாக, உண்மையில் இல்லாத - ஆயினும் இவ்

வளவு சமுதாயமும் இருப்பதெனத் தோற்றமளிக்கும் - நிலைமை ஏற்படுகிறது.

இந்த நிலைமைக்கு இறங்கின அறிவு, கற்பனை களைக் கிளைகளாகக் கொண்ட விருக்ஷத்தின் முக்கிய விதையாகிய அகங்காரத்திற்கு உட்பட்டு, அதன் அசைவால் தானும் சலனத்தை அடைகிறது. பிறகு அகங்காரத்துடன் கூடிய அறிவு ஆகாசம், சப்தம் இவ் விரண்டினுடைய சூக்ஷ்ம ரூபத்தைப் பாவித்து அத ஞல் ஆகாயத்தைவிட ஸ்தூலமாகிக் கொஞ்சம் கொஞ்ச மாய் ஆகாயத்தில் தன்னை விஸ்தரித்துக்கொள்ளுகிறது. இதுவே சப்த சமுதாயங்களுக்கு மூலமாகும். பதம், வாக்கியம், பிரமாணம் என்ற மூன்று அம்சங்களை யுடைய வேதங்கள் இந்தச் சப்த சமுதாய விருக்ஷத்தின் மலர்ந்த பூங்கொத்துக்களேயாகும். இந்தச் சப்த சமு தாயங்களால் நிரூபிக்கப்பட்ட அர்த்தங்களைக்கொண்டு விஸ்தரிக்கும் சட்ட திட்டங்களான உலக வியவஸ்தை யானது இவைகளிலிருந்துதான் உற்பத்தியாகவேண் டும். இவ்வளவு பரிவாரங்களுடன் கூடிய அறிவு தான் பல உருவங்களுக்குக் காரணமாக உள்ளதும், மேலும் ஜீவன் என்பதற்கும் காரணமா யிருப்பது. இந்த ஜீவன், பஞ்ச பூதங்களால் ஏற்படும் பதினுன்கு வித வேறுபாடுகளுடன் கூடிப் பதினுன்குவித உலகங்க ளாக விஸ்தரிக்கிறது.

பிறகு சித்தினுடைய வேகத்தால் ஸ்பரிசமென் னும் உணர்ச்சிக்குக் காரணமான ஸ்பரிச சூக்ஷ்மம் உண்டாகிறது. இந்த நிலையில் இதற்கு ஸ்பரிசமென்ற பெயர் ஒவ்வாது. ஸ்பரிச சமுதாயத்திற்குக் காரணம் பவனஸ்பந்தம். அதாவது பிராணன் அசைவு. சகல பூதங்களுடைய செயல்களின் இயக்கமெல்லாம்

இதிலிருந்தேதான் உண்டாகின்றது. அதிலேயே சித்தானது விளங்குவதால் அதனுடைய தெளிவு அநுபவத்தால் அறியப்படும். இந்தத் தெளிவு என்ற ஒளி அல்லது பிரகாசம் தேஜஸ் என்பதன் சூக்ஷ்மமாகும். ஆனால் இந்த சூக்ஷ்ம ஸ்திதியில் தேஜஸ் என்ற பெயர் ஒவ்வாது. இந்தத் தேஜஸின் சூக்ஷ்மமானது தனது விஸ்தாரத்தால் சூரியன், அக்கினி முதலிய ஒளிக்கூட்டத்திற்கு வித்தாகிப் பிறகு பல்வேறு உருவங்களைக் கொள்வதால் சம்சாரம் இன்னும் விஸ்தரிக்கிறது. பிறகு இந்தத் தேஜஸானது தனது சூக்ஷ்ம ரூபத்தைப் பாவித்துத் தான் அதிலிருந்தவாறே நீரின் தன்மையான ரசத்தை, அதாவது ஓடும் தன்மையைப் பாவிக்கிறது. ரச சமுதாயத்திற்கு ஆதாரமான தண்ணீரின் விஸ்தரிப்பிற்கு இதுவே வித்தாகும். பிறகு கல்பனையையே குணமாகக் கொண்ட இந்த ஜீவன் தன்னுடைய சங்கல்ப வசத்தினால் நாம ரூபங்களைக் கொண்டு கந்த தன்மாத்திரத்தை அதாவது அதனுடைய சூக்ஷ்மத்தைத் தன்னுள் காண்கிறது. இதன் காரணமாகப் பின்பு ஏற்படப்போகும் பூகோளத்தின் தன்மையோடு சேர்ந்து உருவ சமுதாயத்திற்கு வித்தாக நிற்கிறது. இவ்விதமே சித்தினால் பாவிக்கப்படுகிற சூக்ஷ்மங்கள் யாவும் தாமாகவே ஒவ்வொன்றும் பூர்த்தியாகின்றன. ஆனால் இந்தப் பூதங்களில் யாதொன்றும் தனிப்படையாகவும் சுத்தமாகவும் அதாவது சித்தின் சேர்க்கையில்லாது புலப்படுவதில்லை.

எப்படி ஓர் ஆலம் வித்தில் பல ஆயிரம் விருக்ஷங்கள் சூக்ஷ்மமாய் அடங்கியிருக்கின்றனவோ, அதே மாதிரி இந்த எல்லையற்ற பிரபஞ்சமும் சித்தில்தான்

அடங்கியிருக்கிறது. சித்தானது உணர்ச்சி யென்பதில் நோக்கமடையும் காலத்தில் உணரப்படும் வஸ்துக்கள் தங்களுடைய உற்பத்தியைக் காண்பிப்பதோடுகூடப் பல விதங்களாகவும் விஸ்தரித்துக் கொள்கின்றன. இப்படிப் பரமாணுவின் மத்தியில் விளங்குவதோடுகூட க்ஷண நேரத்தில் பல கற்பங்களாகவும் மாறி நிற்கின்றன. சுழலற்று நின்றும் சுழலை நோக்கியே ஓடுகின்றது. எல்லாமும் க்ஷண நேரத்தில் சித்தினுல் ஊடுருவப்பட்டு உருவத்துடன் காட்சியை அளிக்கின்றது. ஆகவே சூக்ஷ்மங்களின் சமுதாயம் சங்கல்ப ரூபமான சித்துதான் என்று ஏற்படுகிறது. உணர்ச்சி (அறிவு) சரீரமின்றி நின்றுகொண்டு பரம சூக்ஷ்மமான ஒரு சரீரத்தைத் தானே கற்பனை செய்து கொள்கிறது. இவற்றிலிருந்து ஏற்படுவது என்னவென்ருல் பிரபஞ்சம் முழுவதிலும் பஞ்சபூதங்களின் சூக்ஷ்மமே காரணமாய் நிற்கிறது என்பதே. இவைகளுக்கும் வித்தாய் நிற்பது முதன்மையானதும் சிறந்ததுமான ஒரு சக்தியே. அதுதான் எல்லாவற்றுக்கும் மூலமாகிய அநுபவ சித்தாந்தம்; அதிலிருந்தே பிரபஞ்சங்களின் விஸ்தரிப்பு ஏற்படுகிறது.

## 53. ஜீவனின் உற்பத்திமுறை

அதாவது பிரபஞ்சம் சித்தில் சூக்ஷ்ம ரூபமாக (in potential state) அடங்கியே இருந்து சித்தின் அசைவால் ஜகத் என்னும் தோற்றம் வெளிப்படையாகக்காணப்படுகிறது. இதனுல் பிரம்மம் சமமெனவும் சமமற்றதெனவும் வியவகாரத்தில் சொல்லத் தகுதியாகிறது. முதலில் சித்தானது அறியும் தன்மையை அறிவதால் அதன் காரணமாகவே அறியப்படும்

பொருள்களைக் கற்பனை செய்துகொள்ளுகிறது. அதாவது அறிவின் அசைவால் கற்பனை உண்டாகிறது. அறியப்படும் பொருள்களில் அறிவின் சேர்க்கையாகிய அசைவு ஏற்பட்டால் அதுவே ஜீவனுக்குக் காரணமாகிறது. இந்த ஜீவன் அறியப்படும் பொருள்களிலேயே மூழ்கிக் கிடப்பதால் இந்த நிலைமையே ஜீவனுக்கு மாயையாகிறது. அதுவே அகங்காரமும். இந்த அகங்காரத்தின் பரிணாமமே புத்தி. இதுவே பிற்காலத்தில் மனமென்றும் மனத்தின் சூக்ஷ்மமென்றும் அழைக்கப்பட்டது. இதுவே பூத உடலைத் தாங்கிப் பெருத்து நிற்கையில் மற்றவைகளுடைய சூக்ஷ்மங்களைக் கற்பனை செய்துகொண்டு இவ்வளவு அகண்ட ஜகத்தாக விளங்குகிறது. சொப்பனத்தில் காணும் நகரம்போல, ஒரு நொடிப்பொழுதில் மகா ஆகாசமென்கிற அடர்ந்த காட்டில் பிரபஞ்சமானது கிளம்பிக் கிளம்பி நாசமடைகிறது. இந்தப் பிரபஞ்சமாகிய புதருக்கு அகங்காரமே வித்தாகிறது. இந்த அகங்காரத்திற்கு நீர், நிலம், வெயில் எதுவும் வளர்ச்சிக்குத் தேவையில்லை. ஏனெனில் இவைகளுக்கும் சித்தே காரணமாயிருப்பதால். ஆகையால் சொப்பனத்தில் காணும் நகரம் எப்படிச் சொப்பனமோ, அப்படியே சித்தின் விலாசம் சித்ரூபமே. அதாவது ஜகத்திற்கு வித்தாயிருப்பது பஞ்ச பூதங்களின் தன்மாத்திரங்கள், இவைகளுக்கு வித்தாயிருப்பது சித்தே. விதைபோல் பழம், ஆகவே பிரம்மத்தைப்போல் ஜகத். தன் மாத்திரங்களின் ஐந்து கணமும் சித்தின் வேகத்தால் மகாகாசத்தில் தன் அங்கமாகக் கற்பனை செய்யப்பட்டவைகளே யன்றி உண்மையானவையல்ல. இந்தத் தன் மாத்திர கணங்கள் தங்களை விஸ்தரித்துக்கொண்டு

உலக உருவத்தில் நிற்கும் நிலையிலும் சத்தாகவே கருதப்படும். ஏனெனில் எவ்விதக் கிரியையும் சித்தின்றி நடைபெற முடியாது.

பிரபஞ்சமாகிய தோற்றம் சித்தின் கற்பனையாகையால் அது எப்படிச் சத்தாகுமென்று கேட்கலாம். பிரபஞ்சத்திற்குக் காரணம் பஞ்சதன்மாத்திரங்களாகையால் இவையே பிரம்மமாகக் கருதப்படலாம். அதில் தவறில்லை. ஆகையால் பிரபஞ்சமும் பிரம்மமென்றே கருதப்படும். சிருஷ்டியின் ஆரம்பத்தில் பஞ்சதன்மாத்திர கணமானது எந்த நிலையிலிருந்ததோ அதே நிலையில்தான் முக்காலத்திலும் இருக்கும். ஆகையால் உண்டாவது, இருப்பது, அழிவது என்னும் எண்ணங்களுக்கு இடமில்லை.

பிரம்மாகாசத்தில் நிற்கும் சித்தில், பிரம்மமே ஜீவாகாசத் தன்மையை தன்னிடத்திலேயே காண்கிறது. ஆகையால் ஜீவனானது ஆகாயத்தில் தோன்றும் ஆகாயமே.

## 54. ஜீவன் தேகத்தைத் தேடிக்கொள்ளும் முறை

பரமாகாசச் சொரூபமாகிய ஜீவாகாசம் சிந்தனையின் காரணமாக, தான் தேஜஸின் ஓர் அணுவென்று தானாகவே கருதுகிறது. இக்கருத்து மேலும் மேலும் பெருகி இல்லாதது இருப்பதாகத் திடமாகிறது. இந்த நிலையில் பார்ப்பவன் பார்க்கப்படுவது என்ற துவந்துவ பாவம் ஏற்பட்டுக் கொஞ்சம் கொஞ்சமாய் ஸ்தூலமாகிறது. பிறகு தன் இஷ்டப்படி பாவித்து அவன், இவன் நானென்னும் பாவனைகளையும் தன் தலையில் சுமத்திக் கொள்ளுகிறது. இது எப்படியென்றால் சொப்பனத்தில் தன்னையே ஒரு

வழிப்போக்கனுகக் கனவு காண்பதுபோல். இதே மாதிரி பின்னர் ஏற்படும் உருவத்தை முன்பே பாவித்து அதனுல் அது அவ்விதமே ஆகிவிடுகிறது. உடனே வெளிப்படையான தோற்றங்களை விட்டுவிட்டுத் தன் உள்ளும் நோக்குகிறது. வெளியிலும் இதுவே இருப்பதாயினும் கண்ணுடியில் காணும் மலைபோலச் சுருக்கிய தோற்றத்தைத் தன் உட்புறத்தில் காண்கிறது. தண்ணீரில் பிரதிபலிக்கும் சரீரமும், எதிரொலியில் அடங்கிய சப்தமும் எப்படிச் சக்தியற்று இருக்கின்றனவோ அப்படியே இந்த ஜீவன் எதில் பிரதிபலிக்கிறதோ அதை மீறி நடவாத நிலைமைக்குத் தன்னை உட்படுத்துக் கொள்ளுகிறது. பிறகு தானுகவே இயங்க ஆரம்பித்து, புத்தி, சித்தம், ஞானம் இவற்றின் சத்தை அல்லது இருப்பு என்ற தன்மையில் தன்னை விஸ்தரித்துக் கொள்ளுகிறது. பிறகு "நான் பார்க்கிறேன்" என்ற எண்ணம் உதித்து, அதனுல் பார்க்கும் கருவிகளாகிய கண்களையும், ஸ்பரிசத்தை எண்ணி அதனுல் "துவக்" என்ற இந்திரியத்தையும், கேட்பதற்காகக் காதுகளையும் ஜீவன் தன்னிடத்தில் காண்கிறது. ஆகவே கர்மேந்திரியங்களின் ஒத்துழைப்பாகிய செயல், ரூபம், ஒளி, அகங்காரம் இவை அனைத்தும் பாவனை செய்யப்பட்டு, சூக்ஷ்ம சரீரத்தைக் கொண்டதாய் ஆகாசத்தில் நிற்கிறது.

55. பிரம்மமும் ஜீவனும்

இவ்விதம் பிரம்மத்திலிருந்து கிளம்பினதாகத் தோன்றும் ஒரு பொறி, பாவனையின் காரணத்தால் வேருக எண்ணப்பட்டு ஜீவனென்று சொல்லும்படி ஆகிறது. இதுவே ஜீவ சப்தத்தின் பொருள்.

அதாவது கற்பனை; பிரவாகமாகிய பிரம்மம். இப்படியே தேசம், காலம், செயல், பொருள் இவைகளையும் இந்த ஜீவன் கற்பனை செய்துகொண்டு அவற்றிலே ஈடுபட்டு அதனால் கட்டுப்பட்டு, பிரபஞ்சச் சுழலில் சூக்ஷ்ம சரீரத்தைத் தாங்கி நிற்கிறது. தான் அசத்தியமே ஆயினும் ஒரு தோற்றத்தைக் கொடுப்பதாக நிற்கிறது. ஆகவே இதில் புதிதாக உண்டானது ஒன்றுமில்லை. எல்லாம் தானாகவே எப்பொழுதும் போல ஒன்றாய் நிற்கிறது. தோற்றமெனப்படும் எல்லாம் பொய்யே, அதாவது இந்தப் பிரபஞ்சம் ஏனெனில் அது கற்பனையாதலால்.

பிரம்மமென்ற ஆகாசம், பரம ஆகாசமாகவே என்றும், எப்பொழுதும், எங்கும், எந்நிலையிலும் அசைவற்று நிற்கிறது. உண்மைபோல் காணப்படும் அனைத்தும் இல்லாதவையே. இவைகள் எவராலும் என்றும் நியமிக்கப்படவில்லை, உண்டாக்கப்படவும் இல்லை. இவற்றிற்கு வர்ணமொன்றும் கிடையாது. இந்தப் பிரபஞ்சம் ஒரு நிறமற்ற சித்திரமே. இது செய்யப்பட்டதல்ல, ஆனால் அநுபவிக்கப்பட்டது. இது உண்மையானதல்ல, ஆனால் உண்மைபோல் தோன்றுவது.

இந்த ஜீவனுக்கு முக்தன் என்ற நிலை ஏற்படும் பொழுது, தன்னைப் பல பொருள்களாகப் பாவனை செய்துகொள்வதற்கு முன்புள்ள ஞாபகம், அதாவது பிரம்மம், பிற்பாடு ஏற்படும் கற்பனைகளுக்குக் காரணமென்று கூற முடியாது. முக்தனாயிருக்கும் நிலையில் ஜீவனுக்கு ஞாபகம், செயல், சங்கல்பம் எதுவும் கிடையாது. அவை இருந்தால் முக்தனாகமாட்டான். மேற்கூறிய நிலையில் இருப்பதால்தான் அதாவது

சூக்ஷ்ம உருவத்தில், முக்தனை 'ஸ்வயம்பூ', 'பிரம்மா' என்று சொல்லப்படும் ஜீவனுக்கு ஏற்படும் கற்பனை களுக்கு முற்பட்ட ஞாபகம் காரணமல்ல என்பது சித்தாந்தம். 'ஸ்வயம்பு' என்று கூறப்படும் நிலையி லுள்ள ஜீவனுக்குக் காரணம் வேறொன்றும் கிடையாது. தனக்குத் தானே காரணமான பொரு ளில் வேறு காரணத்தைக் கற்பிப்பது தர்க்க நியதிக்கு ஒவ்வாது.

ஆகவே சூக்ஷ்ம உருவத்தில் நிற்கும் ஜீவன் எவ் வுருவம் கொள்ளுகிறதோ அந்த உருவத்தைக் கொண்டே இந்தப் பிரபஞ்சமும் உண்டானது. இந்த அநுபவம் அநாதியானது, ஆகையால் முடிவுமற்றது. ஆகையால் நாம் காணும் பிரபஞ்சம் பொய்யான கற்பனையே.

பரம்பொருளாய் இருப்பது ஆகாச ரூபியே, சூன்யமே, அதாவது எவ்வித உருவமும் இல்லாதது. ஆகையால் அம்மயமாயிருக்கும் பிரபஞ்சமும் அவ் வண்ணமே நிற்கும். தண்ணீரைக் காட்டிலும் திர வத்வம் (ஓடும் தன்மை) எப்படி வேறல்லவோ, அப்படியே பரமாத்மாவைக் காட்டிலும் சிருஷ்டியும் வேறல்ல. ஆகவே நமக்குப் புலப்படுபவைகள் யாவும் சமமே, சாந்தமே. வேறாகக் காணும் அக்ஞானம் நாமே நம்மிடத்தில் கற்பித்துக்கொண்டது. இதற்குத் தன்னை விட்டு வேறான ஆதாரம் ஒன்றும் கிடையாது. இது ஆதாரத்தில் அமைந்ததல்ல.

மேற்சொல்லிய நோக்கத்தை விட்டுப் பிரபஞ்சத் தைத் தனியாக உணர்ந்தாலென்ன என்று கேட்க லாம். அதனாலும் ஒரு பாதகம் கிடையாது. பரமா

காசம் என்பது சூன்யம், நிர்மலம்; இதில் சம்சரிப்பது, ஈடுபடுவது என்பதெல்லாம் தோற்றமேயாகும். எது உண்மையோ அதுதான் நிலைக்குமேயன்றி உண்மையற்றது சாசுவதமாய் நிலை நிற்காது. ஆகவே ஆதாரமுமில்லை, ஆதாரத்தை அண்டி நிற்பதுமில்லை. அப்பொழுது புலப்படுவதென்பதும் கிடையாது, பார்ப்பவன் என்ற ஒரு தனி புருஷனும் கிடையாது. ஆகவே பிரம்மாண்டமென்று தனியாக யாதுமில்லை. இதுதான் இந்தக் கொள்கைக்கும் முடிவு.

இந்த விஷயத்தில் விதண்டாவாதம் செய்ய இடமே கிடையாது. ஜகத்துமில்லை, ஜகத் சமூகமுமில்லை. எல்லாம் சாந்தம், யாவும் ஒன்றே. பிரம்மத்தின் விஸ்தரிப்பே யாவும். அது தானே தன் விஸ்தரிப்பில் ஒளி தருவதாய்த் தோற்றுகிறது. திரவப் பொருளின் தன்மை எப்படி ஜலமென்று அழைக்கப் படுகிறதோ அவ்விதமே பிரபஞ்சம் சித்தைத் தவிர வேறல்ல. இல்லாதது தோன்றுகிறது, இருப்பதைப் போல் அநுபவிக்கப் படுகிறது. சொப்பனத்தில் காணும் நம்முடைய மரணம் நிஜமல்ல, ஆகையால் அந்தத் திருஷ்டி நாசமடைகிறது. அதேபோல் ஜகத்தில் நாம் காணும் பொருள்கள் உண்மைப் பொருள்களல்ல. ஆகையால் இந்த அசத்தாகிய ரூபமும் உணர்ச்சியும் அழிகின்றன. சித்துதான் நிலைத்து நிற்கும். சத்தாகிய சொரூபத்தைத் தாங்கிய உலகமும் சத்தாகத்தான் இருக்கவேண்டும். பிரபஞ்சத்தில் பிரபஞ்சமென்ற நோக்கந்தான் அக்ஞானமேயன்றி அதுவும் பிரம்மந்தானென்பது முடிவான சித்தாந்தமே. ஆகவே ஞானம், அறிவு, ஆகாசம் இவையே பிரம்மம். இவைகளே உலகமும்.

மேற் சொன்னவைகளைச் சுருக்கிச் சொல்வோமாகில் - பரமாகாசத்தில் முதல் இயக்கம், அதி சூக்ஷ்மமாய், ஆகாச ரூபமாய் சமமாய் நின்று, பிரம்மா அதாவது பிராணிகளின் தலைவனென்று அழைக்குமாறு விளங்குகிறான். அவன் சுயம்பிரகாசன், அவனுக்குச் சூக்ஷ்ம ரூபந்தான் உண்டு, பூதசம்பந்தமே கிடையாது. ஆகையால் இதர காரண சகாயமில்லாமல் சங்கற்பிக்கப்பட்ட பூத சமுதாயம், பூத சமுதாயமென்ற வகையில், உண்மையல்ல. ஏனென்றால் அது உண்டாகவுமில்லை, உண்டாக்கப்படவுமில்லை. எல்லாம் வெறும் தோற்றமே; ஆத்மா ஒன்றே சத்தியமானது.

இந்த ஜகத்தாகிய பொய்த் தோற்றம், பகுத்தறிவு என்னும் குணத்தால் ஏற்படுகிறதே தவிர, பூர்ண அறிவு ஏற்பட்டபிறகு இத்தோற்றம் புலப்படுவதில்லை. இந்தச் சம்பவம் "பகுத்தறிவு - பகுத்து அறிவு" என்னும் பதத்தின் பொருளிலேயே அடங்கியிருக்கிறது. இந்தத் தோற்றம் ஏன் உண்டாகிறதென்று கேட்கலாம். சூரிய கிரணங்களின் ஒளியால்தான் சூன்யமாகிய ஆகாயத்தை நாம் அறிய இயலுகிறது. அதுபோல ஜடமாகிய ஜகத் தோற்றத்தால்தான் சித்தாகிய சூன்யத்தையும் அறிய முடியும். நம் கண்முன் புலப்படும் ஆகாயத்தைவிட நம் சங்கல்பத்தில் (Imagination). தோன்றும் ஆகாயம் எவ்வளவு சூக்ஷ்மமோ, அதே மாதிரிதான் ஜகத் தோற்றத்திற்கும் சித்துக்குமுள்ள சம்பந்தம். ஆகவே எதுவும் உண்டாகவில்லை, அதனால் அழிவதென்பதும் கிடையாது. உண்டாவதும் அழிவதும் நம் மனத்தில்தான். இந்தத் தத்துவத்தை நன்கு விளக்கும்பொருட்டு ஒரு சிறுகதை சொல்லப்படும்.

56. லீலாவதி கதை

முன் ஒருகாலத்தில் பத்மன் என்று நாமம் பூண்ட அரசனொருவன், வீர சூர பராக்கிரமசாலியாய், அழகிலும் குணத்திலும் நிகரற்றவனென்று வழங்கி வந்தான். அவன் தனக்குத் தகுந்தவளாயும், சௌந்தர்யமும் குணமும் பொருந்தியவளாயுமுள்ள லீலாவதீ என்னும் உயர் குலப் பெண்ணை மனையாளாக அடைந்து செங்கோல் செலுத்திவந்தான்.

லீலாவதி எல்லாச் சுகங்களையும் புருஷனுடைய அன்புடன் கூடி அநுபவித்துவருகையில், திடீரென்று ஒருநாள், தன் கணவன் ஒரு சமயம் தனக்குமுன் மரிக்க நேரிட்டால், தன் கதி என்னவாகுமென்று தோன்றிற்று. இதனால் அவள் மிகவும் பயந்து தன் கணவனுடைய ஜீவன் அழியாமலிருக்கும்படி தானே பிரயத்தனம் செய்யவேண்டுமென்று தீர்மானித்து உடனே தகுந்த நியம நிஷ்டைகளை ஆரம்பித்து, ஞான தேவதையான சரஸ்வதியைப் பூஜித்துவந்தாள். பிரயத்தனம் தீவிரமாகவும் பௌருஷத்துடனும் கூடி இருந்தபடியால், பலன் சீக்கிரமே கிட்டி, சரஸ்வதி தேவியும் பிரத்தியக்ஷமாயினள். லீலாவதியின் சிரத்தையாலும் ஒழுக்கத்தாலும், தான் மிகத் திருப்தியடைந்ததாகச் சரஸ்வதி சொல்லிவிட்டு அவளுக்கு வேண்டிய வரங்களைக் கேட்கும்படி கட்டளை இட்டாள். லீலாவதி, தேவியை நமஸ்கரித்து, பூஜைசெய்து, பிறகு தான் கோரும் வரங்களை வெளியிட்டாள். அவைகளாவன: (1) தனக்குமுன் தன் கணவன் ஒரு சமயம் காலமாகும் பட்சத்தில் அவனுடைய ஜீவன் அரண்மனை அந்தப் புரத்திலேயே இருக்கவேண்டும்; (2) தான் இஷ்டப்பட்ட போதெல்லாம் தேவி தன் தரிசனத்தைக் கொடுக்கவேண்டும்.

இவ்வரங்களைக் கொடுத்துவிட்டுத் தேவி அவ்விடமே மறைந்தாள்.

கொஞ்ச காலத்திற்குப் பிறகு, அரசன் காலமாகி அதனால் லீலா ஆழ்ந்த துயரத்திற்கு ஆளானாள். வெகு நேரம் பரிதபித்து மனம் உடையும்போல் இருக்கையில் அசரீரி வாக்கொன்று காதில் விழுந்தது. அதாவது சவத்தைப் பூக்களால் மூடிவைத்தால் பூவும் உடலும் வாடாமலிருப்பதுடன் இறந்த கணவனை அவள் மறுபடியும் அடைவாளென்றும். இதைக் கேட்டு லீலாவதி மனம் தேறி அப்படியே சவத்தை ஜாக்கிரதை செய்து, கொஞ்ச நேரத்திற்கெல்லாம் ஆழ்ந்த சிந்தனையில் அமர்ந்தாள். இதைத் தொடர்ந்து ஆத்ம விசாரணையில் மனம் செல்ல, அதையே ஆராய்ச்சிசெய்து அதன் பலனைச் சில தினங்களில் சமாதி நிலையை அடைந்தாள்.

சமாதியிலிருந்து விழித்ததும் தன் கணவன் ஞாபகம் வந்து, அவன் தற்சமயம் எங்கே எவ்வாறு இருக்கலாமென்று ஆலோசிக்க அதன் காரணமாகவே ஸ்தூலப் பிரபஞ்சத்தை மறந்தவளாய் சூக்ஷ்ம உலகத்தில் சஞ்சரிக்கலானாள். இச்சஞ்சாரத்தில் கண்ட காட்சியாவது தானிருக்கும் மண் உலகைப்போல் ஒரு விண்ணுலகும், அதிலே தன் கணவன் 16 வயது வாலிபன் போல் சுற்றத்தார், சேவகர்கள், சபையோர் எல்லோருடன்கூடி ராஜ்ய பரிபாலனம் செய்வதாகவும் இருந்தது. மேலும் தான் இதுவரையில் அநுபவித்தவைகள் எல்லாம் இவ்வுலகிலும் காணப்பட்டன. உடனே தன் கணவன் இறந்தது ஞாபகம் வந்து அதைத் தொடர்ந்து ஸ்தூலப் பிரபஞ்ச நோக்கமும் ஏற்பட்டு, தன் அரண்மனை அந்தப்புரவாசிகளைப்பற்றிச்

சிந்திக்கலானுள். அவர்கள் உயிர் வாழ்ந்திருப்பதும் நினைவிற்கு வந்தது. இது நிஜமானுல் தான் கண்ட காட்சி யாதென அறிய விரும்பி, தேவியை ஸ்மரிக்க லானுள். வரப்பிரசாதத்தின் காரணத்தால் தேவீ உடனே பிரத்தியட்சமாகி லீலாவின் கோரிக்கை என்ன வென்று கேட்க, அப்பொழுது அவர்கள் இருவருக்கும் நடந்த சம்பாஷணை பின்வருமாறு :—

57. சரஸ்வதியுடன் சம்பாஷணை

லீலா : சித்தில் தோன்றும் பிரதிபிம்பமே ஜகத். ஆனுல் அசைவு, இயக்கம் என்பவை சித்தில் ஏற்படுவ தில்லை. ஜகத் என்பதில் இவைதாம் பூரணமாக இருக்கின்றன. இவை இரண்டில் எது நிஜம், எது பொய்?

சரஸ்வதி : நிஜம், பொய் இவ்விரண்டினுடைய தன்மைகள் யாவை?

லீலா : நான் இப்பொழுது உங்களை நேரில் காணு வது நிஜம், ஆனுல் கொஞ்ச நேரத்திற்கு முன் நான் என் பர்த்தாவைச் சங்கல்பத்தில் கண்டது பொய். ஏனெனில் இந்தக் காட்சியில் தேசம் காலம் ஒன்றும் பொருத்தமாக இல்லை.

சரஸ்வதி: (சங்கல்பத்தில் கண்டவைகள் யாவும் வாழ்க்கையில் நடந்ததைத் தழுவியே இருக்கவேண் டும்.) மேலும் காரணத்தைவிடக் காரியம் வேருக இருக்கமுடியாது : வாழ்க்கையில் அநுபவித்தது மெய் யாக இருந்தால், அதை அநுசரித்தே நிற்கும் சங்கல்பத் தோற்றம் எப்படிப் பொய்யாகும்?

லீலா: காரணத்தைக் காட்டிலும் ஏன் காரியம் வேருக இருக்கமுடியாது? உதாரணமாக மண்ணினுல்

நீரை எடுக்க முடியாது. ஆனால் அதிலிருந்து செய்யப்பட்ட பானையால் எடுக்க முடியும்.

சர: ஆம், நீ சொல்வது சரியே, உதவிக் காரண சகாயத்தால் காரணத்தைவிடக் காரியம் சொல்ப மாறுபாடு அடையலாம். அப்படியானால் உன் சங்கல்பத் தோற்றத்திற்கு உதவிக் காரணங்கள் யாவை?

லீலா: சங்கல்ப சிருஷ்டிக்கு ஸ்மிருதி (நினைவு) காரணமாகிறது.

சர: ஆம்: இதுதான் மேலும் சொல்லப்பட்டது; ஸ்மிருதி என்பதற்கு உருவமில்லை, அது ஆகாச ரூபமானது. அதன் காரணமாக ஏற்பட்டவைகளும் ஆகாய ரூபந்தானே. (சூன்யந்தானே)?

லீலா: அப்படியானால் இவ்வளவு காலம் நான் அநுபவித்த யாவும், என் பர்த்தா இருந்ததும் பிறகு இறந்ததும் எல்லாம் பொய்யா?

சர: ஆமாம், அதுதான் சத்தியம்.

லீலா: அப்படியானால் ஸ்தூல ரூபமான என் பர்த்தா எந்தக் கிரமப்படி சூக்ஷ்ம ரூபமான தோற்றத்தை அளித்தார்? இந்த விஷயம் எனக்கு விளங்கி விட்டால் பின்பு ஜகத்மோகமும் எனக்கு நீங்கும்.

சர: இதை விளக்க நான் ஒரு சிறு விஷயத்தைச் சொல்லுகிறேன். அதைக் கவனித்துக் கேட்டுக் கருத்தைக் கிரகித்துக்கொண்டால், உன் புத்தி தெளிவடையும்.

## 58. வசிஷ்ட - அருந்ததி விருத்தாந்தம்

விந்தியமலைப் பிரதேசத்தில் மிகவும் ரம்மியமான ஒரு சோலையினிடையில் மானிட சிரேஷ்டராக விளங்கிவந்த வசிஷ்டரென்ற ஒரு பிராம்மணர்

எல்லா விதத்திலும் தமக்குப் பொருந்திய அருந்ததி என்னும் மனையாளை அடைந்து காலம் கழித்து வந்தார். ஒரு நாள் இப்பிராம்மணர் மலைச்சாரின் வழியாகப் போய்க்கொண் டிருக்கையில் அடிவாரத்தை யதேச்சையாக நோக்க, அங்கே ஏராளமான படைகளுடன் கூடி வேட்டையாட வந்த ஒரு மன்னனைக் கண்டு, இவ்வளவு வைபவமிருந்தால் எவ்வளவு நன்றாயிருக்குமென்ற இச்சை அவர் மனத்தில் உதித்தது. இதற்குப்பின் கொஞ்சகாலம் கழித்து இவர் காலமாகவே, மனையாளும் மிக வருந்தி, சோகத்தால் மனமுருகி, உயிர் துறந்து தன் கணவனை மற்றோர் உலகத்தில் மீண்டும் அடைந்தாள். அந்த வசிஷ்டரென்ற பிராம்மணர் உன் கணவரே, நீயே அருந்ததி. இப்பிராம்மணர் இறந்து 8 தினம் ஆகின்றது.

லீலா: நீங்கள் சொல்லியவை யெல்லாம் விபரீதமாகத் தோன்றுகின்றனவே. நாங்கள் வசித்த நாட்டிற்கும் இந்தப் பிராமமண தம்பதிகள் இருந்ததாகச் சொல்லப்பட்ட பிரதேசத்திற்கும் எவ்வளவோ யோசனை தூரம் இருக்கின்றது. மேலும் நாங்கள் இத்தேசத்தில் எவ்வளவோ காலம் இருந்தோம். வசிஷ்டர் காலமாகி இப்பொழுதுதான் 8 நாள் ஆனதாகச் சொல்லப்பட்டது. என் பர்த்தா சற்றுமுன் இன்னோர் உலகத்தில் 16 வயதுள்ளவராகத் தோன்றினார். இவையெல்லாம் என்ன? ஜாலமா அல்லது நிஜந்தானா? காலத்திலும், தேசத்திலும் ஒன்றுக்கு ஒன்று யாதும் ஒப்பவில்லையே.

## 59. கால தேச உணர்ச்சி

சர: காலம், தேசம் இரண்டும் ஒவ்வொருவருடைய மனநிலையைத் தழுவி இருக்கின்றன. ஒரே

கால அளவு சில சமயங்களில் வெகு சீக்கிரம் கடப்பதாகவும், வேறு சமயங்களில் மிக மெல்ல நடப்பதாகவும் எல்லோருடைய அநுபவம். சொப்பனத்திலும், மயக்கமான நிலையிலும் கால அளவு உணரப்படுவதில்லை. ஆகவே காலமென்பது நம் மனத்தின் நிலையைத் தழுவி இருக்கிறதே தவிர, அது ஒரு தனி சத்தியமென்று ஏற்படவில்லை. இதேமாதிரிதான் தேசமும். இவ்விரண்டும் சித்தில் பிரதிபலிக்கும் தோற்றமே. இந்த அகண்டப் பிரபஞ்சத்தை ஒரு க்ஷணநேரத்தில் ஒரு தோற்றமாக நம் மனத்தில் காண்பதில்லையா? இதையே திருப்பிச் சொல்வோமாகில் மனத்தில் தோன்றிய ஆகாசமான தோற்றம் வெளிப்படையாக உருவமும் கனமும் கூடிய பிரம்மாண்டமான காட்சியாகிறது. ஆகையால் மனத்தில் தோன்றுவதும் வெளிப்படையாகக் காண்பதும் சித்தில் ஏற்படும் தோற்றங்களே. இதேமாதிரிதான் காலப்பிரமாணமும். பல வருஷங்களாக உன் மனத்தில் ஏற்பட்ட தோற்றம் வேறு சிலருக்குச் சொற்ப காலமாகத் தோன்றலாம்.

## 60. மரணத்திற்குப் பிறகு ஜீவன் செயல்

பிறகு ஜீவிதம் எடுக்கும் கிரமத்தைக் கவனிப்போமாகில், மரணத்திற்குப் பிறகு இந்த ஜீவன் சூக்ஷ்ம தேகத்துடன் எல்லாவற்றையும் ஸ்மரிக்கின்றது. ஆனால் சற்று முன்பு ஸ்தூல சரீரத்துடன் நடத்திய வாழ்வு முற்றும் அதன் கவனத்திற்கு வருவதில்லை. மேலும் இந்தச் சூக்ஷ்ம ஸ்திதியில் இதற்கு முன் அநுபவித்தவைகள் அநுபவிக்கப்படாதவைகள் எல்லாம், ஞாபகமின்றி, ஸ்மரிக்கப்படும். எல்லை இல்லாக் கற்பனைகளைச் செய்துகொள்ளச் சக்தி வாய்ந்திருப்பதால் ஜகத், காலம், தேசம், சம்சாரம், பந்துக்கள்

எல்லாவற்றையும் கற்பித்துக்கொள்ளுகிறது. இதற்கெல்லாம் காரணம் முன் செய்த செயல்களே. ஆனால் இவைகள் ஜீவனுடைய நினைவுக்கு மாத்திரம் வருவதில்லை. ஏனெனில் அநுபவங்கள் தேகத்துடன் கூடி உண்டாயின, ஆகையால் அத்துடன் ஒழிந்தும் விடுகின்றன. ஆயினும் மறு பிறப்புக்கு வேண்டிய சங்கல்பங்களை அது செய்துகொள்ளுகிறது. இந்த ஸ்திதியில் அநுபவிக்காததுகூட அநுபவித்ததுபோல் தோன்றும், சொப்பனத்தில் அயல் மனிதனை தன் தகப்பனாகக் காணுவதுபோல். ஜீவனுக்குச் சங்கல்பமே முக்கியமான செயல். திரும்பித் திரும்பி தேகத்தை எடுத்துக்கொள்ளுவதும் இதனாலேதான்.

லீலா: பிராம்மணனுடைய சங்கல்பத்தால் என் பர்த்தா ஏற்பட்டதாக இருந்தால், பிராம்மணன் யாருடைய சங்கல்பத்தால் ஜனனமானான்?

சர: பிராம்மண உற்பத்திக்குப் பிரம்மத்தில் ஏற்பட்ட ஆதிஸ்மிருதிதான் காரணம். ஆதிஸ்மிருதிக்கு யாதொரு காரணமும் கிடையாது. காரண காரிய பாவம் பிரம்மத்தில் ஒவ்வாது. அதில் எது எப்பொழுது தோன்றியதென்று சொல்ல முடியாது.

லீலா: உங்கள் உபதேசத்தால் என் அக்ஞானம் வெகுவாய் நீங்கியது. ஆயினும் ஒரு மனக்குறை, அதைப் பூர்த்தி செய்துகொள்ள வேண்டும். அதாவது அந்தப் பிராம்மணன் வசித்த இடத்தை உங்களுடன் நான் பார்க்க விரும்புகிறேன்.

பிரம்மாண்டத்தைச் சுற்றிப் பார்ப்பது எவ்வாறு?

அவ்விடத்தைப் பார்க்க நீ உன் தேகத்தையும் பிரபஞ்சத்தின் நினைவையும் விட்டு, மனத்தை நிர்மலமாகச் செய்துகொண்டு சங்கல்பித்துக்கொள்ளவும்.

லீலா: எனக்கு உங்கள் அநுக்கிரகம் இருக்கும் பொழுது ஏன் தேகத்துடன் போய்ப்பார்க்க முடியாது? அதற்கு ஒரு யுக்தி செய்ய உங்களால் முடியாம லிருக்குமா?

அதனாலேதான் தேகமும் ஏற்பட்டது.

சர: ஜகத்தாகிய மனோ மோகத்திற்கு உருவமும் கனமும் கிடையாது. அது மனத்தால் கற்பிக்கப் பட்டது. அது மனிதரிடத்து வெகு காலமாய் வேரூன்றிவிட்டது.

இந்த மோகம் நீங்கும் வரையில் கனத்தை உடைய உடலே அதற்குத் தடையாக இருக்கிறது. ஆகையால் நீ உன் உடல்மேலுள்ள மோகத்தை நீக்கிக்கொள்ளும் வரையில் உன் எண்ணம் பூர்த்தி யாகாது. உன் சங்கல்பத்திலே தோன்றும் தேசத் திற்கே உடலுடன் நீ போகமுடியாமலிருக்கையில் வேறொருவன் சங்கல்ப நகரத்திற்கு நீ எப்படிப் போக முடியும்?

லீலா: அப்படியானால் நாம் இருவருமே சூக்ஷ்ம சரீரத்துடன் போவதாக இருக்கட்டும். அப்பொழுது சங்கல்பம் செய்துகொண்டு தேகத்தை விட்டுவிட என்னால் முடியும், நீங்கள் எவ்வாறு என்னுடன் வரமுடியும்?

சர: என் சரீரம் மிகவும் சூக்ஷ்மமானது. அதற்கு எதுவும் தடங்கல் செய்ய முடியாது. என் சங்கல்பம் சித்தைக் காட்டிலும் வேறில்லை. ஆகையால் அது எங்கும் வியாபித்திருக்கிறது. நினைத்த மாத்திரம் அங்கே இருக்கலாகும். ஆனால் என்னை ஒட்டிக் கொண்டு நீ ஏன் என்னுடன் வரலாகாதென்று கேட்க லாம். ஸ்தூல சரீரத்துடன் கூடிய ஜீவன், முற்றும்

சூக்ஷ்ம சரீரமாகியிருப்பதுடன் ஒட்டாது. கற்பனையால் ஒரு மலையைச் சிருஷ்டி செய்யலாம். அதை ஆகாயத்தில் பறக்கவும் வைக்கலாம். ஆனால் அதைப் பூத சம்பந்தமான மலையால் தடுக்க முடியுமா?

லீலா: அப்படியானால் இந்தச் சூக்ஷ்ம சரீரத்தை ஸ்தூல சரீரத்துடன் அடைய முடியுமா முடியாதா?

சர: ஏதாவது உண்டாகி யிருந்தால்தானே அதற்கு அழிவு என்று ஏற்படும்? பிரமத்தால் ஏதோ இருப்பதாக உன் மனத்திற்கு தோன்றிவருகிறது. பிரமம் நீங்கினால் நீ உன் சுய நிலையை அடைவாய். கயிற்றைப் பாம்பாக நினைத்தவனுக்கு, அறிவு ஏற்பட்டவுடன் பிரமம் நீங்கியது. அவ்விடத்தில் பாம்பு மறைந்ததென்றோ அல்லது பாம்பு கயிறாக மாறினதென்றோ சொல்ல முடியுமா? இரண்டும் தவறு. அதேமாதிரி அக்ஞானமே உன் பந்தத்திற்கும் மோகத்திற்கும் காரணம். இவ்வளவு காலம் விசாரணை செய்யாமலிருந்ததால் சம்சார வலையில் சிக்கிக்கொண்டு துக்கத்திற்குப் பாத்திரமானாய். இப்பொழுது விசாரணை செய்துவந்தால் அக்ஞானம் க்ஷண நேரத்தில் நீங்கலாம். இப்பொழுது இந்த அக்ஞானமும் அதனால் ஏற்படும் வாசனையும் க்ஷீணிக்கும் பொருட்டு உன் மனத்தில் ஒரு விதை விதைத்திருக்கிறேன். இனி அவைகள் நாளுக்கு நாள் குறைந்து, உன மனது கூடிய சீக்கிரமே நிர்விகல்ப சமாதியை அடையும்.

ஸ்தூல சரீரம் ஏற்படுவதும் அழிவதும்

சொப்பனத்தில் வாசனை நீங்கினால் நல்ல தூக்கம் ஏற்படுவதுபோல உலக வியவகாரத்தில் வாசனைகள் நீங்கினால் ஜீவன் முக்தனாகிறான். அதாவது எதிலும்

இச்சையின்றிக் கிரியைகளை நடத்துகிறவனுவன். இந்த ஸ்திதியிலேயே இருந்துவந்தால் ஸ்தூல சரீரத்தில் பிடிப்புவிட்டுச் சூக்ஷ்ம சரீரம் பலப்படும். ஸ்தூல சரீரம் ஏற்படும் காரணம், அதாவது வாசனைகள், முற்றும் அழிந்தால் அப்பொழுதுதான் சூக்ஷ்ம சரீரத்திற்கு, வேறு சிருஷ்டியிலே, இதர மனங்களுடனே கலக்கும் சக்தி ஏற்படும். பூத சரீரத்துடன் இப்படிச் செய்ய முடியாது. ஏனெனில் அது பூத சரீரத்துடன் தான் சேரும்.

இப்பொழுது உனக்கு அகங்காரம் நீங்கினுல் சுயமான அறிவு ஏற்படும், சூக்ஷ்ம சரீரமும் ஸ்திரமாக நிற்கும். ஸ்தூல சரீரத்தின் விருத்தி குறைபடும். ஸ்தூல சரீரத்தின் நாசந்தான் மரணமென்று வியவகாரத்தில் சொல்லப்படுவது. ஆனுல் இந்த மரணமென்பதும், சொப்பனத்தில் காணும் ஜீவிதம், மரணம் எல்லாம் விழித்தவுடன் எப்படிக் கற்பனையென்று தோன்றுகின்றனவோ, அப்படியே ஜீவனுக்கு அறிவு ஏற்பட்டவுடன் கற்பனையென்றே தெளிவுபடும்.

இந்த ஜீவன்முக்த ஸ்திதியை அடைய இடைவிடா முயற்சியும், அப்பியாசமும் வேண்டும். இவ்வப்பியாசம் இருமுறைப்படும். அதாவது (1) பிரம்மாப்யாசம்; (2) ஞானுப்பியாசம். முதலில் சொன்ன முறை கொஞ்சம் குறைப்பட்டதாகத்தான் பாவிக்கப்படும், ஏனெனில் இதுவும் ஒரு நோக்கத்தைக் குறித்துச் செய்யும் முயற்சியாதலால். ஞானுப்பியாசத்திலோ நோக்குகிறவன் நோக்கமென்ற துவைத பாவமும் நாசமடைகிறது. இதுதான் பரம சாந்த நிலையை அடையச் செய்கிறது.

61. சரஸ்வதியும் லீலாவும் வசிஷ்ட தேசம் செல்லுதல்

வசிஷ்டர்: பிறகு தேவியும் லீலாவதியும் இருவருமாக ஆகாயத்தில் சஞ்சரிக்கலானார்கள். இச்சஞ்சாரத்தில் பூமியின் எல்லைப் பிரதேசங்கள், சந்திர சூரிய நட்சத்திர மண்டலங்கள் எல்லாம் கடந்து அக்காட்சிகளைக் கண்டு மறுபடியும் பூவுலகத்திற்குத் திரும்பினார்கள். திரும்பினதும் நேராக, பிராம்மண தம்பதிகள் வசித்துவந்த பிரதேசத்திற்குச் சென்று, அங்கே மரித்தவர்களைக் குறித்து ஆழ்ந்த துயரத்திலிருக்கும் குடும்பத்தைக் கண்டார்கள்.

உடனே தேவியானவள் மானிட உருவம் தரித்து, காலஞ்சென்ற பிராம்மணனுடைய மூத்த குமாரனாகிய ஜேஷ்ட சர்மாவைத் துக்கம் விசாரித்து அவனுக்குத் தக்க ஆறுதலையும் சொன்னாள். லீலாவதியோ இருந்த வண்ணம் மறைந்தவாறு அநுக்கிரகம் செய்தாள். ஆனால் பிற்பாடு, அவ்வூரை விட்டுப் புறப்படும்முன் ஜேஷ்டசர்மாவை வனத்தில் சந்தித்த பொழுது, வனதேவதை ரூபமாக அவனுக்குத் தரிசனமும் அநுக்கிரகமும் கொடுத்தாள். பின் தேவியும் லீலாவதியும் மறைந்தார்கள்.

ராமன்: லீலாவதி ஏன் தன் பிள்ளையாகிய ஜேஷ்டசர்மாவுக்குத் தன்னுடைய சுயமான தரிசனத்தைக் கொடுக்கவில்லை?

வசிஷ்டர்: பூத உடலை யுடையவர்கள் பூத உடலுடன் இருப்பவர்களைத்தான் உணர முடியும். லீலாவதியோ அந்தச் சமயத்தில் சூக்ஷ்ம சரீரத்துடன் இருந்தாள், ஆகையால் ஜேஸ்டசர்மாவால் உணர முடியவில்லை. மேலும் லீலாவதிக்குச் சற்று ஞானம் உதயமாயிருந்தபடியால் பிள்ளை, உறவினர் என்ற

அக்ஞானமில்லை, வாஞ்சை இல்லை. ஆனால் ஏன் அவனுக்கு அநுக்கிரகம் செய்தாளென்றால் சித்தின் குணமே எல்லோரையும் சந்தோஷப்படுத்துவது.

பிறகு இருவருமாக லீலாவதியின் அந்தப்புரம் அடைந்து, அங்கே ஒருவர்க்கொருவர் சங்கல்ப நிலையிலேயே சம்பாஷித்துக் கொண்டார்கள். அப்பொழுது லீலாவதி தன் குமாரன் ஏன் தன்னைப் பார்க்கவில்லை என்று சரஸ்வதியைக் கேட்டாள். லீலாவதிக்குத் துவைத பாவம் நீங்காமலிருந்தபடியாலும் மேலும் அவள் சூக்ஷ்ம சரீரத்திலிருந்தபடியாலும் ஜேஷ்டசர்மாவால் உணரமுடியவில்லையென்றும், பிற்பாடு துவைத பாவம் நீங்கியதும் வனதேவதையாகத் தரிசனம் கொடுக்க இயன்றது என்றும் சரஸ்வதி சொன்னாள். இதனால் லீலாவதியின் சங்கல்பம் சத்தியமானதாக ஏற்பட்டது.

பிறகு லீலாவதி தான் கடைசி முறையாகத் தன் கணவனை ஒரு தரம் பார்க்கவேண்டுமென்று இச்சித்தாள். அதற்குச் சரஸ்வதி பதில் சொன்னதாவது:—

"நீ இதுவரையில் எண்ணூறு ஜன்மம் எடுத்தாயிற்று. இவைகளில் கடைசியாக ஏற்பட்ட ஜன்மத்தைப்பற்றிச் சற்று முன்புதான் சொன்னேன். பத்மனின் உடல் சவமாக அந்தப்புரத்தில் மூடப்பட்டிருக்கிறது. கொஞ்ச நேரம் முன் உன் சங்கல்பத்தில் தோன்றிய பர்த்தா இன்னோர் உலகத்தில் சம்சாரத்தில் மூழ்கி ராஜ்ய பாரம் செலுத்தி வருகிறான். ஆகவே இம் மூவரில் எந்தப் பர்த்தாவைப் பார்க்க இச்சைப்படுகிறாய்?" என்று கேட்டாள்.

லீலாவதி சற்று யோசனை செய்தாள். கொஞ்ச நேரத்தில் மனக்கலக்கம் நீங்கி, அக்ஞானம் முற்றிலும்

அறுபட்டு ஞானம் மேலும் முதிர்ந்தது. புத்தியின் தெளிவினால் பூர்வ ஜன்மங்களின் ஞாபகம் ஏற்பட்டது. இவைகளைத் தேவியிடம் சொல்லி, தான் இப்பொழுது இவைகளிலிருந்து விடுபட்டதாகச் சொன்னாள்.

பிரம்மாண்டத்தின் அளவு

ராமன்: மிகவும் கனம் பொருந்திய பிரம்மாண்டமாயுள்ள பிரபஞ்சத்தை விட்டு இந்த ஸ்திரீகள் இருவரும் எப்படி வெளிக் கிளம்பினார்கள்?

வசிஷ்டர்: இந்த ஸ்திரீகள் இருப்பிடத்தை விட்டு எங்கேயோ வெகு தூரம் போகவில்லை.

இந்தப் பிரம்மாண்டம் முழுவதும் ஒவ்வோர் அணுவிலும் அடங்கி இருக்கிறது. ஆகையால் பிரபஞ்சத்தின் எல்லையை அடைய இவ்விடத்திலிருந்தே முடியும். இவ்விதமே அந்த ஸ்திரீகளும் பிரம்மாண்டத்தைச் சுற்றிப் பார்த்தார்கள். பிராமணன் அரசனாக இருக்கச் சங்கல்பம் செய்துகொண்டான். ஆகையால் அந்தப் பிரதேசத்திலேயே அவ்விதமே அரசனாக ஆனான். பிரம்மாண்டமும் சம்சாரமும் சித்தில் உண்டான தோற்றங்களே. சித்தாகிய சத்தியத்திற்கு எல்லையே கிடையாது. எல்லையற்றதாகத் தோற்றமளிக்கும் பிரபஞ்சம் சித்தினுடைய அணுவில் அடங்கி இருக்கிறது. சித்தில் ஓர் அசைவு ஏற்பட்டால் அதிலிருந்து "ஸ்பந்த யுக்தி" (waves of mentation) என்று சொல்லப்படும் பல கோடி அசைவுகள் கூடவே ஏற்பட்டு பிரபஞ்சமாகிய தோற்றம் ஏற்படுகிறது.

பிறகு இந்த ஸ்திரீகளிருவரும் மறுபடியும் உயரக் கிளம்பி பிரபஞ்சத்தின் எல்லையைக் கடந்து சந்திர லோகம், சூரிய லோகம், சூரிய கிரணங்களே எட்டாத

காடாந்தர இருட்டாகிய பிரதேசங்களையும் கடந்து, பரம சாந்தமும் தேஜசும் நிறைந்த பிரம்மலோகத்தை அடைந்தார்கள். அவ்விடம் விட்டுப் புறப்பட்டுப் பத்மனாக இருந்த அரசன் தற்சமயம் அரசாட்சி செய்து வரும் உலகத்தை அடைந்து, அங்கே கண்டதாவது: வேறொரு சிற்றரசன் இந்த ராஜ்யத்தின்மீது படையெடுத்துவந்து இரு சேனைகளும் உக்கிரமாகப் போர் புரிவதையும். இக்காட்சியைக் காணவந்த அப்சரஸ், கின்னரர், வித்யாதரர்கள், முனிகளையும்.

குறிப்பு

லீலாவதி பல பிரதேசங்களைக் கடந்தது, சங்கல்பத்திலென்று நாம் அறியவேண்டும். இருப்பிடத்திலேயே சங்கல்பத்தால் ஒவ்வொரு பூத சம்பந்தத்திலிருந்தும் விடுவித்துக்கொண்டு கடைசியில் அறிவு என்னும் சத்தியத்தில் மனத்தை லயப்படுத்தினாள். இந்நிலையில் அவளுக்கு இதர மனத்தில் நுழைந்து பார்க்கும் சக்தி ஏற்பட்டது.

வசிஷ்டர் சண்டையை மிகவும் பிரபலமாகவும், வெகு அழகாகவும் 32-39-வது சர்க்கங்களில் வர்ணித்திருக்கிறார். சூரனுடைய குணாதிசயங்களைப்பற்றியும், சண்டையில் மரணமடைபவர்களில் யார் சொர்க்கத்திற்கும் நரகத்திற்கும் உரிமையானவர்கள் என்பதைப் பற்றியும் விவரித்துச் சொல்லி இருக்கிறார். சூரனென்பவனுக்கு நற்குணம், ஒழுக்கம் இவைகளிருப்பதுடன் தன் பிரஜைகளை ரக்ஷிக்கும்பொருட்டு அநீதியாய்ப் படையெடுத்துவரும் அரசர்களுடன் போர் புரிவது முக்கியக் கடமை. இவ்வித அரசன்பொருட்டுப் போர்புரியும் பிரஜைகளே சொர்க்கத்திற்கு உரிமையானவர்கள். அக்கிரமமான அரசன்பொருட்டுக்

கடமையென்று செய்யும் காரியங்களால் ஒரு நன்மையும் ஏற்படாது. இவ்விதப் பிரஜைகளும் குற்றம் செய்தவர்களாகத்தான் கருதப்படுவார்கள்.

வால்மீகி: லீலாவதியின் சஞ்சாரத்தைக் கேட்டதும் ராமனுக்கு ஒரு சந்தேகம் தோன்றி அதைத் தெளிவுபடுத்தும்படி வசிஷ்டரைக் கேட்டான்.

ராமன்: லீலாவதி எவ்விதம் தங்கு தடையின்றி எங்கும் சஞ்சரிக்கலானாள்?

வசிஷ்டர்: சங்கல்பமாகிய சூக்ஷ்ம சரீரத்துடன்தான் இவ்விதம் செய்யக்கூடும்; பூத உடலுடன் போக முடியாது. ஏனெனில் பஞ்ச பூதங்களின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டுத்தான் தேகம் இருக்கமுடியும். ஜலத்தால் ஓடும் தன்மையை விட்டு நிற்க இயலாது. தீயால் மேல்நோக்கி எரிவதைவிட்டுக் கீழ்நோக்கி எரிய முடியாது. ஆகையால் உடலென்னும் ஞாபகமும் சிந்தனையும் இருக்கும்வரையில், அதாவது திரும்பித் திரும்பிப் பூத உடலை எடுத்துக்கொள்ளும் ரீதியில் மனிதர்கள் இருக்கும்வரையில், அதற்குண்டான கட்டுப்பாடுகளுக்கு (Laws of nature) உட்பட்டுத்தான் இருக்க வேண்டும்.

### மொழிபெயர்த்தவர் குறிப்பு

(இதனாலும், கூடுவிட்டுக் கூடு பாய்வதென்று நாம் பலவாறாகக் கேட்டும் படித்தும் இருப்பதெல்லாம் கவித்வமென்று அறியவேண்டும். இது ஏற்படுவது மரணத்திற்குப் பிறகு ஜீவன் வேறு உடலை அடையும் பொழுதுதான். காலத்துக்குத் தகுந்தவாறு ஜீவன் வேறு உடலைத் தேடிக்கொள்ளும் கிரமமும் இதுவே.)

ஜன்மங்கள் ஏற்படும் முறை

"சூக்ஷ்ம ஸ்திதியிலிருக்கும் அறிவின் விஸ்தரிப்பே சம்சாரமாகவும் பிரபஞ்சமாகவும் தோற்றத்தை அளிக்கிறது. அறிவின் பிரவிர்த்திதான் சிருஷ்டியென்பதும். இந்த ஜீவனுடைய ஒவ்வோர் ஆயுள்காலமும் ஒரு சிருஷ்டியே. மூர்ச்சைக்குச் சமமான மரணமென்ற கதி ஜீவனுக்கு ஏற்பட்டதும் தேகத்திலிருந்து விடுதலையடைந்து, நடந்ததெல்லாம் மறந்து, புதிய அநுபவத்தைத் தேடிக்கொள்ளுகிறது. இந்தப் புதிய அநுபவம் பூர்வ வாசனையின் காரணமாயிருந்தும், ஜீவன் அதை அறிவதில்லை. ஆனால் இதுவே அதற்கு அடுத்த சிருஷ்டியாகிறது. இப்படி ஒவ்வொரு ஜீவனும் அடுத்தடுத்துச் சிருஷ்டியிலேயே பிரவிர்த்தித்து நிற்கிறது. ஒவ்வொரு சிருஷ்டியிலும் ஒரு பிரபஞ்சத்தை உண்டுபண்ணிக்கொண்டு அதிலே தன் காலத்தைக் கழித்து, இதுவே அடுத்த சிருஷ்டிக்கும் காரணமாயிருந்து, பிரளயமென்னும் மரணாவஸ்தை ஏற்பட்டு, அடுத்த சிருஷ்டிக்குத் தயாராகிறது. ஞானம் ஏற்பட்ட க்ஷணம் சிருஷ்டியின் வேகம் அடங்கும்; அப்பொழுது ஜீவன் பிரவிர்த்திப்பதைக் குறைத்து மகாப் பிரளயமென்னும் ஸ்திதியை அடைந்து தன் சுய சொரூபமாகிய அறிவென்பதில் ஸ்திரமாக நிற்கும். இப்படி இருப்பவள்தான் சரஸ்வதி தேவியும்.

கதைக்குத் திரும்ப, லீலாவதியின் இச்சையைப் பூர்த்திசெய்யும் பொருட்டு, சரஸ்வதி அவளை அழைத்துக்கொண்டு பத்மனைப் பார்க்கப் போனாள். சண்டையின் அலுப்பால் அரசன் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தான். பக்கத்தில் மந்திரியும் படுத்திருந்தான். ஸ்திரீகளின் சந்நிவேசத்தால் அரசன் உடனே விழித்துக்கொண்டு, அவர்களின் முகலக்ஷணத்தால் யாரென

ஊகித்துக்கொண்டு, வணங்கியவண்ணம் உட்கார்ந்து, தனக்கு அவர்களின் தரிசனத்தால் எளிதில் கிடைத்த பாக்கியத்தைத் தெரிவித்தான். இதனுள் மந்திரியும் விழித்துக்கொண்டு அவர்களை நமஸ்கரித்து நின்றான். பிறகு தேவியானவள் மந்திரியை நோக்கி அரசனுடைய வரலாற்றைப்பற்றிச் சொல்லும்படி கேட்டுக் கொண்டாள். மந்திரியானவன் உடனே அரசனுடைய குலம், கோத்திரம், பூர்விகமெல்லாம் எடுத்துச் சொல்ல, தேவி விதூரகனென்று அழைக்கப்பட்ட பத்மனைத் தொட்டு அநுக்கிரகித்து அவனைப் பேசச் சொன்னாள். தேவியின் திவ்ய ஸ்பரிசத்தால் விதூரகனுக்குப் பூர்வ ஜன்மங்களின் ஞாபகம் வந்து, அதன் காரணமாகக் கொஞ்சம்ஞானமும் உதித்தது. ஞாபகத்தில் தோன்றிய ஜன்மங்களைப் பற்றித் தேவியிடம் சொன்னான். கடைசியாகத் தேவியை நோக்கி, "நான் பூமண்டலத்தில் மரணமடைந்து ஒரு தினந்தான் கழிந்திருந்தும், பல வருஷங்கள் கழிந்தது போலிருப்பது எப்படி?" என்று கேட்டான். "காலமும் தேசமும் வெறும் தோற்றங்கள்; நீண்ட காலத்திய அநுபவம் சொப்பனத்தில் எப்படி சொல்ப நேரத்தில் முடிந்துவிடுகிறதோ, அது போலவேதான் உன்னுடைய பல வருஷங்களான உணர்ச்சியும்.

மொழிபெயர்த்தவர் குறிப்பு

இங்கே சொல்லியதன் தாத்பர்யமாவது: பூத உடலின் சம்பந்தமிருக்கும்பொழுது ஏற்படும் கால உணர்ச்சியும், சொப்பனம், மூர்ச்சை ஆகிய தேக சம்பந்தமற்ற நிலையில் ஏற்படும் கால உணர்ச்சியும் வெவ்வேறாகுமென்பதாம். ஸ்தூல தேகத்திற்கு உண்டான கட்டுப்பாடுகளும் நியதிக்

கிரமங்களும் ஒருவித கால உணர்ச்சியையும் அளவையும் தருகின்றன. சூக்ஷ்ம ஸ்திதியில் இக் கட்டுப்பாடுகளின் தடை கிடையாது; ஆகவே கால அளவும் வேருகும். இதனுல், பிரபஞ்ச காலப் பிரமாணத்தை ஒத்து, வெகு நீண்ட காலத்தின் அநுபவம் க்ஷண நேரத்தில் ஏற்படலாம். பத்மனுக்கு ஏற்பட்ட அநேக வருஷத்திய அனுபவமும் இவ்விதமே.

தொடர்ந்து, தேவி, "இந்த உணர்ச்சி என்பது, ஒரு தோற்றம். சொப்பனத்தில் எவ்வளவோ அசம்பாவிதமான தோற்றங்கள் ஏற்படுகின்றன. இவைகள் எவ்வளவு நிஜமோ அப்படியேதான் ஜீவிதமென்ற தோற்றமும். கால அளவில்தான் வித்தியாசமிருப்பதாகத் தோன்றுகிறது. இவ்விரண்டு விதத் தோற்றங்களும் சாட்சியாய் நிற்கும் அறிவில் பிரதிபலிக்கும் கேவலக் காட்சிகளே. ஒவ்வொரு மூர்ச்சையாகிய மரணத்திற்குப் பிறகு, இடமும் காலமும் வேருகத் தோன்றுகின்றன. அதாவது 'ஒன்றும் இருப்பிடத்தை விட்டு அசைவதில்லை.

### பிரபஞ்ச அநுபவம் ஒரு தோற்றமென்பது

வசிஷ்டர்: ராமா! சரஸ்வதி தேவியின் மொழிகளிலிருந்து நாம் அறிவதாவது, பிரபஞ்சமாகிய தோற்றம் மூடர்களுக்குத்தான் வஜ்ராயுதம் போல் கெட்டியாயும் அழிவற்றதாயும் தோன்றுகிறது. உதாரணமாக அசத்தியமான வேதாளமென்பதன் பயம் ஒரு மூடனைச் சாகும் பரியந்தம் விடாமல் பிடித்துக்கொள்ளுகிறது. வேதாளம் பொய்யாயிருந்தும் மூடன் படும் அவஸ்தைகள் மெய்யே. காட்டில் தாகத்தால் தவிக்கும் மானைக் கானலானது நீரைப் போன்ற தோற்றத்தைக்

கொடுத்து ஏமாற்றம் செய்கிறது. தங்கத்தையே பார்க்காதவன் தங்க வளையலைக் காணும்பொழுது இதுவே தங்கத்தின் சொரூபமென எண்ணுகிறான். இவ்விதமே மூடர்களால் உணர்ச்சிகளிலேயே நோக்கமிருப்பதால் இந்திரியங்களுக்குப் புலப்படுகிறவைகள் சத்தியமென்று எண்ணப்படுகின்றன. இவைகளைத் தவிர்த்து வேறொன்று சாசுவதமாயும் சத்தியமாயும் இருப்பதை இவர்கள் உணருவதில்லை.

சொப்பனத்தில் ஒரு நகரத்தைக் காண்கிறோம். காணும்பொழுது அது வாஸ்தவமாகவே இருக்கிறது. விழித்தவுடன், சொப்பனம் ஞாபகத்திலிருந்தும், அசத்தியமென அது உணரப்படுகிறது. அதுபோலவே விழித்திருக்கும்பொழுது ஏற்படும் அநுபவங்களும் உணர்ச்சிகளும் அந்தக் காலத்தில்தான் சத்தியம். இதுவும் ஒரு நீண்ட சொப்பனமே, ஏனெனில் இதுவும் ஒரு கால அளவில் முடிவுபெற்று, அதாவது மரணம் ஏற்பட்டதும், பிறகு இந்த அநுபவங்களும் அறியப்படாமல் போகின்றன. ஆகையால் இரண்டுவித அநுபவங்களும் சித்தில் ஏற்பட்ட தோற்றங்கள், ஆகவே அசத்தியம். ஆனால் சத்தியமாகிய சித்தில் ஏற்பட்டவைகளாதலின் இவைகளுக்குச் சத்தியபாவமும் உண்டு. அதாவது அந்த அந்தக் காலப்பிரமாணத்தில், இப்படித் தற்காலச் சத்தியமாக இருப்பதால்தான் ஒருவர்க்கொருவர் வியவகாரங்களை நடத்தி வருகிறோம்.

## விதூரதன் வரம் அடைதல்

கதைக்குத் திரும்ப, சரஸ்வதி தேவி விதூரதனைப் பார்த்து அவனைப் பார்க்க வந்ததன் கருத்து

இத் தத்துவங்களை அறிவிக்கும்படி என்று சொன்னாள். லீலாவதிக்கும் இவைகள் போதிக்கப்பட்டன வென்றும், இவைகளைப் பிரத்தியக்ஷமாகக் காண்பிக்கும் பொருட்டு அவனிடம் அழைத்துவந்ததாகவும் சொன்னாள். விதூரதன் பிரமித்துச் சந்தோஷமடைந்து தேவியின் தரிசனம் வீண்போகாமலிருக்கத் தனக்கு ஒரு வரத்தைக் கொடுக்கும்படி தேவியை வேண்டிக்கொண்டான். அதாவது: தான் தன் பழைய ராஜ்யத்திற்குத் திரும்பி அதே மனைவி, மந்திரி, சுற்றத்தாரெல்லோரையும் அடைய வேண்டுமென்று தேவி வரனைக் கொடுத்து, ஆனால் இச்சண்டையில் அவன் தோல்வியடைந்து உயிரையும் இழக்கலாகுமென்றாள்: இதன் பிறகு அவன் இஷ்டம் பூர்த்தியாகும். உடனே தேவி அவ்விடத்தை விட்டுப் புறப்பட யத்தனித்தாள். அச்சமயம் இரவாக இருந்தும் சண்டை வெளிப்புறம் நடப்பதாகக் காணப்பட்டது. விதூரதனுடைய சேனைகள் எதிர்பாராமலும் அதர்மமாகவும் இரவில் தாக்கப்பட்டதால், சின்னபின்னமாகி, பட்டணமெல்லாம் கொளுத்தப்பட்டு சண்டையும் ஒரு முடிவுக்கு வரும்போல் தோன்றிற்று. விதூரதன் இக்காட்சியை ஒரு கண்ணால் பார்த்தவனாக இருந்ததால் உடனே ஆயுதங்களணிந்து வெளிக்கிளம்பித் தன்னால் கூடிய சண்டையைச் செய்யப் புறப்பட்டான். அரசன் போனதும் அவனுடைய மனைவியாகிய லீலா தன்னையும் தன் தோழிகளையும் ரக்ஷித்துக் கொள்ளும் பொருட்டு தன் கணவனைத் தேடிவந்தவள் சரஸ்வதியும், பூர்வலீலாவும் இருக்குமிடம் வந்துசேர்ந்தாள்.

இவளைக் கண்டதும் தன்னுடைய பிரதிபிம்பம் போலிருப்பதை உணர்ந்து பூர்வ லீலாதேவியைநோக்கி

நாளுகிய இவள் இப்பொழுது இங்கே என்முன் எப்படி வந்தாள்? மந்திரியும் இதர பரிவாரங்களும் என் தேசத்தில் இருந்ததுபோலவே இங்கும் ஒரே காலத்தில் இருப்பது எப்படி?" என்று கேட்டாள்.

சரஸ்வதி: நாம் இப்பொழுது உணருவதும் அநுபவிப்பதும் முன்னுல் சித்தில் ஏற்பட்ட சங்கல்பங் களே. உணர்ச்சியென்ற நோக்கம் நம்மிடத்தில் வெகு காலங்களாக வேரூன்றியிருப்பதால் இவ்வெளித் தோற்றங்கள் சத்தியமாகவும் கன ரூபமாகவும் உணரப் படுகின்றன. ஆனல் சொப்பனத்தில் தோன்றுகிறவை கள் எப்படி அக்காலத்தில்தான் சத்தியமோ அப்படியே விழித்திருக்கும்போது ஏற்படும் அநுபவங்களும் அக் காலத்தில்தான் சத்தியம். சொப்பனத்தில் ஜாகிரத் அவஸ்தை அசத்தியம். விழித்திருக்கையில் சொப்ப னம் அசத்தியம். ஜன்மாவில் சாவு அசத்தியம். சாவில் ஜன்மம் அசத்தியம். நாசம் இவைகளுக்கெல்லாம் சகஜம். ஆகவே இவைகள் சத்துமல்ல, அசத்துமல்ல, வெறும் மதிமயக்கம். அந்தந்தக் காலப் பிரமாணத்தில் அவை அவைகள் சத்தியம். ஆனல் நித்ய சத்தியத் தைக் குறித்துப் பேசுங்கால் எல்லாம் அசத்தியமே.

எக்காலத்திலும் எது ஒன்று அறியப்படாததோ அதுதான் பிரம்மம், அதுதான் ஜகத். இந்தப் பிரம் மத்தில், சிருஷ்டியானது விஸ்தாரமடைகிறது. அதில் நீ, நான் என்பவைகளெல்லாம் பொய். ஆகையால் இவைகள்மேல் ஏன் பற்றுதல்? இதில் மதிமயக்கத் துக்கு இடம் ஏது? இருட்டில் தோன்றுகிற பிசாசுக ளெல்லாம் இருட்டே தவிரப் பிசாசுகளல்ல. அதுபோல நித்தியமான பிரம்மத்தில் தோன்றும் ஜனன மரணங்

களும் பிரம்மமே தவிர ஜனன மரணங்களல்ல. இவைகள் நம் கற்பனைகளேயாகும்.

இந்தப் பிரம்மமானது ஆகாயத்திலும் பரமாணுக்களின் உட்புறமும், திரவ்யங்களின் ஒவ்வோர் அணுக்களிலும் வியாபித்திருப்பதால், இவைகள் யாவும் பிரம்மத்தைத் தவிர வேருகமாட்டாது. ஆகையால் தானுக இருக்கும் இப் பிரபஞ்சத்தைத் தன் விருப்பம் போலெல்லாம் ஆத்மா காண்கிறது. சூரியகிரணங்களில் காணப்படும் அணுக்கள்போல எண்ணிக்கையற்ற பிரம்மாண்டங்களாகிய அணுக்கள் இந்தப் பிரம்மம் உதிக்கையில் தோன்றுகின்றன. வாயுவின் அசைவும் கந்தமும், ஆகாயத்தின் சூன்யமும் உருவமற்றிருந்தும் எவ்விதம் இருப்பதாகவே அறியப்படுகின்றனவோ அதுபோலவேதான் பிரம்மமும். அதனுள் பிரபஞ்சம் விஸ்தாரமடைவதால் இருப்பதாகவே கொள்ள வேண்டும். இருப்பது, இல்லாதது, ஏற்பது, ஏற்காதது, சரம், அசரம், ஸ்தூலம், சூக்ஷ்மம் என்பதெல்லாம் நம் புத்திக்கு விளங்குவதற்காக ஏற்பட்டவையே தவிர உண்மையில் பிரம்மத்தின் பாகங்கள் ஆகமாட்டா. பிரம்மத்தைக் காட்டிலும் வேறல்லாத இவற்றைப் பிரம்மத்தின் அவயவங்களாகக் கருதுவதும் பொருந்தாது. ஆகவே கயிற்றில் காணும் சர்ப்பத் தோற்றம் போல் பிரம்மத்தினிடத்தில் காணும் இப் பிரபஞ்சம் சத்தியமென்றோ அசத்தியமென்றோ முடிவாகக் கூற முடியாது.

இந்த ஜீவன் என்பது சித் அல்லது பிரம்மத்தின் தன்மையாக இருப்பதால், ஜீவன் சித்தில் விஸ்தரிப்பதாக எண்ணுவதே பொருந்தும். சித்தில் ஜீவன் தன்னை நெடுங்காலம் ஜீவனுகவே கருதி வந்ததால்

ஜீவத்தன்மையே பெருகி வருகிறது. தோற்றமாகப் பெருகி வந்தாலும், ஜீவன் சத்தியமாகிய பிரம்மத்தி லிருந்து உற்பத்தியானதால் தன் இச்சைகளையும் சத்தி யமாகவே அடையவேண்டும். ஆகையால்தான் இவ் விச்சைகள் நினைத்தபடி பூர்த்தியாகின்றன. ஆனால் இவைகளும் தோற்றங்களே. ஆகவே இப் பிரபஞ்சம் சத்தியமாகக் கொண்டாலும் அசத்தியமாகக் கொண் டாலும் ஆகாயத்தில் தோன்றிய தோற்றமே. இதைத் தழுவியே இந்த ஜீவன் தன்னிடத்தில் (ஜீவாகாசத் தில்), தன் அநுபவங்கள் அசத்தியமாகி இருந்தும், சத்தியம் போலவே குலம், ஒழுக்கம், நடத்தை, பிறப்பு இவற்றால் ஒன்றெனவே தோன்றும்படி அதே மந்திரி, சேவகர்கள், குடிமக்கள் இவைகளைக் கொண்டு அதன் இஷ்டப்படி தோற்றத்தில் உண்டாக்கிக் கொள் கின்றது. இவன் விஷயத்தில் அவர்களும் சத்தியமான வர்களே, தேச காலங்களாலும் சமமானவர்களே. எங்கும் வியாபித்திருக்கும் ஆத்மாவின் சொரூபத்தை கொண்ட தோற்றத்திற்கு இதுவே நியதி. அதாவது சம்வித் (சித்) ஆகிற கண்ணாடி எங்குமிருப்பதால் சங்கல்பம் எங்கு எவ்விதம் உண்டாகிறதோ அங்கு அவ்விதமே பிரதிபிம்பம் தோன்றுகிறது. ஜீவாகாசத் தில் பிரதிபை எதைச் செய்கிறதோ அது வெளியிலும் தோற்றமாகத் தோன்றுகிறது. அவ்விதமே உன் குலம், உன் குணம், உன் நடத்தை, உன் உருவமும் கொண்ட இந்த லீலாவென்பவளும் ராஜாவின் இச்சைப்படி அவ்விஷ்டம் பூர்த்தியாகும்படி தோன்றினவள். ராஜ னுடைய மனோ ஆகாசத்தில் நீயும் அவளும் சமமான வர்களே. நீ எவ்வளவு நிஜமோ அவ்வளவு நிஜம் அவ ளும். ஆனால் வாஸ்தவத்தில் இந்த "நீ", இவ்வாகாசம்,

இதோ இருக்கும் "நான்", இந்த புவனம் இந்த பூமி, இவ்வரசன் ஆகிய எல்லாம் "நானே" யாகும். ஆகை யால் மனக் கிளர்ச்சியின்றி சாந்தியுடன் உள்ளபடி ஒருமித்து நிற்பாயாக.

அச்சமயத்தில் ராஜனைத் தேடி வந்த இரண்டா வது லீலாவானவள் சரஸ்வதியைக் கண்டு உடனே வணங்கி அவளை நோக்கி தான் இப்பொழுது நேரில் பார்க்கும் உத்தமியை ஏற்கனவே அடிக்கடி கனவில் பார்த்திருப்பதாகவும், இன்று இக் கனவுகள் பூர்த்தி யாகும்படி தனக்குத் தரிசனம் கொடுத்ததுடன் ஒரு வரமளிக்கவேண்டுமென்றும் வேண்டிக்கொண்டாள். தேவியும் அப்படியே வாக்குக் கொடுக்க, லீலா தான் இந்த உடலுடனே மறு ஜன்மத்தில் தன் பர்த்தாவை மறுபடியும் அடையவேண்டுமென்று கேட்டுக் கொண்டாள். தேவி வாக்களித்தபடி கேட்ட வரனைக் கொடுத்தாள்.

ஸ்தூல தேகத்துடன் பல பிரம்மாண்டங்களில் சஞ்சரிப்பது எவ்விதம்?

உடனே ஞானலீலா தேவியை நோக்கி தனக்கு மாத்திரம் இந்தப் பூத உடல் தடங்கலாக இருப்ப தாகவும் ஆகையால் சூக்ஷ்ம சரீரத்துடன்தான் இதர பிரம்மாண்டங்களைப் பார்க்க முடியுமென்று சொல்லி விட்டு, இப்பொழுது இந்த லீலாவுக்கு இதே தேகத் துடன் பத்மனுகிய விதூரதனை அடைய அநுக்கிரகம் செய்தது எவ்வாறு என்று கேட்டாள். தேவியான வள், எக்காரியத்திலும் தான் செய்வது ஒன்றுமில்லை யென்றும் ஒவ்வொருவரும் தங்கள் இச்சை, நோக்கம், பிரயத்தனம், இவைகளுக்குத் தகுந்தவாறு கிடைக் கும் பலனைத்தான் அநுபவிக்கிறுர்க ளென்றும்

சொன்னாள். தான் சாக்ஷியாய் இருப்பதைத் தவிர, கிரியைகளில் ஈடுபட்டுக்கொண்டு செய்வதொன்று மில்லையென்றும், அவள் கோரியபடி அவளுக்குப் பலன் கிடைத்ததென்றும் சொன்னாள். "உன் மனத்தில் உடல் ஒரு தடங்கலாகத் தோன்றி உன் பர்த்தாவின் ஜீவன் அந்தப்புரத்தை விட்டுப் போகக் கூடாதென்று மாத்திரம் விரும்பினாய். அந்த லீலாவோ இப்பொழுது இருக்கும் உடலுடனே தன் கணவனை மறுபடியும் அடைய வேண்டுமென்று முயற்சி செய்தாள். ஆகையால் அவரவர் இச்சைப்படி அவரவருக்குப் பலன் கிடைத்தது" என்று சொல்லி முடித்தாள்.

**விதூரதனின் முடிவு:** இவர்கள் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கையில் விதூரதன் அரண்மனையை விட்டுப் புறப்பட்டுப் போர்க்களம் சென்று எதிர்த் தலைவனாகிய சிந்துராஜனைத் தேடி, அவனை எதிர்த்து அகோரமாகப் போர் புரியலானான். போர் அதி மும்முறமாக நடந்து வருகையில் விதூரதனுடைய சாமர்த்தியத்தைக் கண்டு லீலாவதி தேவியைப் பார்த்து தன் கணவன் இவ்வளவு சாமர்த்தியமாகச் சண்டை செய்து வருகையில் எவ்வாறு தோல்வி அடைய முடியுமென்றும் கேட்டாள். அதற்குத் தேவி சிந்து ராஜனும் தன்னை வெகு நாளாகப் பூஜித்து வருவதாகவும் ஆனால் அவன் சண்டையில் ஜயத்தைக் குறித்தே தவம் செய்து வந்ததாகவும், விதூரதனோ இவ்வெண்ணத்தை விட்டு முக்தியைக் கோரிவந்த தாலும் சிந்து ராஜனே ஜயமடைவானென்று பதிலுரைத்தாள். இப்படிப் பேசிக்கொண்டே சண்டையைக் கவனித்து வருகையில், போரின் வேகம்

மேலிட்டு, முடிவில் விதூரதனுடைய கை கால்களெல்லாம் துண்டிக்கப்பட்டுத் தன்னுடைய உயிரையும் இழக்கலானுன். இதைக் கவனித்திருந்த இரண்டாவது லீலாவும் அதே சமயத்தில், இனித் தான் உயிர் வாழ்வது வியர்த்தமென்று, தன் உயிரைத் துறந்தாள்.

விதூரதனின் மறுபிறவி: இதன் பிறகு இவர்களின் கதி என்னவென்று அறிய விரும்பிய ஞான லீலா, தேவியைத் தெரிவிக்கும்படி கேட்டுக்கொண்டாள். தேவியானவள், இவ்விருவருடைய ஜீவன்களும் தங்கள் இச்சைப்படி பத்மனுடைய பழைய சாம்ராஜ்யத்தில், பத்மனென்றும் லீலாவென்றும் நாமத்தையுடையவர்களாய் முன்போலவே ஜீவிதம் எடுத்துக் கொள்வார்கள் என்று சொன்னுள். லீலாவினுடைய ஜீவன் உடலை விட்டதும் பல பிரம்மாண்டங்களைக் கடந்து போவதான அநுபவத்தைச் சூக்ஷ்ம ஸ்திதியில் உணர்ந்து மறுபடியும் பூலோகத்தில் ஜனனமாகும். வாஸ்தவத்தில் இருந்த இடத்தைவிட்டு எங்கும் செல்வதில்லை. பல லோகங்கள் இருப்பதான கொள்கைகள் வேரூன்றி யிருந்தபடியால் அந்த அநுபவமெல்லாம் சூக்ஷ்ம ஸ்திதியில் காணப்பட்டுச் சங்கல்பங்கள் நிறைவேறுகின்றன.

ஞான லீலா: லீலாவின் உடல் இங்கேயே இருக்க, எவ்விதம் இந்த உடலுடனே தன் கணவனை அடைவதாகச் சொன்ன வார்த்தை பொருந்தும்?

சரஸ்வதி: அசத்தியமாகிய பூத உடல் சத்தியமாகிய சித்துடன் எப்படிக் கலக்க முடியும்? பூத உடலோ கற்பனையைத் தவிர வேறில்லை. இதை ஆசிரயித்து இருப்பதில்லை சித்தானது. அப்பொழுதுக்கப்பொழுது தன் இஷ்டப்படி ஒரு தேகத்தைத்

தேடிக்கொள்ளுமே தவிர, ஒரே உடலில் ஸ்திரமாகச் சம்பந்தப்பட்டுக் கொள்வதில்லை. ஆகையால் லீலாவுக்கு இதே உடல் இருப்பதான உணர்ச்சிதான் இருக்குமே ஒழிய, இந்த உடலே அங்கே செல்வது முடியாது. அவர்கள் இருவர் மனத்திலும் பூர்வ ஞாபகம் உதித்து, பழைய உடல்களையே அடைந்ததான எண்ணம் ஸ்திரமாயிருக்கும். அதாவது இவர்கள் சித்தில் உதித்த எண்ணங்கள் இப்பொழுது பலன் ரூபமாக வெளிப்படையாக அநுபவத்திற்கு வரும்.

ஜன்மாக்களின் பிரவிருத்தி

ஆகவே இவர்களின் வரலாற்றைக் கவனிப்போமாகில், விதூரதன் பத்மனுடைய மனத்தில் தோன்றிய தோற்றம். பத்மன் பிராமணனாகிய வசிஷ்டன் மனத்தில் உதித்தவன். இந்தத் தோற்றம் ஒவ்வொன்றும் விஸ்தாரமடைந்து, அந்த அந்தப் பிரதேசத்தில் மனைவி, மக்கள், சுற்றத்தார், இனக் கூட்டம், தேசம் எல்லாம் கூடி ஒரு பிரபஞ்சமாகப் பெருகி வந்தது. இவ்விதம் ஒரு பிரபஞ்சத்திற்குள் இன்னொரு பிரபஞ்சம். இப்படி எவ்வளவோ லக்ஷக்கணக்கானவைகள் உண்டாகின்றன. பிறகு அழிகின்றன. ஒன்றுக்கொன்று சம்பந்தமே கிடையாது, ஏனெனில் ஒன்றால் மற்றொன்று பாதிக்கப்படுவதில்லை. எல்லாம் தோற்றங்கள், சத்தியமில்லை. ஆகவே லீலாவானவள் முக்தியை நாடுவதை விட்டு, கேவலம் தேகத்திலேயே ஆசை வைத்ததால் பத்மனுடைய மனோராஜ்யத்திற்குச் சென்றாள்.

ஞான லீலா: பாவம் - அபாவம், உண்டு - இல்லை என்ற உணர்ச்சிகள் எவ்விதம் ஏற்பட்டன; உஷ்ணம்

சீதளம், ஆகாயம், ஜலம், பூமி என்பவைகளும் அவைகளின் தன்மைகளும் ஏற்பட்ட விதம் என்ன? மரணம்—ஜனனம் இவைகளின் காரணம் யாது?

### உணர்ச்சிகள் தோற்றமே

சரஸ்வதி: மகாப் பிரளயமென்ற ஸ்திதியாக இருக்கும்பொழுது, பிரபஞ்சமென்பது வெளிப்படையாகத் தோன்றாமல் கேவல அறிவு சொரூபமாக அதாவது சூக்ஷ்மமாக அறிவில் அடங்கி இருக்கிறது. அவ்வறிவானது "நான்" என்ற உணர்ச்சியை உணருங்கால் அறியும் தன்மை, உணர்ச்சி, திருச்யம் அல்லது நோக்கம் என்ற பல பெயரையுடைய வெளி ஸ்பந்தம் ஏற்படுகிறது. இது ஒரு தடவை ஏற்பட்ட மாத்திரம், அதே வெளி ஸ்பந்தம் அல்லது இயக்கம் அதே மாதிரி திரும்பித் திரும்பி உண்டாகின்றது. இதனால் நாளடைவில் "நான்" என்ற மித்யா பாவம் ஸ்திரப்பட்டு சூக்ஷ்ம கதியிலிருந்து ஸ்தூல கதிக்கு இறங்குகிறது. இவ்விதம் உண்டானதே இந்தப் பிரம்மாண்டம்; உண்டு - இல்லை என்பவைகளும். ஆகையால், இந்த வெளிநோக்கம் என்றது கற்பனையால் ஏற்பட்டதே.

பிறகு ஆகாயம், ஜலம், பிருத்வி முதலிய பஞ்ச பூதங்களும் அவைகளின் தன்மைகளும், ஸ்பந்த சக்தியை இயற்கையாகக் கொண்ட சித் அல்லது கேவல அறிவின் கற்பனைகளே. ஒவ்வொரு பூத ஜாதியையும் அவ்வவ்விதம், ஆதியில் உணர்ந்தபடியால் அதே உணர்ச்சிகள் இதுவரையில் தொடர்ந்துவருகின்றன. இவைகளே நியதி என்றும் கூறப்படுவன. முதலில் சுயநிலை இருக்கும்பொழுது

எதையும் எவ்விதமாகிலும் உணரும் ஸ்திதியிலிருக்கிறது. ஆனல் ஒருதரம் ஒருவிதமாக உணர்ந்த பிறகு அதே உணர்ச்சிதான் எப்பொழுதும் தொடரும். இதுவே நியதி என்று சொல்லப்படுவது. இவ்விதந்தான் நெருப்பில் சூடு என்ற தன்மையும், பனியில் குளிர்ச்சியும் முதலில் உணரப்பட்டு அவைகளை நாம் நியதியில் ஏற்பட்டவைகளாகச் சொல்லிவருகிறோம். இப்பொழுது இவ்வுணர்ச்சிகளை மாருக உணர நம்மால் இயலாது.

இருப்பதும் இல்லாததும் கூட இவ்விதம் சித்தில் (அறிவில்) தோன்றிய தோற்றங்கள்தான். இந்த ஜீவன் என்று சொல்லப்படுவதற்கு ஸ்தூல சம்பந்தமும் நோக்கமும் அதிகரித்ததாலும், தன்னுடைய சுய நிலையை மறந்த காரணத்தாலும், இந்திரியங்களுக்குப் புலன்படுபவைகளை இருப்பதாகவும், புலன்படாதவைகளை இல்லாததாகவும் கருதி வியவகரித்து வருகிறது.

அடுத்த கேள்வியாகிய மரணம் என்பது ஒரு மூர்ச்சையைத் தவிர வேறில்லை. மரணத்தால் ஜீவனுக்கு ஒரு முடிவு ஏற்படுவதில்லை. ஆதியில் இந்த ஜீவன் சிருஷ்டி என்னும் இயக்கத்தில் கட்டுப்பட்டுக்கொண்ட மாத்திரமே தன்னுடைய காலத்தையும் நிர்ணயித்துக்கொள்ளுகிறது. இதுதான் ஜீவனுடைய ஆயுள்காலம். இந்தக் காலம் முடிவுபெறும் வரையில் தன்னை விஸ்தரித்துக்கொண்டும், ஓயாமல் பல ஜன்மங்களை எடுத்தும், அழிந்தும், கடைசியில் பூர்வ ஸ்திதியை அடைகின்றது. ஒரு நீண்ட கொடியானது பல கணுக்களால் பலப்படுவது போலவும், ஜீவ ஜந்துக்களுக்கு நித்திரைக்குப் பிறகு புதிய வலிமை ஏற்படுவது போலவும், மரணமும் அதேமாதிரி ஜீவனுக்கு

அடுத்த ஜன்மத்தின் அனுபவங்களுக்குப் புதிய வலி மையைக் கொடுத்துத் தயார் செய்கிறது. ஆகவே நித்திரைக்குப் பிறகு மறுதினம் ஏற்படுவது போல மரணத்திற்குப் பிறகு மறு ஜன்மம் ஜீவனுக்கு ஏற்பட்டே திரவேண்டும்.

ஜீவனின் ஆயுள்காலம் கால - தேசக் கிரியைகளைத் தழுவியது

மனிதர்களின் ஆயுள்காலம் ஒவ்வொரு யுகத்தின் போக்குப்படி, அதாவது கால, காரிய, கர்ம வித்யாசங் களை அனுசரித்து, நிர்மாணிக்கப் படுகிறது. இந்தக் கிரமத்தை அனுசரித்து கலியுகத்தில் நூறு வருஷமும், துவாபர யுகத்தில் இருநூறும், திரேதா யுகத்தில் முன்னூறும், கிருத யுகத்தில் நானூறுமாக ஏற்பட் டுள்ளது. இந்த ஆயுள் காலங்கள் கிரமமாகவும், சாஸ் திர ரீதியாகவும் வாழ்க்கையை நடத்துகிறவர் களுக்கே ஏற்றன. சாஸ்திர விரோதமான நடத் தையையுடையவர்களுக்கு அக்கர்மங்களுக் கேற்றபடி ஆயுள்காலம் குறைவுபடும். அகால மரணம் ஏற்படு வது பூர்வ வாசனையின் காரணத்தாலே தவிர வேறு காரணத்தால் அல்ல.

மரணம் என்ற ஸ்திதியில் ஏற்படும் அனுபவங் கள் மனிதர்களின் நடத்தை, பழக்க வழக்கங்கள், கர்மங்கள் இவைகளைத் தழுவியே சம்பவிக்கின்றன. பொதுவாக மானிட வர்க்கம் ஆறு பாகங்களாகப் பிரிக்கப்படலாம்; அதாவது அதமம், மத்திமம், சொல் பம் என்று மூன்றுவிதப் பாப கர்மங்களைச் செய்கிற வர்களும், அதேமாதிரி மூன்றுவித புண்யகர்மங்களைச் செய்கிறவர்களுமாக, ஒவ்வொரு வகுப்பைச் சேர்ந்த வர்களின் அனுபவங்களும் வேறு விதமாகும்.

மரணமென்ற மோகம் ஜீவனுடைய பூர்வ கர்மங்களைத் தழுவியும் தற்காலத்திய கர்மங்களைத் தழுவியும் ஏற்படும். மரணத்திற்கு முன் ஜீவ நாடிகளின் ஸ்பந்தம் (Vibration) குறைந்து, அதனால் இந்திரியங்களின் சக்தியும் குறைந்து, இதைத் தொடர்ந்து தேகத்திற்குண்டான கிரியைகள் விபரீதமாக நடைபெற்றும், சுவாசம் மெலிந்தும், கடைசியாக உள்ளுக்கும் வெளிக்குமுள்ள சம்பந்தம் நின்றுவிடுகிறது. அப்பொழுது உடலானது மரணத்தை அடைந்ததாக பாவிக்கப்படுகிறது. அப்பொழுது இந்த ஜீவன் வாசனைகளைத் திரட்டிக்கொண்டு உடலைவிட்டு நீங்கி, பிரபஞ்சத்தின் பூத சம்பந்தமின்றி சூக்ஷ்ம ஸ்திதியில் இருக்கின்றது. இந்நிலையில்தான் நரக சொர்க்க போகங்களை யெல்லாம் அனுபவிக்கின்றது. இந்த ஸ்திதியில் விருக்ஷம், மிருகம் இன்னும் இதரப் பிராணிகளாகிய ஜன்மங்களை அனுபவிக்கலாம். எல்லாம் கனவில் காணும் காட்சிபோல் நடைபெறும். எவ்வளவு காலம் இந்த ஜீவன் சூக்ஷ்ம ஸ்திதியிலிருக்குமென்று சொல்லமுடியாது. ஆனால் இந்த ஸ்திதி காலதேசக் கட்டுப்பாடுகளுக்கு அடங்காமலிருப்பதாலும், இந்திரியங்களுக்கு நியதியாலுண்டான கட்டுப்பாடுகளையும் விட்டிருப்பதால், வெகு காலத்திய அனுபவங்களை—அதாவது ஜாகிரத்—அவஸ்தையைத் தழுவிய காலப் பிரமாணத்தை ஒத்து—சொற்ப நேரத்தில் அனுபவிக்கலாகும். இந்த ஸ்திதியின் காலப் பிரமாணம் கனவுக்கு உண்டான காலப் பிரமாணமே தான். இந்த அனுபவங்கள் தீர்ந்தவுடன் ஜீவன் பழைய வாசனைகளின் காரணமாக, புதிய உடலைக் காண விரும்பி, இது அகப்பட்டவுடன் அதை அடை-

கிறது. சூக்ஷ்ம ஸ்திதியில் ஜீவனுக்கு இருப்பிடம் எங்கேயென்று கேட்கலாம். அது எவ்விடத்திலும் தோன்றும் நிலையிலிருக்கிறது. ஆகையால் எங்கே தக்க உடலை உணருகிறதோ அவ்விடம் ஜனனத்தை எடுத்துக்கொள்ளுகிறது. ஆகவே மரணம் என்ற கதி உடலுக்குத்தான் ஏற்படுகிறதே தவிர ஜீவனுக்கல்ல. ஜீவன் சித்தின் சொரூபமாகையால், சித் ஒன்றாகை யால், ஒரு ஜீவன் அழிவதென்றால் எல்லா ஜீவன்களும் அழியவேண்டும். ஆகையால் அழிவு ஜீவனுக்கு அல்ல.

லீலா: பிறகு மனிதர்களுக்கு இந்த மோகம் ஏற்பட்டது எவ்விதம்?

சர: சம்வித்தில் சேதனம் அல்லது ஸ்பந்தம் என்று சொல்லப்படும் இயக்கம் தோன்றியதும் இதுவே சித்தென்று ஒரு தனித் தோற்றமாக சம்வித் தில் தோன்றுகிறது. சித்தானது எவ்விதமெல்லாம் இயங்குகிறதோ அந்த இயக்கமெல்லாம் சம்வித்தில் பிரதிபலிக்கும் பிம்பமாகிறது. சித்தானது தன்னை எவ்விதம் வேண்டுமானாலும் உணர்ந்துகொள்ளும் சக்தியை யுடையது. தன்னை நிஸ்பந்தமாகவோ அல்லது ஸ்பந்தமாகவோ இயக்கிக் கொள்ளலாம். நிஸ் பந்தமாக உணர்ந்த மாத்திரம் பஞ்ச பூதங்களுக்குக் காரணமாய் நின்று ஜடப்பொருளாக பிரவிர்த்தியா யிற்று. ஸ்பந்தமாக பாவனை செய்த மாத்திரம் ஜீவ ராசிகளுக்குக் காரணமாய் நின்று இவைகள் பிரவிர்த் திக்கலாயின. ஆகவே இரண்டு இனங்களும் சித்தின் விலாசமே. ஆனால் ஸ்பந்தமான பாவனையில் உணர்ச்சி யென்னும் தன்மை கூடவே இருக்கின்றது; நிஸ்பந்த பாவனையில் இது கிடையாது. இவ்விரண்டிற்கும் உள்ள வித்யாசம் இதுவே. ஆதியில் இவ்விதம்

இயங்க, அதுவே ஸ்திரமாய் நின்று நியதியாக ஏற்பட்டு விட்டது. இப்பொழுது ஒன்று மற்றொன்றாக மாறுவது இயலாது.

மேலும் சித்தானது புத்தியென்ற கதியை அடைந்ததும், சித்தினுடைய இதர பாவனைகளை வேறாகவே மதித்து அந்த வேற்றுமையே இதுவரையிலும் தொடர்ந்துவந்தது. ஜீவராசிகளுக்கும் ஜடப்பொருள்களுக்கும் உள்ள வித்தியாசம் புத்தியின் உணர்ச்சியிலே தவிர சித்தென்னும் ஸ்திதியில் இவ்வித்யாசம் புலப்படாது. ஏனெனில் எல்லாம் சித்தால் வியாபிக்கப்பட்டிருப்பதால். ஆகவே இப்பொழுது நிலைத்து நிற்கும் மோகம் ஆதியில் தோன்றியதே.

இச்சித்தானது ஸ்பந்த சக்தியைக் கூடி பிரவிர்த்திக்கையில், உணர்ச்சி என்பது கூடவே இருப்பதால், தன்னைத்தான் பிரவிர்த்தியில் அறியும்பொருட்டு பல இந்திரியங்களாகிய கண் காது என்பவைகளை யெல்லாம் சிருஷ்டித்துக்கொள்ளுகிறது. இந்தக் கருவிகளாலேதான் தன்னைத் தான் உணர முடியுமாகையால் பல ஜந்துக்கள் உண்டாவதற்குக் காரணமாயிற்று. இவைகளுக்குள் உள்ள வித்தியாசம் நிலத் தவளைக்கும் கல்லினுள் உள்ள தவளைக்குமுள்ள வித்தியாசம்போல் தான். ஒவ்வொரு ஜந்துவும் அதன் இனத்திலேயே சம்சரித்துவருவதால் மற்ற இனங்களின் அறிவில்லாமல் விருத்தி ஆகிக்கொண்டே இருக்கின்றது.

ஆகவே இவைகள் அனைத்தும் கற்பனையால் உண்டானவைகள். மேற்சொன்னவைகளைச் சுருக்கிச் சொல்வோமாகில், சத்யமென்பது ஒன்றே. அதாவது சம்வித். அதின்றி வேறல்லாததும், ஆனால் இயங்கும் பொழுது வேறாகக் கருதப்படுவதுமான சித்தானது,

ஸ்பந்தசக்தியின் காரணத்தால், சூக்ஷ்ம ஸ்திதியிலிருந்து ஸ்தூல ஸ்திதியை அடைகின்றது. ஆகவே சித்தும் அதன் வேறுபாடாகிய இயக்கங்களும் அறிவில் தோன்றிய தோற்றங்களே. ஆனால் சத்யத்திலிருந்து பிரவிர்த்தியானபடியால் இத்தோற்றங்களும் சத்திய மான பாவனைகளையே அளிக்கின்றன. ஆகவேதான் சித்தின் வேறுபாடாகிய புத்தி புலப்படுபவைகளைச் சத்தியமாகவே உணருகின்றது. புத்தியென்னும் ஸ்திதியிலிருக்கும் வரையில் இவ்விதந்தான் உணரும். இதுவே நியதி. புத்தியின் எல்லையைத் தாண்டி சித்தின் சொரூபத்தை அடைந்தால் இப்பிரபஞ்சம் பொய்யென்று தோன்றும்.

விதூரதனுடைய உடலை நோக்கியவண்ணம் லீலா கேட்கிறாள்.

லீலா: இந்த ஜீவன் எந்த மார்க்கமாக பத்மபுரத்திற்குச் செல்லும்?

மரணத்திற்குப் பிறகு ஜீவனின் ஸ்திதி

சர: அவனுடைய வாசனைகளைத் தழுவியும், அவன் எவ்விதக் கொள்கைகளை பாவித்து வந்தானோ அம்மார்க்கமாகவும் செல்லும்.

வசி: இவர்கள் சம்பாஷணை முடிந்ததும் அவ்விடத்தைவிட்டு விதூரதனுடைய ஜீவனைப் பின் தொடர்ந்தார்கள். விதூரதனுடைய ஜீவனோ உடலை விட்டுக் கொஞ்சநேரத்திற்கெல்லாம், மரண மூர்ச்சையிலிருந்து தெளிவுபட்டு பிறகு தன் வாசனையின் வேகத்தால் பிரபஞ்சத்தின் எல்லையைவிட்டு வெகு தூரம் சென்று பல பிரம்மாண்டங்களைக் கடந்து யமபுரம் அடைந்து, யமபுரவாசிகளால் பிடிக்கப்பட்டு அந்த

நகரத்திற்குப் பாத்திரமல்லவென்று அங்கிருந்து தள்ளப்பட்டது. அவ்விடமிருந்து நேராக பத்மபுரம் நோக்கிச் சென்று அரண்மனையின் அந்தப்புரம் அடைந்தது.

ராமன்: இந்த ஜீவனுக்குப் பத்மபுரியிலிருக்கும் சவத்தின் இருப்பிடம் எப்படித் தெரியும்?

வசி: தூர தேசத்தில் பணத்தைப் புதைத்து வைத்தவன் மனதில் அப்பணம் சதா எப்படிக் குடிகொண்டிருக்கிறதோ, அல்லது மரம் எப்படி சூக்ஷ்மமாக விதையிலிருக்கிறதோ அதே மாதிரி பின்னால் ஏற்படுவது இவனிடத்தில் முன்னாலேயே சூக்ஷ்மமாக இருக்கும். அதனால் தக்க காலத்தில் இவன் தானாகவே வேண்டியதை உணருகிறது.

மரணமடைந்தவர்களும் பிண்ட தானதிகளும்

ராமன்: மரணமடைந்தவனுக்குப் பந்துக்களால் பிண்ட தானம் அளிக்கப்படாமலிருந்தால் அது ஜீவனை எப்படி பாதிக்கும்?

வசி: பிண்டம் அளிக்கப்பட்டாலும் இல்லாவிட்டாலும் ஜீவனுக்கு இந்த வாசனை இருந்தே வந்ததால், அது அளிக்கப்பட்டதாகவே உணரும். சித்தில் சங்கல்பமாக பாவனை செய்யப்பட்டவைகளே தான் சூக்ஷ்ம ஸ்திதியிலும் ஸ்தூல ஸ்திதியிலும் சம்பவிக்கும். சங்கல்பம் செய்யப்படாதவைகள் அனுபவத்திற்கு வராது. ஆகையால்தான் பிண்டம் கொடுத்த ஸ்மரணை கூடியே இருக்கும். இதனால் தனக்கும் பிண்டம் அளிக்கப்பட்டதாகவே சூக்ஷ்ம ஸ்திதியில் உணரும்.

ராமன்: ஒருவன் தனக்கு தர்ம மென்பதே கிடையாதென்ற எண்ணத்துடன் இறப்பானாகில்

அவன்பொருட்டு அவன் பந்துக்களால் செய்யப்படும் தர்மங்களின் பலன் இவனுக்குச் சேருமா சேராதா?

வசி: தர்மங்களைச் செய்கிறவனுடைய சக்தியைப் பொருத்தது.

குறிப்பு

[சூக்ஷ்ம தேகத்திலிருப்பவனுடைய சக்தியைவிட ஸ்தூல தேகத்திலிருப்பவனுடையது குறைந்ததாகவே எண்ணவேண்டும்.]

ராமன்: பூர்வ லீலாவின் தேகம் என்ன கதி அடைந்தது?

வசி: அந்த தேகம் ஏது? அது எங்கிருந்தது? ஆகையால் அது எப்படிப்போகும்? ஒரு பிராந்திதானே இருந்தது. கனவில் கண்டதை எங்கேயென்று கேட்பது போலிருக்கிறது. வாஸ்தவமாக இருந்தால் தானே அதின் இருப்பிடத்தை அறியலாம். லீலாவுக்கு ஞானம் உதித்து சூக்ஷ்ம ஸ்திதியை அடைந்ததும் மனோ மயக்கம் நீங்கியது. மேலும் பிரபஞ்சமெல்லாம் ஆத்ம மயமாக இருக்கையில் தேகமென்ற கற்பனைக்கு இடமேது? ஞானம் உதித்த க்ஷணம் தேகமென்ற கற்பனை வெயிலைக்கண்ட பனிபோல் மறைந்து விடுகிறது. ஒரு ராட்டினத்தில் உட்கார்ந்தவனுக்கு பூமியானது சுழலுவதுபோல்தான் தோன்றும். அதே மாதிரி அக்ஞானம் இருக்கும்வரையில் தேகம், பிரபஞ்சம் எல்லாம் மெய்யென்றும், சித் அல்லது அறிவு பொய்யென்றும் புலப்படுகிறது. அக்ஞானம் நீங்கியதும் பொய்த் தோற்றமெல்லாம் மறைந்துவிடுகிறது. உலக வழக்கில் பேசும்பொழுது லீலாவுக்கு பரிபூர்ண ஞானம் உதித்ததும் தேகத்தின்மேலுள்ள இச்சை முற்றிலும் விட்டு அதிலிருந்து விடுபட்டாள்.

ராமன்: ஒரு ஞானி, உடலைவிட்டு அந்தர்தியான மானால் அவ்வுடலை சாமான்ய ஜனங்கள் எப்படி உணருவார்கள்?

வசி: ஞானியின் உடல் காணப்படுவதே இல்லை; ஏனெனில் அவர் சிந்தையில் தேகமென்ற வஸ்து இல்லாமல் இருக்க, பிறரால் அது எப்படி காணப்படும்? ஆனால் ஞானமடையும் முன் மற்ற ஜனங்கள் இதர பொருள்களை உணருவதுபோல்தான் இந்த தேகத்தையும் உணருவார்கள்.

ராமன்: ஸ்தூல சரீரமே சூக்ஷ்ம சரீரமாக மாறுகிறதா அல்லது இது வேறு காரணத்தால் ஞானிக்கு உண்டாகிறதா?

வசி: ஸ்தூல சரீரமென்பது ஞானியின் நோக்கத்தில் ஒரு தோற்றம். வெகுகாலத்து அக்ஞானத்தால் உருவமும் கனமுமடைந்து, அந்த அக்ஞானம் நீங்கியதும் இந்தத் தோற்றம் சொப்பனம்போல் மறைந்து விடுகிறது. சொப்பனத்தில் கண்ட பர்வதம் விழித்தவுடன் கற்பனையென்று விளங்குவதுபோல் இந்த தேகமும் ஒரு சங்கல்ப ரூபமென்று விளங்குகிறது.

### சொப்பனமும் ஜாக்ரத அனுபவங்களைக் கொண்டதே

ராமன்: சொப்பனத்தில் காண்பது எங்கே மறைந்துவிடுகிறது?

வசி: சொப்பனத்தில் காண்பதும் சித்தின் விகல்பமே. இது இந்திரிய சம்பந்தமில்லாமல் விழிப்பில் அறியப்பட்ட விஷயங்களையே ஆதாரமாகக் கொண்டு, தான் அழுக்கால் மறைந்ததுபோல், பலவிதத் தோற்றங்களைக் காண்கிறது. இத் தோற்றங்கள் மறைந்ததும் நித்திரை ஏற்பட்டு ஒன்றிலும் ஒட்டா

மலும் ஒருவித பாவனையும் இல்லாமலும் சித்தானது தனிப்படையாய் நிற்கிறது. விழித்ததும் இதே சித் பிரபஞ்சத்தில் ஊடுருவிநின்று இவைகளைத் தோற்ற மாகக் காண்கிறது. ஆகையால் சொப்பனத்திலும் விழிப்பிலும் அதே சித்தானது தன்னைச் சங்கல்ப பதார்த்தங்களாகவும் கன பதார்த்தங்களாகவும் தோற்றுவிக்கின்றது. ஆகையால் இவ்விரு உணர்ச்சி களும் காட்சிகளே தவிர சத்யமல்ல. இதை அனுபவ மாக அறிந்தால் அக்ஞானம் நீங்கி சித் சித்தாகவே உணரப்படும்.

நம் கதையைத் தொடர : விதூரதனுடைய ஜீவன் பத்மனுடைய தேகத்தினுள் மூக்குத் துவாரங்களால் உட்சென்றது. அப்பொழுது இந்த ஜீவனைப் பின் பற்றி வந்த சரஸ்வதியும் லீலாவும் இதைக் கண்டார் கள். லீலாவானவள் தேவியை நோக்கி பத்மன் இறந் தும் தான் சமாதியடைந்தும் எவ்வளவு காலமாயிற் றென்று கேட்டாள். ஒரு மாத காலமானதாக தேவி பதிலளித்தாள். "இப்பொழுதும் உன் சகிகளெல்லாம் தூங்கிக்கொண்டிருக்கிறார்கள். உலக வழக்கில் பேசுங் கால் உன் ஜீவன் ஒரு பக்ஷ காலத்தில் ஆவியாக மறைந்தது. நீ மரணமடைந்ததாக உன் பரிவாரங்கள் நிச்சயித்து, தேகத்தைப் பொசுக்கி வேண்டிய கர்மங் களையும் செய்து முடித்தார்கள். நீ என்னை சூக்ஷ்ம ஸ்திதியில் கண்டு என் அனுக்கிரகத்தால் ஞான மடைந்து அதில் ஸ்திரமாய் நிற்கிறாய். ஆனால் பூர்வ வாசனைகளெல்லாம் இன்னும் சாந்தியடையவில்லை. ஆகையால் நீ மறுபடியும் தேகத்தை எடுத்துக் கொண்டு கொஞ்சகாலம் ஜீவிதம் செய்யவேண்டும் : ஆனால் ஞானம் ஏற்பட்ட காரணத்தால் உன்னுடைய

உடல்மேல் ஒருவித பற்றுதலுமில்லாமல் காலத்தைக் கழிப்பாய். இப்பொழுது நாம் இருவரும் ஸ்தூல சரீரத்தை எடுத்துக்கொண்டு விதூரதன் லீலா இவர்களின் அனுபவத்தை விசாரிக்கலாம்.''

இப்படிச் சொல்லிவிட்டு இருவருமாக தங்கள் இச்சைப்படி தேகத்தை எடுத்துக்கொண்டு லீலாவின் முன் நின்றூர்கள். அவள் சொப்பனத்திலிருந்து விழித்தவள்போல் கண்ணைத் திறந்து இவ்விரண்டு தேவதைகளைக் கண்டு எழுந்து நமஸ்கரித்தாள். தேவி அவளை அனுக்கிரகித்து அவளுடைய வரலாற்றை விசாரித்தாள். அவள் தான் வேறு பிரதேசத்தில் இருந்ததாகவும் அங்கே மரணம் அடைந்து கொஞ்சம் நாழிகை ஒன்றும் அறியாமல் பிறகு ஆகாய மார்க்கம் சஞ்சரித்து கடைசியாக இவ்விடம் வந்து சேர்ந்ததாகவும் இங்கே தன்னுடைய பர்த்தா சண்டை செய்த சிரமத்தால் நித்திரை செய்வதாகவும் சொன்ஞள். அச்சமயம் பத்மராஜனும் நித்திரையில் எழுந்தவன்போல் கண்ணை விழித்து, எதிரிலிருப்பவர்களைக் கண்டு, பிரமித்து, பூர்வ லீலாவை நோக்கி நீங்களிருவர் இருப்பதெவ்விதம் என்று எப்பொழுதும் போல் சகஜமாய்ப் படுத்தவண்ணமே கேட்டான். லீலாவானவள் விருத்தாந்தமெல்லாம் பூர்ணமாகச் சொல்லி, இருவர் இருப்பதின் தாத்பர்யத்தையும் விளக்கி கடைசியாக அவன் தலைப்புறம் இருப்பது சரஸ்வதி தேவியென்றும் சுருக்கிச் சொன்ஞள். பத்மன் மிக வியப்புடன் எழுந்து தேவியை நமஸ்கரித்து தனக்கு அனுக்கிரகம் செய்யும்படி வேண்டிக் கொண்டான். தேவியும் அவ்வாறே செய்து அப்படியே மறைந்தாள்.

பத்மராஜன் இவ்விரு மனைவிகளுடன் கூடி வெகு காலம் மிக மேன்மையாக ராஜ பரிபாலனம் செய்து, கடைசியில் மூவருமாக ஜீவன்முக்த ஸ்திதியை அடைந்து, அதன் பிறகு விதேகமுக்தியையும் அடைந்தார்கள்.

இக்கதையின் தாத்பரியத்தை யார் மனத்தில் வாங்கிக்கொண்டு அவைகளை அனுசரித்து வாழ்வை விடாமுயற்சியுடன் சீர்திருத்தி வருகிறுரோ அவன் முக்தியை சீக்கிரமாக அடைவதில் சந்தேகமில்லை. நோக்கம் அல்லது அறியும் தன்மை பரமார்த்தத்தி லிருந்து பிரவிருத்தியானதே. ஆயினும் அது வெறும் தோற்றம் என்பதை அறிந்து ஜனங்கள் தங்கள் நடத் தையை சீர்திருத்திக்கொண்டால் சம்சார வலையில் சிக்கிக்கொள்ளாமல் ஆயுளை சந்தோஷமாக நடத்தி வரலாம். இதுவே இக்கதையின் முக்கிய சாரம். மனதின் வேகத்தால்தான் சம்சாரம் எல்லை இல்லாமல் விஸ்தரிக்கிறது; ஆகையால் இதை அடக்கினுல் சம்சாரம் வேரோடு அழியும், ஞானமும் சித்திக்கும்.

ராமன்: இந்த உபதேசங்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டவனுனேன். என் மனம் இப்பொழுது வெகு சாந்தியை அடைந்தது. ஆனுல் ஒரு சந்தேகம், அதை நிவர்த்தி செய்யும்படி கேட்டுக்கொள்ளுகி றேன். விதூரத – பத்மனுக்கு சம்பவித்தவைகளெல் லாம் காலப் பிரமாணத்தில் ஒன்றும் சரியாக இல்லை. இவைகள் ஒரு ராத்திரியில் சம்பவித்தவைகளா அல்லது அநேக வருஷங்களிலா?

வசி: யாரார் எதை எவ்விதம் பாவனை செய்து வருகிறுர்களோ அவரவர் அதை அவ்விதமே

அனுபவிக்கிறார்கள். விஷத்தை அமிருதமாகவே பாவனை செய்துவந்தால் அது அவ்விதமே யாகும். ஒருவன் தன் சத்துருவிடம் சிநேக பாவனையையே செய்து வந்தால் அச்சத்ரு மித்திரனாவதில் சந்தேகமில்லை. ஆகையால் பதார்த்தங்களின் தன்மைகள் நம் எண்ணத்திலும் பாவனையிலும் இருக்கிறதே தவிர உண்மையில் அப்பதார்த்தங்களில் இல்லை. இதே மாதிரிதான் கால அனுபவமும். கால வித்தியாசங்களெல்லாம் நம் மனோ நிலையைத் தழுவி இருக்கின்றன. புராணத்தில் கூறப்பட்ட அரிச்சந்திரனுக்கு ஒரு ராத்திரியின் அநுபவங்கள் பன்னிரண்டு வருஷமாகத் தோன்றின. லவணனுக்கு ஒரு ராத்திரியின் அனுபவம் ஒரு ஆயுள் காலமாக தோன்றிற்று. ஒரு மனுவின் ஆயுள்காலம் பிரம்மாவுக்கு ஒரு நாளாகும். இவ்விதமே விஷ்ணு, சிவன் இவர்களுடைய ஆயுள் காலங்களும். ஆகையால் எல்லோருக்கும் எல்லாக் காலத்திலும் ஒரே காலப் பிரமாணமென்பது கிடையாது. பத்மன், விதூரதன், ஞானலீலா, லீலா, நீ, நான் ஒவ்வொருவரும் ஒரே காலத்தை வெவ்வேறு அளவாக உணருகிறோம். ஆகையால் இந்தக் கால வித்தியாசங்களைப்பற்றி கவனிப்பதில் ஒரு பிரயோஜனமுமில்லை. முக்கியமாக அறிய வேண்டியது பத்மன், விதூரதன் அவர்களுடைய அனுபவங்களையும் அவைகளின் காரணங்களையும், மேலும் இக் கதையில் எடுத்துரைக்கப்பட்ட தத்துவங்களையுமே யாகும்.

ராமன்: மேற் சொல்லிய அனுபவங்கள் அரசனுக்கு மாத்திரமில்லாமல், கூடவே மந்திரி இதர பரிவாரங்கள் எல்லோருக்குமே ஏற்பட்ட கிரமம் என்ன ?

பல ஜனங்களுக்கு ஒரே மோகம் எப்படி ஏற்படுகிறது?

வசி: ஒரு பெரிய பிரவாகமானது பக்கத்திலிருக்கும் சிறிய பிரவாகங்களையெல்லாம் சேர்த்துக் கொண்டு சமுத்திரத்தில் சேருகிறது. சிறிய பதார்த்தங்களுக்குச் சுவதந்திர நிலைமை கிடையாது. அவ்வினத்தின் முக்ய வஸ்துவைத் தழுவியே நிலைக்கின்றன. அதுபோலவே ராஜனை அண்டிப் பிழைத்த பிரஜைகளுக்கெல்லாம் ராஜனுடைய உணர்ச்சிகளே முக்யமாக ஏற்பட்டு அவ்வித அனுபவங்களும் சம்பவித்தன. சம்வித்தில் இதே மாதிரி ஒரு முக்யமான அசைவு அல்லது ஜீவத்தோற்றம் உண்டானால் அதை நாடியே பல சிறிய அசைவுகளும் ஏற்பட்டு பிரதான ஜீவனுடைய பரிவாரங்களாக அதன் அனுபவங்களையே பெரும்பாலும் அனுபவித்து வருகின்றன.

ராமன்: "நான்", "ஜகத்" இவ்விரண்டும் சம்வித்திலிருந்து தோன்றியும் இவற்றுள் பேதம் எவ்வாறு உண்டாயிற்று?

வசி: உணருகிறவன் உணரப்படும் வஸ்துக்களை சம்வித் அல்லது அறிவென்னும் கண்ணாடியில்தான் பார்க்கிறான். இவ்விரண்டு ஜாதியுமே சம்வித்தைத் தவிர வேறில்லை. சப்தம், அர்த்தம் இவைகளும் இந்த தத்துவத்தையே சுட்டிக் காட்டுகின்றன. இவைகளுக்குத் தனிச் சொரூபம் கிடையாது. பிரம்மந்தான் ஜகத் என்னும் ரூபத்தைக் கொடுக்கின்றது. ஆனால் ஜகத் பிரம்மமல்ல. ஏனெனில் ஒரு மூலப்பொருளுக்கு பல அவயவங்களுண்டு. ஆனால் இவ்வவயவங்கள் மூலப் பொருளாகமாட்டா. இந்த ஜகத் காட்சியின் மூலப் பொருள்களாகிய ஆகாயம், அப்பு, தேஜஸ் இவைகளெல்லாம் ஸ்மரணையில் ஒன்றன்பின் ஒன்றாகக்

கற்பிக்கப்பட்டும் வெளிப்படையாக ஏககாலத்தில்தான் தோன்றின. உள்ளே அடங்கியில்லாமல் வெளியே தோன்றுவதற்குக் காரணமில்லை. இப்படி வெளித் தோற்றம் ஏற்பட்ட மாத்திரமே பேதம் என்பதும் கூடவே கிளம்பியது.

ஆகையால் சிருஷ்டியானது சம்வித்தில் ஏற்பட்டும், சம்வித் சிருஷ்டிக்கு ஒரு காரணமாகாது. சிருஷ்டியானது சம்வித்தின் அவயவமுமல்ல. ஆனால் நமக்குத் தோன்றுவது அம்மாதிரிதான். இதே மாதிரி லயத்திலும் அது ஒட்டுவதில்லை. அது சாக்ஷியாக இருப்பதுதான் சத்யம்.

இந்தப் பிரபஞ்சமெல்லாம் ஆதியிலிருந்து அந்தம் வரையில் பரமாணுவிலுள்ள சத்தில் தோன்றுகிறது. இப்படித் தோன்றுகிறவைகள் பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொரு பரமாணுவிலும் அவ்விதமே தோன்றும். ஆகையால் சத்தினுடைய விஸ்தாரம் அளவிட முடியாது.

### ஜனனம் யாருக்கு ?

ராமன் : ஞானமடைந்து, நிர்விகல்ப சமாதியும் சித்தித்து, ஏன் மறுபடியும் பூமியில் ஜனனம் ஏற்படுகின்றது ?

வசி : ஜனனமாகிறவர்கள் நியதி யென்னும் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டவர்களேயாகும். இந்த நியதியும் சித்தின் சக்தியைத் தவிர வேறல்ல. இது சிருஷ்டி ஏற்பட்ட காலத்திலேயே அதன் கூடவே எல்லா வஸ்துக்களையும் வியாபித்து, எக்காலத்திலும் மாறுபாடு அடையாமலும் ஒவ்வொரு பொருளையும், கிரியையையும் தனக்கு உட்படுத்திக்கொண்டு நிற்கின்றது. ஆகவே சிருஷ்டியும் நியதியும் ஒன்றையொட்டி

யொன்று பிரவிர்த்திக்கலாயிற்று. இந்த நியதியின் காரணத்தால்தான் பல ஜந்துக்கள் உண்டாகவும் இயன்றது. இல்லாவிடின் ஒரு பொருள் மற்றொன்றாக மாறியோ அல்லது ஒன்றுக்கொன்று வித்தியாச மில்லாமலோ உலகம் விஸ்தரிக்க வேண்டும். ஆகவே நியதியென்பது புல்பூண்டுகள், ஜீவராசிகள், தேவா சுரர்கள் எல்லாவற்றையும் வியாபித்து இவற்றிலுள்ள பேதங்களுக்கும் காரணமாய் நிற்கின்றது.

நியதியைப்பற்றி

இப்படி நியதியின் விஸ்தாரம் சகலத்தையும் வியாபித்து நிற்பதால், இதற்கும் சாக்ஷி பூதமாக இருக்கும் பரமார்த்தத்தையே நாம் சந்தேகிக்கும்படி நேர்ந்து விட்டது. ஆகாயத்தில் ஒரு சித்திர அமைப்பைக் காண்பதாக நாம் சில சமயங்களில் நம்புவது போல இந்தப் பரப்பிரம்மத்தின் இருப்பைக்கூட நாம் எளிதில் மறக்கிறோம். அப்படி இல்லாவிடின் நியதியும் நிலைக்காது.

இந்த சம்சாரம், நியதியென்னும் தத்வம் எல்லாம், பிரம்மா-சிவன் இவர்களைப்போல ஞானிகளால் நமக்கு அறிவிக்கப்பட்டன. மேற்சொல்லிய நியதிக்கு ஆதாரம் பௌருஷமே. இப் பௌருஷமில்லாவிட்டால் நியதி நிலைக்காது. பௌருஷமும் சித்தின் தன்மையே. மானிடர்களுக்கும் பௌருஷமே பிரதானம். பௌருஷமின்றி ஒரு செயலையும் சாதிக்க முடியாது. நியதியின் சுபாவமும் இப்படியே. ஒவ்வொருவருடைய கிரியைகளுக்கும் கர்மங்களுக்கும் நியதியேதான் காரணம். தற்சமயம் நீ என் உபதேசத்தை அடைவதும் நியதியின் குணத்தாலேதான். அப்படி இருந்தபோதிலும் மானிடர்கள் பௌருஷமில்லாமல் இருப்பின் அவர்க

ஞுடைய கதியும் மரம் மட்டைகளைப் போலவே தான் ஆகும். நியதியின் சக்தியால் தேகம் ஏற்பட்ட தென்று அது நியதியாலேயே ஆதரிக்கப்படுமென்று ஒருவன் சும்மா இருப்பின், அவன் உயிரை இழப்பதில் சந்தேகமில்லை. நியதியானது எப்படிப் பௌருஷத்தால் நிலைநிற்கிறதோ அவ்விதமே மனிதர்களும் பௌருஷத் தால்தான் நிலைநிற்க முடியும். ஆகையால் நியதியின் நடை எவ்விதமிருப்பினும் மானிடர்கள் பௌருஷத் தைக் கைக்கொண்டுதான் ஞானத்தை அடைய வேண்டும்.

[குறிப்பு: ராமனுடைய கேள்விக்கு நேரான பதில் வசிஷ்டர் வாக்கில் இருப்பதாகத் தோன்றவில்லை. ஆனால் இதர இடங்களில் பரம முக்தியை யடைந்த வர்கள் மறுபடியும் ஜனனமாகிறதில்லை யென்று பல தடவை சொல்லி இருப்பதால் இங்கே நாம் ஊகிக்க வேண்டியது ஜனனம் ஓய்வு அடையாதபரியந்தம் நியதிக்கு உட்பட்டிருக்க வேண்டியதென்றும், மேலும் ஆதியில் ஜனனமான தோற்றம் ஏற்பட்டவுடன் நிர்ணயித்துக்கொண்ட காலம் முடியாம லிருக்கும் வரையில், ஜீவன் முக்தனானபோதிலும், ஜனனம் ஓய்வதில்லை யென்றும், இதுவே இவ்விடத்தில் பொருந்தும்.]

ராமன்: இந்த ஜீவனானது பரப்பிரம்மத்தில் தோன்றியும் இரண்டென்ற பாவம் ஏற்பட்ட காரணம் என்ன?

ஜீவத்தோற்றம் இரண்டு என்ற பாவனையால் ஏற்பட்டது

வசிஷ்டர்: பிரம்மம் பரம சாந்தமாகவும் அமைதி யாகவும் சதா இருப்பினும், மிகவும் அமைதியா யிருக்கும் ஒரு கடலில் ஒரு சிறிய அலை ஏற்பட்டால்

எப்படியோ அப்படியே இந்த சாந்தக் கடலில் ஒரு ஸ்பந்தம் அல்லது அசைவு யதேச்சையாகவே ஏற் பட்டது. அதுவே இந்த ஜீவனென்ற தோற்றம். அது சித் சொரூபம். சேதனமே அதற்கு இயற்கையான குணம். சேதனம் சூக்ஷ்ம ஸ்திதியில் சங்கல்பமென்றும் வெளிப்படையாகத் தோன்றும் பொழுது கிரியை யென்றும் சொல்லப்படும். இந்த ஜீவனுனது சங்கல்ப வசத்தால் சகல வஸ்துக்களேயும் பிராணிகளேயும் முதலில் சூக்ஷ்மமாகவும் பிறகு பூத சம்பந்தத்துடனும் சிருஷ்டித்தது. இப்படிச் சிருஷ்டிக்கப்பட்டவைக ளெல்லாம் ஜீவனின் பிரதிபிம்பமே. ஜீவன் பிரவிர்த்தி யையே தொழிலாகக் கொண்டதனுல் அதன் நோக்கம் முற்றிலும் அதிலேயே முழுகிக் கிடந்து தான் யாரென்று உணருவதில்லை. தன் இயக்கத்தில்தான் தன்னே உணருகிறது. இதுவே துவைத பாவத்திற்குக் காரணம். ஜீவனுக்குத்தான் இவ்வித உணர்ச்சி ஏற்படு கிறதே தவிர சதா ஆநந்தமயமாய் இருக்கும் பிரம்மத் திற்கு யாதொரு உணர்ச்சியும் ஏற்படுவதில்லே. ஆயினும் ஜீவனுடைய சிருஷ்டியிலும் சங்கல்பத்திலும் இந்த பிரம்மம் வியாபித்தே இருக்கிறது. ஏனெனில் ஜீவனும் அதைத் தவிர வேறல்லாததால். நம் தேகத் தில் ஜீவனென்பது எப்படி ஒவ்வொரு அங்கத்தையும் ஒவ்வொரு இருணத்தையும் வியாபித்திருக்கிறதோ அதுபோலவே பிரம்மம் எவ்விடத்திலும் எல்லா வஸ் துக்களிலும் வியாபித்திருக்கிறது. இந்த ஜீவனுக்குத் தான் செய்யும் கிரியைகளே தன் கர்மாவாக ஏற்படு கின்றன. ஆகையால் தன்னுடைய கர்ம பலன்களி லிருந்து ஜீவன் எப்படித் தப்பிக்க முடியும்? இக் கர்மங்களே இந்த ஜீவனுக்குத் தெய்வம். வேறு தனிப்

புருஷனுன ஒரு தெய்வமென்பது கிடையாது. மேலும் இந்த ஜீவன்தான் சிருஷ்டிகளுக்கெல்லாம் காரணம். இந்த ஜீவன்தான் பிரம்மாவென்றும் அழைக்கப் படுவது. இதைத் தவிர வேறு தனிப்படையான சிருஷ்டிகர்த்தா ஒருவன் இல்லை.

ஆகவே இந்த ஜீவனுகிய பரமாத்மத் தோற்றம், பிரவிரத்தி என்பதில் ஈடுபட்டுக் கொண்டதும் பிரவிர்த்திப்பது தானென்று உணர்ந்து தன் சுய நிலையை மறந்து, அதனுல் மேன்மேலும் பிரவிர்த்தியில் ஈடுபட்டுக்கொள்ளுகிறது. ஒவ்வொரு பிரவிர்த்தியின் முன் ஏற்படும் சங்கல்பமே மனதின் சொரூபமாகும். இது உருவத்தையும் கனத்தையும் அடைந்தால் பதார்த்தமும் பலனுமாகின்றன. மேற்கூறிய சங்கல்பமும் அதனுல் விளையும் பலனும் "நான்" என்ற மூல இச்சையை முன்னிட்டு ஒவ்வொரு விஷயத்திலும் பிரவிர்த்தியாகின்றது. ஆகவே மனஸ் என்பது ஜீவனின் இச்சையைத் தவிர வேறில்லை. மனதே இப்பிரம்மாண்ட சம்சாரத்திற்குக் காரணம். இதனுல் இந்திரியங்களும், இந்திரியங்களால் தேகமும் இயங்கு கின்றன. மனது, இந்திரியங்கள், தேகம் இவைகளின் சேர்க்கையே கிரியையும் கர்மாவுமாகின்றன. ஆகவே மனதுதான், வெளி நோக்கம் ஏற்படுகையில், பிரபஞ் சத்தையும் உள் நோக்கம் கொண்டபொழுது ஜீவனுகிய பரமாத்மாவையும் பார்க்கின்றது. இந்த இரண்டு பாவத்தையும் வைத்துக்கொண்டுதான் விஸ்தரிக்கவும் செய்கின்றது. இதுவே துவைதபாவம். இது மனதிற் குத் தான் ஏற்படுகின்றது. ஜீவனுகிய பரமாத்மாவுக்கு இந்த துவைத பாவம் கிடையாது. ஆகவே தேகமும் பிரபஞ்சமும் மனதின் கன சொரூபம். மனது

ஜீவனின் இச்சா சொரூபம். ஜீவன் பரமாத்ம சொரூபம். ஆகையால் பரமாத்மாதான் எல்லாமுமே. இதை அறிய ஓர் உதவியும் வேண்டியதில்லை. கண்ணெதிரிலுள்ள கைப்பொருள்போல் பிரத்யக்ஷமானது.

**ஆத்மாவை அடைய இச்சைகளை ஒழிப்பதே தேவை**

இந்தத் தத்வத்தையறிய அதிகப் பிரயாசையும் வேண்டியதில்லை; வெகு எளிதாகவே அறியலாம். எப்படியென்றால் இச்சைகள் அநித்யமென்று நாம் நன்கு உணருகிறோம்: அப்படியிருக்க இவைகளை அடியோடு ஒழித்தால் நஷ்டம் என்ன? இச்சைகள் ஒழிந்தால் மனதிற்கு வெளி நோக்கம் ஓய்ந்து உள் நோக்கம் ஸ்திரமாகிறது. இதுவே அறிவென்பதும். இச்சைகளை ஒழிக்க அப்யாசந்தான் முக்கியம். எது நமக்கு வெகு திருப்தியைக் கொடுக்கிறதோ அது முதலில் தியாகம் செய்யப்பட்டால் மற்றவைகளெல்லாம் வெகு சீக்கிரமாகவே விடப்படும். ஆகையால் முக்தியை அடைய வெகு எளிதில் முடியும், அதாவது இந்த மனோ நிலையையுடையவர்களால்.

## 67. மனதும் ஆத்மாவும்

ராமன்: மனமென்னும் தன்மையை யுடைய ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் என்ன சம்பந்தம்? அது எப்படி உண்டாயிற்று?

வசிஷ்டர்: சர்வேசுவரனாக இருக்கும் பிரம்மம் சதா பரம சாந்தமாகவே இருக்கின்றது. ஆனால் அதில் அடங்கி இருக்கும் சக்தி அசைந்தால் ஜீவனென்று சொல்லப்படும் விஸ்தரிப்புக்குக் காரணமாகின்றது. இந்த ஜீவனுக்குச் சங்கல்பமே மூல காரியம். இந்த சங்கல்பமாகிய இயக்கந்தான் மனஸ் என்பது. மனஸினுடைய விஸ்தரிப்பு பிரபஞ்சமாகும்.

ரா: அப்படியானால் நாம் எதைத் தெய்வமென்றும், கர்மமென்றும் கருதுகிறோம்? எதைக் காரணமென்று சொல்லுகிறோம்?

வசி: பிரம்மத்தில் அடங்கிய சித் அல்லது அறிவானது அறியும் தன்மையில் இயங்கினால் அதுவே ஸ்பந்தமென்றும் உணர்ச்சியென்றும் சொல்லப்படும். இதுவே ஜீவனுமாகும். இந்த நிலையில்தான் இரண்டு என்ற நோக்கம் ஏற்படுகிறது. இதன் தொடர்ச்சியாக புத்தி, மனஸ், பிறப்பு, இறப்பு, கர்மம் எல்லாமுமே அடுத்தடுத்து ஏற்படுகின்றன. ஜீவன் எப்படி யதேச்சையாகத் தோன்றியதோ அதேமாதிரி, ஸ்பந்தசக்தி அடங்கியதும், பிரம்மத்தில் ஐக்கியமாகிறது. ஒவ்வொரு ஜீவனின் காலமும் வேறாகும். சில அநேக லக்ஷக்கணக்கான ஜன்மங்களுக்குப் பிறகு ஓய்வு அடைகின்றன. சில ஒரே ஜன்மத்திலும் ஓய்வு அடையலாம். எப்படியும் இவை பரமார்த்தத்தில் ஒரு தோற்றமே. ஆனால் இந்தத் தோற்றங்களுக்கு பரமாத்மமே காரணமென்று நினைக்கப்படலாம். ஒருவிதத்தில் இதை ஒத்துக்கொள்ளலாம். எப்படியென்றால் நிலத்தில் விதைத்த விதை மரமாக வளருகையில் ஆகாயம் வளர்ச்சிக்குத் தடை செய்யாமல் எப்படிக் காரணமாகின்றதோ அப்படி பிரம்மம் ஜீவனுக்குக் காரணமென்று கருதப்படலாம். ஒரு ஸ்படிகத்தின் அண்டையிலிருக்கும் வஸ்துக்களெல்லாம் பிரதிபலிப்பதால் அவையெல்லாம் அதினுள்ளிருப்பதான தோற்றம் ஏற்படுவதுபோல, ஜகத் முழுதும் பிரம்மத்தில் பிரதிபலித்து அதுவே காரணமாகத் தோன்றுகின்றது. ஆனால் இந்த விஷயத்தை ஆராய்ச்சி செய்து அறிவதால் பலனென்னவென்று கேட்கலாம். ஏனெனில்

எல்லா ஜீவன்களும் ஒருகாலம் முக்தியடைய வேண்டியதால். ஆராய்ச்சியால் அடையும் பலனானது ஜன்மாக்களில் ஏற்படும் பாதைகளின்றி ஜீவன் வாழ்நாளைச் சந்தோஷமாகக் கழிக்கலாம். இதுதான் அறிவினால் ஏற்படும் பலன். ஆகவே பிரம்மம் யாதொரு சம்பந்தமுமின்றி ஜீவனுக்குக் காரணமாகின்றது.

## விஷூசிகா கதை

மானிடர்கள் மனதில் எதைக் கற்பனை செய்து கொள்ளுகிறார்களோ அதையேதான் பின்பு அனுபவமாக அடைகிறார்கள். இவ் விஷயத்தை விளக்க புராணத்தில் ஒரு கதையுண்டு. அதாவது கர்கடி என்ற ராக்ஷசியைப்பற்றியது. அவளுக்கு விஷூசிகா வென்றும் பெயர். அதியவ பாதிகை என்றும் பெயர்.

இமோத்கிரி பர்வத சார்பில் வசித்துவந்த இவள் விந்திய மலைக்காட்டைப்போல பிரம்மாண்ட உடலை தரித்தும், அகோர பார்வையையும் உடையவளாகி இருந்தாள். இவளுடைய அடங்காப் பசிக்கு வேண்டிய தீனி ஒரு காலம் எங்கும் அகப்படாமல், என்ன செய்வதென்று சிந்தித்து கடைசியில் பிரம்மாவை நோக்கித் தவம் செய்வதே சரியென்று அப்படியே செய்யத் தொடங்கினாள். வெகுகாலம் கடின தபஸ் செய்த பலனாக பிரம்மா பிரத்யக்ஷமாகி, ஆசீர்வதித்து அவள் வேண்டுகோளைத் தெரிவிக்கச் சொன்னார். இறைவனுக்கு அடிபணிந்து, தான் எல்லா ஜீவப்பிராணிகளில் நுழையவும், பிறகு அவைகளைப் புசிக்கவும், ஆகிய இவ்விரண்டு தன்மைகளையுடைய வரன் வேண்டியதாக வணங்கிக் கேட்டுக்கொண்டாள். அவள் இச்சைப்

படியே வரனைக் கொடுத்து பிரம்மா அப்படியே மறைந்தார்.

### வரத்தினுல் ஏற்பட்ட பலன்

வரன் கிடைத்த கொஞ்ச நேரத்திற்கெல்லாம், இவளுடைய பிரம்மாண்டமான உடல் கொஞ்சம் கொஞ்சமாக குறுகியும் மெலிந்தும், ஒரு கை அளவாகி விரல் அளவுக்குக் குறைந்து இன்னும் சற்று நேரம் கழிய கண்ணுக்குப் புலப்படாமல் சூரியக் கிரண அளவாகிவிட்டது. இப்படித் தன் நிலைமை க்ஷீணிப்பதைக் கண்டு வெகு வியப்படைந்தாள், பிறகு பயந்தாள். கடைசியில் நொந்துகொண்டாள். தான் கோரியது தனக்கு இவ்வளவு விபரீதமாக முடியுமென்று கனவிலும் எண்ணவில்லை. ஆனுல் இப்படித்தான் நம்முடைய ஆசைகளெல்லாம் முடிவு பெறுகின்றன. நாம் எதை இச்சித்தாலும் அதைப் பிரயத்தினத்தால் அடைவது நிச்சயமே. ஆனுல் அது நமக்குப் பின்பு எவ்வித சந்தோஷத்தைக் கொடுக்குமென்பது நிச்சயமில்லை. இப்படி விபரீதமாக விளையும் கிரமமென்னவென்ருல், ஒரு விஷயத்தில் நாம் இச்சை வைக்கும் பொழுது மனமெல்லாம் அதிலேயே லயப்பட்டு அதைத் தழுவி நிற்கும் இதர விஷயங்களை கவனிக்க முடியாமலும் ஆகையால் அதற்குத் தேவையான ஏற்பாடுகளை செய்யாமலுமிருப்பதே சகஜம். இதனுல் காரியம் கைகூடியும் அது நம்மைப் பிரதிகூலமாக பாவிக்கின்றது. ஆகவே எவற்றிலும் ஆசை என்பது கூடாது. இந்த ராக்ஷசியின் கதியைக் கவனித்தால் அது எவ்வளவு பரிதபிக்கத்தக்கது? எவ்வளவு அகோர தபஸ்! அதற்கு என்ன பலன்!

விஷூசிகா என்பதன் உட்பொருள்

இப்படி ராக்ஷசியாக உருவகப்படுத்தியது யாதென்றால் ஜீவ ஜந்துக்களுக்குச் சத்ருவாயிருக்கும் விஷக் கிருமிகளே. இவைகள் எங்கும் பரவியும் எல்லாவற்றிலும் வியாபித்தும், தேக சௌக்யம் கொஞ்சம் குறைந்தால் அப்பொழுது தேகத்தில் வேரூன்றி நாசத்திற்குக் காரணமாகின்றன. இவ் விஷக் கிருமிகள் இல்லாத இடங்கள் சொற்பம். உதாரணமாக, காற்று ஓட்டமில்லா இடங்கள், கொசுக்கள் நிரம்பிய இடம், சதா ஈரமாக இருக்குமிடங்கள், பில்வ விருக்ஷமில்லா இடம், அழுக்கு உடைகள், தேகத்தில் அதிக வளர்ச்சியடைந்த எலும்புப் பூட்டுகள். (Joints of bones) அதி வேகமாக அடிக்கும் காற்றுகளில், மூடுபனிகளில், நக சந்துக்களில், மனித சஞ்சாரமுள்ள இடங்களிலிருக்கும் புதர்களில், எச்சில், பாலைவனம், இவ்விடங்களிலெல்லாம் இக்கிருமிகள் சதா சஞ்சரிக்கின்றன. மேலும் யாத்ரீகர்கள், வழிநடைகள், பேன்பிடித்தவர்களால் உபயோகிக்கப்படும் பாத்திரங்கள் இவைகளால் இக் கிருமிகள் வேறு இடங்களுக்குப் பரவுகின்றன. மேலும் ஆத்ம ஞானமில்லாமலிருப்பவர்களிடமும் இக் கிருமிகளிருப்பது நிச்சயம். இக் கிருமிகள் வியாதிகளுக்கு மாத்திரம் காரணமாக இல்லாமல் எல்லா ஜீவப் பிராணிகளிலும் வியாபித்திருக்கின்றன. நம் தேகம் முழுமையும் அதாவது ரோமம், தோல், மாம்ஸம், ரத்தம், எலும்பு, எல்லாமுமே இவைகளாலே வியாபிக்கப்பட்டு வளர்ச்சியுமடைகின்றன. ஆகவே இவைகள்தான் ஜீவ ஜந்துக்களாகும். தேக நிலைமை சரியாகவும் ஒரு நிதானத்திலும் இருக்கும்வரையில் இக் கிருமிகளும் தங்கள் செயல்களை நேராகவே

செய்துகொண்டு வருகின்றன. தேக சௌக்யம் குறைந்தால், அதாவது ஆகாரத்திலாவது அல்லது வேறு காரணத்திலாவது, அப்பொழுது இக் கிருமிகளே விஷமாகின்றன. ஆகவே அமிர்தமும் விஷமும் ஒரே கிருமி இனத்தின் மாறுதலான செயல்கள்.

## விஷூசிகாவின் தவம்

இந்தக் கேவல நிலைமையை அடைந்த ராக்ஷசி மனம் நொந்து பிறகு கொஞ்சம் விவேகத்தையும் அடைந்து தான் இக் கதியை தபஸால் அடைந்தது ஞாபகம் வந்து, மறுபடியும் தபசினால் நல்ல கதியடையலாமென்று தீர்மானித்து, யதேச்சையாக அங்கே வந்த ஒரு கழுகின் சுவாச மார்க்கமாக அதினுட் சென்று, அதை இமோத்கிரி மார்க்கம் செல்ல மனதைத் தூண்டி, கொஞ்சம் நாழிகை கழித்து பழைய வாஸ ஸ்தலத்திற்கு வந்துசேர்ந்தாள். உடனே தபஸைத் தொடங்கி வெகுகாலம் இந்த ஸ்திதியிலிருந்தாள். தேவேந்திரன் இதை அறிய வந்து பிறகு நாரதரால் தவத்தின் நோக்கத்தையும் தெரிந்துகொண்டான். தன் மகிமை குறைந்துவிடுமோ வென்று பயந்து அதற்கு உபாயமாக வாயுபகவானை அழைத்து தபஸ்வினியைக் கண்டு வரன் அளித்துவரும்படி ஏவினான். வரத்தைப் பெறுவதால் தவத்தால் சேகரிக்கப்பட்ட பௌருஷம் குறையும். மேலும் வரப்பிரஸாதத்தை அனுபவித்தபிறகு பழைய நிலைமைக்குத் திரும்ப நேரிடும். இதுவே இந்திரனுடைய சூழ்ச்சி. வாயு பகவான் அப்படியே சென்று அங்குமிங்கும் தேடி, கடைசியில் இருப்பிடத்தை அடைந்து, ஒரே காலில் நின்று அகோர தபஸ் செய்துவரும் காட்சியைக்

கண்டு, அத்தபோ மகிமையால் பனிக்கட்டியால் மூடப்பட்ட மலையெல்லாம் ஜ்வாலை விட்டு எரிவது போல உஷ்ணத்தையும் உணர்ந்து ஒன்றும் செய்ய முடியாமல், தரிசனம் கிடைத்ததே தனக்கு பரம லாபமாகக் கருதி தேவேந்திரனிடம் திரும்பிச் சென்றார். நாரதரிடமிருந்து வரலாற்றைக் கேட்ட தேவேந்திரன் தன்னால் இயலாத வரப்பிரஸாதம் பிரம்மாவினால்தான் கொடுக்கப்படுமென்று, பிரம்ம லோகம் சென்று அவ்வதிபதிக்கு எல்லா விஷயங் களையும் தெரிவித்தான். இதைக் கேட்டு பிரம்மாதான் வரனளிப்பதாகச் சொல்லி, தபஸ்வினிக்கு மனோ ரூபமாக தன்னைத் தெரிவித்துக்கொண்டு என்ன உத்தேசத்தைக் கொண்டு தபஸில் ஈடுபட்டாளென்று கேட்டார். இதை உணர்ந்த ராக்ஷசி சற்று ஆலோ சித்துப் பிறகு தனக்கு இப்பொழுது யாதொரு தேவையுமில்லையென்று அறிந்துகொண்டாள். எல்லா விதப் பற்றுதல்களும் அவளுக்கு வேரோடு அறு பட்டன. மனம் நிர்மலமாகி எல்லாவற்றையும் பிரகா சிக்கச்செய்து நின்றது. ஆகையால் யாதொரு வரனையும் இச்சிக்காமல் மௌனமாகவே இருந்தாள். இதை அறிந்து பிரம்மாவானவர், இவளுடைய பூர்வ வாசனை முற்றிலும் அழியாமலிருந்தபடியால், நிய திக்கு விரோத மேற்படாமல், இவள் முதலில் கொண்ட இச்சை நிறைவேறும்படியும், தபசின் பலன் சித்திக்கும் வண்ணமும், பழைய ராக்ஷச சொரு பம் அடையச்செய்தார். ராக்ஷச சொரூபம் சூக்ஷ்மமாக இருந்தே வந்ததால் அது ஸ்தூலமாகும்படி செய் வித்ததின் கருத்து இதுவே. இவைகளை ராக்ஷசிக்குத் தெரிவித்து மேலும் இந்த தேகத்துடனே ஞானியாய்,

பாக்கி வாழ்நாளைக் கழிப்பாளென்றும் சொல்லி மறைந்தார்.

பிரம்மாவின் தரிசனத்திற்குப் பிறகும் கொஞ்ச காலம் தவத்திலேயே கழித்தாள். ஒரு நாள் நிஷ்டையி லிருந்து கண்ணை விழித்ததும் பசியால் தேகம் வருந்து வதை உணர்ந்தாள். இது ஸ்தூல தேகத்தின் நியதி. ராக்ஷஸ தர்மப்படி இப்பசியை இதரப் பிராணிகளைப் புசித்துத்தான் தீர்க்கவேண்டும். இப்படிச் செய்வதை விட தன் தேகம் அழிவதே மேலென்று நினைத்தாள். இப்படி யோசித்துக்கொண் டிருக்கும்பொழுது ஒரு அசரீரி வாக்கு காதில் விழுந்தது, அதாவது அக்ஞானி களைப் புசித்தால் தோஷமில்லை யென்றும் இவ்விதம் தன் பசியைத் தீர்த்துக்கொள்ளலாமென்றும், இதுவே சரியென்று தீர்மானித்துக்கொண்டு இரை தேடப் புறப்பட்டாள். போகும் வழியில் இவளுக்கு தோன் றினதாவது: மூடர்களுக்கும் ஆத்ம ஞானமில்லாதவர் களுக்கும் இருப்பை விட இறப்பே மேல். ஏனெனில் வாழ்வில் ஏற்படும் துன்பங்களை அனுபவிக்காமலிருக்க லாம். ஞானிகள் எல்லோருக்கும் நல்வழியைக் காட்டு கிறார்கள். இவர்களைப் புசிப்பதால் தனக்கும் நல மில்லை, உலகத்திற்கும் கேடு. இவ்விதமெல்லாம் எண்ணியவாறு ஓர் அடர்ந்த காட்டை அடைந்தாள்.

## ஞானிகளின் சந்திப்பு

கொஞ்சதூரம் சென்றதும் இரண்டு மனிதர்கள் எதிரிலே வருவதைக் கண்டு, தனக்குத் தீனி அகப் பட்டதென்று எண்ணிக்கொண்டு, ஆனால் இவர்களை முதலில் விவேகிகளா அல்லது மூடர்களாவென்று பரிசோதிக்கத் தீர்மானித்து, பயங்கரமான கர்ஜனை

செய்து "யார் அங்கே" என்று கேட்டாள். வந்தவர்கள் தீரர்களாயிருந்ததால் இவ் வுருட்டலுக்கெல்லாம் பயப்படாதவர்களாய், அவர்களில் ஒருவன் பின்வருமாறு பதிலுரைத்தான்.

"இந்தக் கேள்வியைக் கேட்பது யார்? எங்கள் நாட்டில் இவ்வளவு அட்டகாசம் செய்துகொண்டும் மரியாதையின்றிப் பேசுவதும் யார்? தனக்கு ஏதாவது தேவையாக இருந்தால் நேரில் வந்து வேண்டியதை வணக்கத்துடன் கேட்டுக்கொள்ளலாம். இந்தப் பிரதேசம் கிராத மண்டலத்தைச் சேர்ந்தது. இத் தேசத்தில் வசிக்கும் வேடர்களின் தலைவன் என் அருகிலிருக்கும் விக்ரமன். நான் அவருடைய மந்திரி. பிரஜைகளின் நன்மையைக் கருதி, அவர்களுக்கு யாதொரு தீங்கும் நேராதபடி நாங்களிருவரும் மாறு வேஷம் பூண்டு இரவெல்லாம் துஷ்டர்களைத் தேடி சிக்ஷித்து வருகிறோம். நாங்கள் யாருக்கும் அஞ்சினவர்களில்லை. ஆனால் எங்களை நாடி எவர் யாசித்து வந்தாலும் அதை அவர் அடையாமல் போவதில்லை. ஆகையால் உனக்கு அவ்விதம் தேவை இருந்தால் விண்ணப்பம் செய்துகொள்ளலாம். இப்படி வணங்கிக் கேட்பதை விட்டு அவசரமும் படபடப்பும் மேற்கொள்வதில் பயனில்லை. இவைகளால் யாருக்கும் காரியம் கைகூடாது."

இம் மொழிகளைக் கேட்ட ராக்ஷசி, இவ்வளவு தீரர்களாயும் மரணத்தைப் பற்றி அலக்ஷியமாயும் இருப்பவர்கள் ஞானிகளாகத்தான் இருக்கவேண்டுமென்று தீர்மானித்துக்கொண்டு, ஆகையால் இவர்களைப் பரிசோதித்தால் தனக்குண்டான சிற்சில சந்தேகங்களை நிவர்த்தி செய்துகொள்ளலாம் என்று

தன் எண்ணத்தைத் தெரிவித்தாள். "நீங்கள் யாராக இருந்தாலும் எனக்குப் பயமில்லை. நான் என் பசியைத் தீர்த்துக்கொள்ள இரைதேடி வந்தேன். நீங்களும் யதேச்சையாக என் வசம் அகப்பட்டீர்கள். ஆனால் நீங்கள் ஆத்ம ஞான முடையவர்களாக இருந்தால் உயிர் தப்பிக்கலாம். ஆகையால் உங்களைப் பரிசோதிக்கும் பொருட்டு ஆத்ம விஷயமாகச் சில கேள்விகளைக் கேட்பேன்" என்று சொன்னாள்.

### விஷூசிகாவின் கேள்விகள்

இப்படிச் சொல்லிவிட்டு மந்திரியை நோக்கி தன் சந்தேகங்களை பத்து கேள்விகளாகக் கேட்டாள். கேள்விகளுக்கு பதிலாக மந்திரி அவைகள் அனைத்தும் பரமாத்ம தத்வத்தைத் தழுவி இருப்பதாகச் சொன்னான். அது பிரபஞ்சத்திற்கெல்லாம் காரணமாயிருந்தும் எதிலும் ஒட்டாமல் நிற்கின்றது. எல்லாம் அதில் அடங்கி இருப்பதென்றோ அல்லது அது எல்லாவற்றையும் ஊடுருவி நிற்பதாகவோ கருதலாம். மேலும் அது பரமாணுவின் தன்மையை அடைந்தது போலிருக்கிறது. பிரமஞ்சமாகிய காட்சி இப் பரமாணுவில் தோன்றுகின்றது. இதைச் சூன்யமாகவோ அல்லது பூர்ணமாகவோ பாவிக்கலாம். மனதைச் சேர்த்து ஆறு இந்திரியங்களுக்கும் புலப்படாமலிருப்பதால் சூன்யமாகத் தோன்றுகின்றது. ஆனால் அது எக்காலத்திலும் எல்லாப் பொருள்களிலும் எங்கும் நிறைந்திருப்பதால் பூர்ணமென்றும் தோன்றுகின்றது. எவ்விதம் எண்ணப்பட்டாலும் இந்த பாவனைகளெல்லாம் நம் மனதில் புலப்படுபவைகள். ஆத்மாவுக்கு ஒரு வித பாவனையும் கிடையாது. அது ஒருமைத் தன்மையுடனும், பாவனையற்றும், நிர்மலமாயும்,

சாசுவதமாயும், கேவலம் இருக்கை என்ற தன்மையுடனும் இருக்கிறது. மற்றவைகள் எல்லாம் அதனுள். அதனாலேயே பிரதிபலிக்கும் தோற்றங்கள், ஆகையால் நாசத்திற்கு உட்பட்டவைகள். இத்தோற்றங்கள் அவரவர் மனோ நிலையைத் தழுவி கால வித்யாசங்களைக் காண்பிக்கின்றன. ஆகையால் மனோ நிலைதான் காலப் பிரமாணத்திற்கு ஆதாரமே தவிர காலமென்ற ஒரு தனி சத்யமில்லை. இதுவும் ஒரு கற்பனையே. ஆயினும் இத் தோற்றங்கள் நமக்கு கனமானதாகவும் புஷ்டியுள்ளதாயுமான அனுபவங்களைக் கொடுத்து வருகின்றன ; அதாவது அக்ஞானம் நீங்கும் வரையில். ஏனெனில் அக்ஞானமாகிய மதி மயக்கமும் தோற்றமாகிய மதி மயக்கமும் ஒரே சமுதாயத்தைச் சேர்ந்தவைகளாதலால். ஆகையால் மோகந்தான் மோகத்தை உணருகிறது. சத்யம் சத்யமாகவேதான் இருக்கும். நமது மோகம் நீங்கினால் வஸ்துஜாலமாகிய மோகங்களும் அத்துடன் நாசமடைகின்றன. இந்நிலையில் மிஞ்சி இருப்பது உள்ளும் புறமும் வியாபித்து நிற்கும் ஆத்மா. இதற்குக் காலதேசக் கட்டுபாடுகள் கிடையாது. ஒரு பானையில் மூடிவைத்த ஆகாசத்தை ஆயிரம் மயிலுக்கப்பால் திறந்தால் அதன் உள்ளும் வெளியுமுள்ள ஆகாசம் எப்படி வெவ்வேறாகாதோ அப்படியே எல்லாப் பொருள்களையும் வியாபித்து நிற்கும் ஆத்மாவும் வெவ்வேறாக இருக்க முடியாது. இது போவதுமில்லை மாறுவதுமில்லை. இந்த மாறுபாடுகளெல்லாம் உற்பத்தியின் கிரமத்தை அறியாதவர்களுக்கே. தீவிர கானலில் அதற்கு விரோதமான நீர்க் காட்சி எப்படி ஏற்படுகிறதோ அதேமாதிரி ஞானத்தின் இருக்கையில்

அக்ஞானத் தோற்றம் ஏற்படுகின்றது. இந்த அக்ஞானத்திற்குக் காரணம், "நான்" "பொருள்" என்ற பேத பாவனையே. இரண்டிலும் பொதுவாய் நிற்கும் ஆத்ம உணர்ச்சி ஏற்பட்டால் உடனே மோக்ஷத்திற்கு உபாயம் ஏற்படுகிறது."

இவ் வார்த்தைகளைக் கேட்ட விஷூசிகா மிகவும் சந்தோஷித்து, பிறகு அரசனை நோக்கி இந்த ஆத்ம தத்வத்தைப் பற்றி அவன் அறிந்ததைச் சொல்லும்படி கேட்டாள். இவ்வேண்டுகோளுக்கு இணங்கி ராஜன் சொல்லத் தொடங்கினான்.

ராஜாவின் பதில்: "பிரம்மம் அல்லது ஆத்மாவென்பது ஜகத்தை ஒட்டிய அபாவம். பாவமாகிய உணர்ச்சியே ஜகத்; அபாவத்தன்மை ஆத்மா. அது எல்லாவற்றையும் விட்டொழிப்பதாயும் ஒன்றுமில்லாததாயும் இருப்பதே. இதில் ஏற்படும் விஸ்தரிப்பே ஜகத். விஸ்தரிப்பு அடங்கும்பொழுது பிரளயம் ஏற்பட்டதாகச் சொல்லப்படும். இவ்விஷயத்தைப் பற்றி மேலும் சொல்லுகிறேன்.

பரமாணுவிலும் பரமாணுவாக, ஆகவே சூன்யமாக நிற்கும் பிரம்மத்திலேற்படும் விகல்பம் (மதி மயக்கம்) அறிகிறவன் - அறிவு என்ற இரட்டை பாவனையாகின்றது. பிறகு இந்த அறிகிறவனுடைய பிரதிபிம்பமாகிய ஜகத் அறியும் தன்மையால் அறியப்படுகிறது. ஆகவே நம்முடைய உணர்ச்சிகளைத்தான் வஸ்துக்களாக அனுபவிக்கிறோம். ஜகத் அல்லது பொருள்கள் சப்தங்களால் குறிப்பிடப்படுகின்றன. இச் சப்தத்திற்கும் அதன் அர்த்தத்திற்கும் அப்பால் நிற்பது பிரம்மம். இது எல்லாமுமாக — இருந்தபோதிலும் வாஸ்தவமாக ஒன்றுமில்லை. எல்லா சப்தங்

களுக்கும் மூல அர்த்தமாக நிற்பது இந்த பிரம்மந் தான். இப்படி இருப்பதற்குக் காரணமும் அதுவே தான்.

சித்தின் இயக்கமே சிருஷ்டியின் ஆரம்பமாகும். இந்த சித்தானது எவ்விதமெல்லாம் சங்கல்பம் செய்ததோ அவ்வவ்விதமே உணர்ந்து பொருள்களுக்கு ஆதாரமாயிற்று. நாளுக்குநாள் சங்கல்பம் முதிர்ந்ததும் சூக்ஷ்மமான நிலையிலிருந்தவைகள் ஸ்தூல கதியை அடைந்ததும் பொருள்களென்று பாவிக்கப் படுகின்றன. அதனுல் இப்பொருள்கள் நமக்கு சத்யமாகத் தோன்றுகின்றன. ஆகவே சூக்ஷ்ம மாய் இருந்தவைகள்தான் ஸ்தூலமாக இப்பொழுது உணரப்படுகின்றனவே தவிர, முன் ஒன்றுமில்லாமல் இப்பொழுது உணர்ச்சி ஏற்படுவதில்லை. நம் கண்களை உபயோகிக்கும் பொழுது அனுபவத்தில் வந்தவை களைத்தான் உணருகிருேமே தவிர புதியதாய் ஒன்றை யும் உணருவதில்லை. ஒரு குழந்தை புதிய வஸ்துவைக் காணும்பொழுது அதன் மனதில் அப்பொழுது தோன்றியவாறு வஸ்துவை உணருகிறதே தவிர வஸ்துவின் சுய சொரூபத்தை அது அறிவதில்லை. ஆகையால் நம் மனதின் ஸ்திதியே வெளிப் பிரபஞ்ச மாகிறது. ஒரு உத்யானவனத்தில் வசந்த காலம் வந்தவுடன் பலவித புஷ்பச்செடிகள் வெவ்வேறு விதமாய்ப் புஷ்பிக்கின்றன. ஆகையால் இவைகள் வசந்தகாலத்தின் சாரமாகும். சாரம் ஒன்ருய் இருந்தும் புஷ்பங்கள் பலவிதமாகின்றன. அதேமாதிரி சித் ஒன்ருக இருந்தும் உணர்ச்சிகளும் அனுபவங்களும் வெவ்வேருகின்றன. இப்படியாக பல உணர்ச்சிக ளுக்குக் காரணம் மனதே.

சித்தின் ஒளியால்தான், இதைத் தவிர்த்து வேறில்லாத, பிரபஞ்சமும் உணரப் படுகின்றது. சித்தின் பிரவிர்த்தியின்றி பிரபஞ்சம் பிரகாசிக்க, அதாவது உணரப்பட, முடியாது. சூரிய சந்திர மண்டலங்களும் பிரகாசிப்பது சித்தின் ஒளியாலே தான். சித்தானது பிரகாசிக்காவிட்டால் இவைகளின் ஒளியைக் காண முடியாது. வெளிச்சத்திற்கு எதிரடி இருட்டு. வெளிச்சம் உண்டானால் இருட்டு மறைந்து விடுகிறது. ஆயினும் இவ்விரண்டையும் ஒரே சமயத்தில் உணர சித்தால்தான் முடியும். வெள்ளை மேகத்தில் இருக்கும் பனி வெளுப்பாகவும், மையின் மேல் வீழ்ந்த பனி கருப்பாகவும் இருப்பது போல, ஒளியில் சித்தானது பிரகாசமாகவும், ஒளி மறைந்ததும் இருட்டாகவும் உணரப்படுகின்றது.

தூர தேசத்தை ஒருவன் மனதில் சங்கல்பம் செய்துகொண்டு பிறகு அவ்விடம் சேர்ந்ததும் சங்கல்ப நகரத்தைப் பிரத்யக்ஷமாகக் காண்கிறான். சங்கல்பம் செய்வதற்கும் பிறகு இதைக் கண்டு ஆமோதிப்பதற்கும் இவ்விரண்டையும் தாண்டி நிற்கும் ஏக வஸ்துவால்தான் முடியும். அதுதான் இங்கு சொல்லப்படும் சித்.

ஆகவே இந்த சித்துதான் தன் இஷ்டப்படி பொருள்களாகிய தோற்றங்களைக் கற்பித்து அவைகளை வியாபித்தும் நிற்கின்றது. ஆகையால் நம்மால் காணப்படும் ஜகத் சித்தைத் தவிர வேறில்லை. விளையும் மரம் சூக்ஷ்மமாக விதையிலிருப்பதுபோல இந்த ஜகத் முழுவதும் சூக்ஷ்மமாக சித் பரமாணுவில் அடங்கி இருக்கிறது. இந்த விதையை ஒரு பானையில்

மூடிவைத்தால் எப்படியோ அப்படித்தான் தேகத்தில் மூடிவைக்கப்பட்ட ஜீவனும். இப்படிப் பலவிதத் தோற்றங்களைக் கொடுத்தும் சித்தானது ஒரு மாறு பாடுமில்லாமலிருப்பதால், இரண்டு, ஒன்று என்னும் தத்வங்களுக்கும் அதனிடத்தில் இடமில்லை. ஒன்று என்பதை நினைத்தால்தான் இரண்டு என்பதற்கு இடம். ஆகையால் எண்ணிக்கையை விட்டு ஒன்று மில்லை யென்னும் கொள்கையை ஆசிரயிப்பதே சரி யான மார்க்கம்" இவ்வாறு சொல்லி முடித்தான் அரசன்.

விஷூசிகாவின் முடிவு :

ராஜா, மந்திரி இருவராலும் போதிக்கப்பட்ட ஆத்ம ஞான விஷயங்களைக் கேட்டு மனமகிழ்ந்து அவர்களின் விவேகத்தைப் பற்றிப் புகழ்ந்து, தான் அவர்களுக்கு மிகவும் கடமைப்பட்டதாகவும், இனி அவர்கள் தன்னுடைய ஆப்த சிநேகிதர்களாறென் றும் சொன்னாள். மேலும் அவர்கள் செய்த உபகா ரத்திற்குப் பிரதியாக தன்னிடமிருந்து ஏதாவது வரனைப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்றும், ஆகையால் அவர்களின் இஷ்டத்தைத் தெரிவிக்கவும் கேட்டுக் கொண்டாள். இதற்கு இணங்கி ராஜா இனி அவள் நியாயமாயும் யோக்யமாயு மிருப்பவர் களைப் புசிப்பதில்லை யென்று வாக்களிக்கக் கேட்டுக் கொண்டான். அப்படியே வாக்குக் கொடுத்து இனி தான் தன்னிருப்பிடம் சென்று தபஸைத் தொடங்குவ தாகச் சொல்லிப் புறப்பட யத்தனித்தாள். ஆனால் அதை ராஜா உடனே மறுத்தான். பசியைத் தீர்த்துக் கொள்ளும் பொருட்டு தன் ராஜ்யம் நாடி வந்து, அதைத் தீர்த்துக் கொள்ளாமல் போவது சரியல்ல

வென்றும், அதற்குத் தான் ஒரு யோசனை செய்திருப்ப தாகவும் சொன்னான். அதாவது ராஜ தண்டனைக் குட்பட்ட துஷ்டர்கள், திருடர்கள் எல்லோரையும் தான் சேகரித்து வைப்பதாகவும், அவள் எப்பொழு தெல்லாம் தபஸிலிருந்து விழித்துப் பசியை உணருகி ருளோ அப்பொழுது இத் தேசம் வந்து இரையைச் சேர்த்து எடுத்துக்கொண்டு தன் தேசம் போய்ச் சாப் பிடலா மென்றான். இதை ஆமோதித்த விஷூசிகா, ராஜனுடைய சொற்படி, தன் சுயரூபத்தை விட்டு மானிட ரூபமெடுத்துக் கொண்டு ராஜா மந்திரியுடன் அவர்கள் அரண்மனை போய்ச் சேர்ந்தாள். அங்கே சிலநாள் தங்கிவிட்டுப் பிறகு சேகரித்து வைக்கப் பட்ட இரையைச் சேர்த்துக்கொண்டு, தன் சுயரூப மெடுத்து தன் இருப்பிடம் போய்ச் சேர்ந்தாள்.

ராஜா ஏற்பாடு செய்தபடி விஷூசிகா அப்போ தைக் கப்போது பசியால் பீடிக்கப்பட்ட போதெல் லாம் கிராத தேசம் சென்று இரையைப் பெற்று வந்தாள். இந்த அரசன் காலஞ்சென்ற பிற்பாடும் அத்தேசத்தில் இந்த வழக்கம் நடைபெற்று வந்தது. இன்னும் சில காலத்திற்குப் பிறகு ராக்ஷசி தன் உடலை விட்டுப் பிரியும் காலத்தை யுணர்ந்து தனக்கு பதில் வேறொருத்தியை முன்னமே நியமித்துவிட்டு அவள் பிரம்மாவின் வாக்குப்படி முக்தியடைந்தாள்.

## துவைத பாவமின்றி வியவகரிக்க முடியாது :

**வால்மீகி :** கதை முடிந்ததும் வசிஷ்டர் ராமனை நோக்கி இக் கதையின் தாத்பரியத்தை மனதில் வாங் கிக் கொள்ளும்படிச் சொன்னார். அதாவது பிரம்மத்தி லிருந்தே எல்லாம் உற்பத்தி என்பதை. "அதிலிருந்து

இது" என்னும் வாக்கியத்திலேயே பேதம் இருக்கும் பொழுது, துவைதம் சத்யமல்லவென்று எப்படிச் சொல்லலாமென்று ராமன் கேட்டான்.

பதம், வாக்யம் எல்லாம் வியவகாரத்திற்கு வேண்டிய கருவிகளே தவிர, சுயமாகவே அவைகள் சத்யமாகா என்றார் வசிஷ்டர். வியவகாரத்தில் இரண்டு என்னும் பாவமின்றி ஒரு செயலும் செய்ய முடியாது. நாமிருவரும் சம்பாஷிப்பதும் இப் பேத பாவத்தை அனுசரித்தே. எல்லாம் அறிந்த ஞானிக்கும் வியவகாரத்தில் பேதத்தை அனுசரித்துத் தான் எதுவும் செய்ய இயலும். ஆனால் அவர்களிடம் மூல தத்வம் எப்பொழுதும் உணர்ச்சியில் இருந்துவரும். வியவகாரமின்றி மூல தத்வத்தைக் குறிப்பிடுவது சர்வ மௌனமே. ஆகையால் தான் சொல்லும் கதைகளிலும் வசனங்களிலும் தாத்பரியத்தை எடுத்துக் கொள்ள வேண்டுமே தவிர கேவலம் பத அர்த்தங்களைக் கவனிப்பதில் பிரயோஜனமில்லை என்று சொன்னார். சொல்லப்படும் தத்வங்கள் சுலபமாயும் தெளிவாயும் புத்திக்குப் புலப்படும்பொருட்டு கதா ரூபமாயும் அழகிய சொற்களாலும், பல உதாரணங்களைச் சேர்த்தும் ஞானம் இங்கு உபதேசிக்கப் படுகிறது. இவ்விதம் சொல்லப்படாவிட்டால் இந்த உபதேசங்களை ஏற்றுக்கொள்வது மிகவும் கஷ்டம்.

இவ் விஷயமாக தனக்கே முன்னொருகாலம் சந்தேகம் தோன்றியதாகவும் அவைகளை நிவர்த்தி செய்துகொள்ளும் பொருட்டு பிரம்மாவையே நாடிக் கேட்டதாகவும் அவர் பின்வருமாறு உபதேசித்ததாகவும் சொன்னார்.

**பிரம்மா :** சங்கல்ப கிரமத்தால் சிருஷ்டியில் நான் ஈடுபட்டுப் பலவிதமான வஸ்துக்கள், செடி கொடிகள் ஜீவராசிகள், மானிடர்கள் அனைவற்றையும் வரிசை வரிசையாக ஏற்படுத்திப் பல காலமாகிய பகல் நேரம் சென்றதும், அந்திப் பொழுதில் இதைப்பற்றி யோசிக்கலானேன். யோசித்துப் பார்க்கையில் பல பிரபஞ்சங்கள், ஜனக் கூட்டங்கள், பல சூரிய சந்திர மண்டலங்கள், இவைகளுக்குக் காரணமாகிய என்னைப் போன்ற பல பிரம்மாக்களையும் கண்டேன். இதன் பொருள் விளங்காமல், இதை அறியும் பொருட்டு ஒரு சூரியனை அழைத்து அவனைக் கேட்டேன். சூரியன் என்னை வணங்கி, நான் இக் கேள்வியைக் கேட்டதுபற்றி மிக ஆச்சரியப்பட்டு, இருந்தபோதிலும் பதிலாக, நானின்றி இவையொன்று மில்லை என்றான். இதையொட்டி முன்னொரு காலத்தில் நடந்த சம்பவத்தையும் எடுத்துச் சொன்னான்.

### ஐந்தவர் (இந்து புத்திரர்) விருத்தாந்தம்

**சூரியன் :** “கச்யபனென்ற பிரம்ம குலத்தில் பிறந்த இந்து என்ற பிராமணன் எல்லா சாஸ்திரங்களையும் படித்து, சரியான காலத்தில் தனக்குத் தகுந்தவளான நற்குலத்தில் பிறந்த மனைவியை அடைந்து ஆனால் புத்திர பாக்யமின்றி விசனித்திருந்தான். கடைசியாக இக் குறையைத் தீர்த்துக் கொள்ளும் பொருட்டு இருவருமாக ஒரு தவத்தைத் தொடரத் தீர்மானித்து, அப்படியே ஒரு அடர்ந்த காட்டில் புகுந்து, சரியான இடத்தில் அமர்ந்து சில காலம் தவம் செய்தார்கள். தவம் வெகு சிரத்தையுடனும் ஊக்கத்துடனும் செய்யப்பட்டதால்,

சீக்கிரமே ஈசுவரன் பிரத்யக்ஷமாகி, தம்பதிகள் கோரின வரனைக் கொடுத்தார். வரப் பிரசாதத்தால் காலக் கிரமத்தில் வெகு சுந்தரமாயும் விவேகிகளாயு முள்ளபத்துப் புத்திரர்கள் பிறந்தார்கள். புத்திரர்கள் சரியான காலத்தில் எல்லா சாஸ்திரங்களையும் தகப்ப னிடமே கற்றுவந்தபொழுது, பால்யமாக இருக்கையி லேயே, தாய் தகப்பன் இருவரும் காலமானார்கள்.

உற்றார் உறவினர் ஒருவருமில்லாத சிறுவர்கள், இனி நாட்டில் வாழ்வது கடினமென்று அறிந்து காட்டிற்குச் சென்று தங்கள் முன்னேற்றத்தைக் கவனிப்பதே சரியென்று அதற்கேற்றதைச் செய்யத் தொடங்கினார்கள். இந்த முடிவை யனுசரித்து, ஒரு குறிப்பிட்ட இடத்தை அடைந்து அமைதியுடன் உட்கார்ந்து விசாரணை செய்யத் தொடங்கினார்கள். உலகத்தில் மேன்மையான பதவி யாது, எது சாசுவத மான இன்பத்தைக் கொடுப்பது, எதெல்லாம் தியாகம் செய்யப்பட வேண்டியது என்பவைகளைப் பற்றியும் இவைகளுக்குச் சம்பந்தமான விஷயங்களைப் பற்றியும் எல்லோருமாகச் சேர்ந்து ஆலோசனை செய்தார்கள். அவர்களில் மூத்தவன் வெகு சீக்கிரமாக ஒரு முடிவுக்கு வந்தான். பிரம்ம பதவியே முயற்சிக்க வும் அடையத் தகுந்ததுமானது. இதற்கு மேலானது பிரபஞ்சத்தில் ஒன்றுமில்லை என்று தன் முடிவைச் சொன்னான். இதை எல்லோரும் ஆமோதித்து, அப்படியே அந்தப் பத்து பாலர்களும் பத்மாசனத்தில் அமர்ந்து தீவிரமாகத் தவம் செய்தார்கள். இவர்கள் செய்த தவமுறையாவது, "நான்" என்பது ஒவ் வொரு வஸ்து, பிராணி எல்லாவற்றிலும் பொதுவாக வுள்ளதே. இந்த "நான்" என்பதே பிரம்மம்.

"நானே" இவ்வுலகத்தைச் சிருஷ்டி செய்வதும், அழிப்பதும்: என்றவாறு. இத்தகைய தவநெறியைக் கைக்கொண்டு வெகு ஊக்கத்துடனும் விடாமுயற்சியுடனும் நீண்ட காலம் மனம் ஒருமைப்பட்டதின் பலனாக பத்து பாலர்களும் ஒரே காலத்தில் பிரம்ம பதவியை யடைந்தார்கள். இவர்களே இப்பொழுது பத்து திக்குகளுக்கும் அதிபதிகளாக பத்து பிரம்மாவாக விளங்குகிறார்கள்.

பிரம்மா: சூரியன் இக் கதையைச் சொல்லி முடித்ததும், இவர்கள் என் செயலில் முயன்றிருப்பதால் நான் எதற்குச் சிருஷ்டியில் தலையிடவேண்டுமென்று நினைக்கலானேன். அதைச் சூரியனிடம் வெளியிட அவன் இதற்கு பதிலுரைத்ததாவது :—

### பிரம்மாவுக்கும் கர்மம் உண்டு என்பது

சூரியன்: உங்கள் செயலை நிறுத்துவதில் உமக்கு என்ன பலன்? உமக்குப் பற்றுதலென்பது இல்லாததால் சிருஷ்டியில் ஆகவேண்டியது ஒன்றுமில்லை. ஒரு தினம் என்பது எப்படித் திரும்பித் திரும்பி இடைவிடாமல் சூரியனால் ஏற்பட்டு வருகிறதோ அதே மாதிரி உம்மிடத்தில் ஜகத்தானது திரும்பித் திரும்பி ஏற்பட்டும் அழிந்தும் வருகின்றது. ஆகவே இது உமக்கு ஒரு விளையாட்டைத் தவிர வேறல்ல. இந்தப் பிரபஞ்சத்தை சிருஷ்டித்தே தீரவேண்டுமென்ற முயற்சியுடன் நீர் இதைச் செய்வதில்லை. இப்பொழுது நீர் சிருஷ்டியைச் செய்யாவிடின் வேறு நித்ய கர்மா உமக்கு என்ன ஏற்படும்? பற்றுதலற்று கர்மாக்களைச் செய்வதே நமக்குரிய கடமை; எதுபோலென்றால் ஒரு சுத்தமான கண்ணாடி எவ்விதம் அதன்

முன்னே தோன்றும் வஸ்துக்களை விருப்போ வெறுப்போ இன்றி பிரதிபிம்பித்துக் காட்டுகிறதோ அப்படியே, புத்திமான்களுக்குக் கர்மத் தியாகத்திலும், கர்மம் புரிவதிலும் ஒரே விதமான மனோ நோக்கந் தான் உண்டு. ஆகையால் நீங்கள் கர்மத்தை ஒழிப்பதைப் பற்றி யோசிக்கவேண்டியதில்லை. எப்பொழுதும் போல், நித்திரைக்கு ஒப்பான பற்றுதலற்ற மனதுடன் நித்திரையிலிருந்து விழித்தவனுக்குண்டான ஊக்கத்துடன் தங்கள் கர்மத்தை சம்பவத்திற்கேற்றவாறு தொடர்வீராக. இந்த ஐந்தவர்களின் சிருஷ்டியில் நீங்கள் சந்தோஷித்தால் உம்முடைய சிருஷ்டியில் அவர்களும் சந்தோஷிப்பார்கள். தாங்கள் இவர்களுடைய சிருஷ்டியை மனக்கண்ணால் காண முடியுமே தவிர புறக்கண்ணால் காண முடியாது. ஏனெனில் சிருஷ்டியென்பது ஊனக் கண்களால் நியமிக்கப்பட்டதல்ல, மனதால் செய்யப்பட்டது. ஆகையால் ஒருவன் மனதால் சிருஷ்டிக்கப்பட்டது அவனுடைய ஊனக் கண்களால்தான் உணரமுடியுமே தவிர பிறருடைய கண்களால் உணரமுடியாது. இந்தப் பத்து ஐந்தவ பிரம்மாக்களால் நிர்மிக்கப்பட்ட பத்து பிரபஞ்சங்களும் மனோதிடத்தால் நிலைபெற்றுவிட்டமையால் எவராலும் அழிக்கப்பட மாட்டாது. கர்மேந்திரியங்களால் செய்யப்படும் கிரியைகளே புறப் பொருள்களால் பாதிக்கப் படலாம். மனோ நிச்சயத்தால் செய்யப்பட்ட கிரியையை வேறொருவராலும் தடுக்கமுடியாது. வெகு காலம் எது ஒன்று திடமாக மனதினால் பாவிக்கப்பட்டு வருகிறதோ அதற்குச் சாபத்தினாலும் பாதகம் ஏற்படாது. சாபம் சரீரத்தைத்தான் பாதிக்கும்.

### ஜகத்தானது மனத்திலிருந்து உற்பத்தி என்பது

சூரியன்: இந்தப் பரந்த பிரம்மாண்டம் மனது என்பதிலிருந்து உதித்ததே. ஆகையால் இந்த மனதுதான் பிரதான புருஷன். மனதால் செய்யப் படுவதுதான் செயலே ஒழிய கேவலம் தேகத்தால் செய்யப்பட்டது, அதாவது மனதின் ஏவலின்றி, செயலாகாது. இந்த ஸ்தூல தேகமானது மனதால் தேடிக்கொள்ளப் பட்டதே. ஆகையால் தேகம் யாதொரு செயலுக்கும் கர்த்தா ஆகமுடியாது, ஏனெனில் அது ஒரு ஜடப் பொருள். மனதின் வேகத்தால் சங்கல்பிக்கப்பட்ட ஒரு விஷயத்தை இந்த தேகமாவது அல்லது வேறு ஒரு ஜடப் பொரு ளாவது தடைசெய்ய முடியாது. மனது வேறொரு மனதால்தான் அசைக்கப்படும். இவ் விஷயத்தை யொட்டி பூர்வீக விருத்தாந்த மொன்று உண்டு. அதைச் சற்று பொறுத்துக் கேட்பீராக.

### இந்திரத்யும்னன் - அகல்யா கதை

முன்னொரு காலத்தில் இந்திரத்யும்னன் என்ற அரசனொருவன் தன் மனைவியாகிய அகல்யா யென்பவ ளுடன் அரசாட்சி செய்து வருகையில், அதே தேசத்தில் வசித்து வந்த இந்திரனென்று நாமம் பூண்ட பிராமண விடன் ஒருவன், தன் துர் நடத்தைக ளாலும் முக அழகினாலும் வெகுப் பிரபலமாய் வழங்கப்பட்டு வந்தான். இந்தப் பெயரும் பிரதாபமும் அகல்யா ராணிக்கும் தெரிய வந்தது. புராணத்தில் கேள்விப்பட்ட இந்திரன் - அகல்யா விருத்தாந்தம் இவள் மனதில் வேரூன்றிய காரணத்தால், தாங்க ளிருவரும் கூட இவ்விதமான கள்ளச் சிநேக பாவ னைக் குரியவர்களாக எண்ணி, நாளடைவில் இந்திர

நாமத்தில் காதல் பெருகி, பிறகு சோகமு மடைந்தாள். நாளுக்குநாள் தன் கணவனுகிய அரசனை மறந்தாள். பிறகு தன் மனதைக் கொள்ளைகொண்ட இந்திர நாமத்தில் தன்னையும் மறந்தாள். இதையெல்லாம் கவனித்து வந்த ராணியின் தோழி ஒருத்தி தன் யஜமானியின் பரிதாப நிலையைக் கண்டு பரிதபித்து இவள் நேசித்து வந்த புருஷனை சந்திக்க ஏற்பாடு செய்தாள். இவ்விருவரும் சந்தித்த பிறகு சிநேகம் அதிகரித்து, கொஞ்ச காலத்தில் இரு மனதும் ஒன்றென ஆகிவிட்டது.

இவ் விஷயம் நாளுக்கு நாள் ஊரெல்லாம் பரவி ராஜனுக்கும் தெரியவந்தபடியால் ராஜ நீதிக் கிரமமாக இருவரும் தண்டிக்கப்படலானுர்கள். தண்டனையால் யாதும் பயன்படாமல், இன்னும் அதிகக் கொடூர தண்டனைகள் விதிக்கப்பட்டன. இவைகளால் கூட குற்றவாளிகள் பாதிக்கப்படவில்லை. தவிர இத் தண்டனைகளால் இவர்களின் காதல் இன்னும் அதிகரித்தது. அரசனுக்கு இனி என்ன செய்வ தென்று புலப்படாமல் தன் குலகுருவாகிய பரத முனி வரிடம் விஷயங்களைச் சொல்லி அவரைச் சபிக்கச் சொன்னுன். விவரத்தை அறிந்த முனிவர், ராஜ தர்மம் நிலைபெறும் பொருட்டு, அவ் விருவரையும் அழைத்து, நாசமாகும்படி சபித்தார். இதைக் கேட்ட இந்திரனென்ற பிராமணன், இவர்களின் மதியீனத்தைக் கேட்டு நகைத்து முனிவரை நோக்கிச் சொன்னுன்.

### மனதின் சொரூபம்

"பெரிய முனிவராக இருந்தும் இப்படி மதியை இழப்பதைப் பார்த்து வியப்படைகிறேன். நீங்கள்

விஷயத்தைத் தீர விசாரிக்கவில்லை போலும். எங்கள் இருவருக்குமுள்ள காதல் எவ்விதமென்று நீங்கள் அறியவில்லை. இந்தக் காதல் தேக சுகத்தைத் தேடியோ, அல்லது சிற்றின்பத்தைப் பற்றிய தாகவோ நினைப்பது தவறு. இந்தக் காதல் எக்காலத் தும் எந்த க்ஷணத்திலும் அழியாது; சாசுவதமா யுள்ளது. இரு மனதும் ஒன்றான நிலையில், அதாவது எனக்கு ஜகத்தெல்லாம் அகல்யாவாகவும் அவளுக்கு அதே ஜகத் இந்திரமயமாகவும் இருக்கையில் உங்கள் சாபம் எங்களை என்ன செய்யக்கூடும்? ஏன் வீணாக மதிகெட்டு உங்கள் தபோ மகிமையை இழக்கிறீர்கள்? உங்கள் சாபம் எங்கள் தேகத்தைத்தானே பாதிக்க லாம். எங்கள் மனதை என்ன செய்யக்கூடும்?" என்று சொல்லி முடித்தான்.

ஆனால் சாபத்தின் தீவிரத்தால், அதற்குப் பாத்தி ரமானவர்களிருவரின் உடலும் மரணகதி யடைந்தன. அதன்பிறகு இவ்விரு ஜீவன்களும் எக்காலத்திலும் ஜோடியாகவே புருஷனும் மனைவியாயும் ஜீவிதம் நடத்திவந்தார்கள்.

ஆகையால் மனோ நிச்சயம் தீர்க்கமாகவும் தளர்ச்சியின்றியு மிருந்தால் அதை யாராலும் எவ்வித மும் பழுது செய்யமுடியாது. எவ்வித சாபமும் அதைப் பாதிக்காது. இவ்விதமான மனோ திடத்தால் இந்த இந்து புத்திரர்கள் பிரம்ம பதவியை அடைந் தார்கள். ஆகையால் அவர்களின் சிருஷ்டிக்கு உம்மால் யாதொரு தீங்கும் செய்யமுடியாது. ஏனெனில் அது கேவலம் மனோ சிருஷ்டி. அவர்களின் சிருஷ்டியைப்பற்றி தாங்கள் கவனிப்பது தகுதியும் அன்று. யுக்தியும் அன்று. ஆகையால் தாங்கள்

தங்களுடைய நித்ய கர்மாவை அனுஷ்டித்து எப்பொழுதும் போல சிருஷ்டியைச் செய்துவருவதே நலம். ஆகாசமென்பது, எவ்வளவு சிருஷ்டிகள் ஏற்படினும் அவைகளெல்லாவற்றிற்கும் இடம் தரும். ஆகையால் எப்பொழுதும்போல் ஆத்மாவில் நோக்கத்தை வைத்தவாறு சிருஷ்டிக் கிரமத்தை நடத்துவீராக" என்று சொல்லிப்போனான்.

### ஜீவராசிகளும் இரண்டு சரீரங்களும்

**பிரம்மா:** இந்தப் பிரபஞ்சத்தில் ஊக்கத்தினாலும் விடாமுயற்சியாலும் மனிதர்களால் அடையப்படாதது ஒன்றுமே இல்லை. பிறகு எல்லாப் பொருள்களும் இரண்டு சரீரங்களை ஆசிரயித்திருக்கின்றன, அதாவது எப்பொழுதும் சஞ்சலமென்பதையே குணமாகக் கொண்ட மனஸ் என்பதையும், இரண்டாவதாக உருவம் அமைக்கப்பட்ட ஜட சரீரத்தையும். இந்த ஜட சரீரந்தான் சாபம் மந்திரங்களால் பாதிக்கப்பட்டு நாசமடையலாம். ஆனால் மனதென்பதோ திடமாய்த் தன் சக்தியை யுணர்ந்து இருக்குமாயின் யாதொன்றாலும் அசைக்கப்பட முடியாது. மனோதிடம், தைரியம் இல்லாதவர்கள்தான் சாபங்களுக்குப் பாத்திரமாவார்கள். அதுவும் மனதின் மூலமாக. இந்த மாம்ஸ தேகத்தால் தானாகவே எதையும் செய்ய முடியாது. மனதோ எதையெல்லாம் கோருகிறதோ அதையெல்லாம் அடைந்தேதீரும். ஒன்றை இச்சிப்பதும், பிறகு அதன்பொருட்டுப் பிரயத்தனப்படுவதும், கடைசியில் பலனையடைவதும் எல்லாம் மனதால் நடைபெற்று வருகிறதே தவிர தேகத்தால் இல்லை. மனதின் ஏவலைச் செய்யவேண்டிய ஒரு கருவியே தேகம். ஆகையால் இம் மூன்று லோகங்

களுக்கும் மூலமாயிருக்கும் மனதை சாபமும் மந்திரமும் என்ன செய்யக்கூடும்? மேற் சொல்லப்பட்ட கதைகளாலும், மேலும் மாண்டவ்யன் வெகு காலம் கழுவு முனையிலிருந்து தபசு செய்து வந்ததிலிருந்தும் இன்னொரு முனிவர் பாழுங் கிணற்றிலிருந்துகொண்டு தபஸ் செய்து தேவ பதவியை அடைந்ததிலிருந்தும் மனதின் சொரூபம் நன்கு விளங்கும்.

குயவன் பானையைச் செய்து முடித்ததும் மண்ணுகிய சொரூபம் பானையில் மறைவதுபோலும், தங்க ஆபரணங்களில் தங்கத்தின் சொரூபம் மறைவது போலும், மனதானது தன் பௌருஷத்தால் இச்சை கொண்டதை அடைந்து அந்தப் பலனில் தான் மறைகிறது. ஆகையால் பலன் என்பதும் மனதின் வேறுபாட்டைத் தவிர வேறில்லை.'' இவ்வாறு சொல்லிவிட்டு தன்னையும் அனுக்கிரகித்து பிரம்மா அந்தர்தியானமானுர் என்று வசிஷ்டர் சொல்லி முடித்தார்.

வசிஷ்டர்: பிரம்மதேவன் உபதேசத்திலிருந்து ஏற்படுவது, மனஸ் என்பது பிரம்மத்திலிருந்து தானுகவே ஒரு இயக்கத்தினுல் உண்டானதென்பது. மேலும் இந்த பிரம்மாவென்ற புருஷன் மனசுதான் என்றும் நான் அறிந்தேன். இந்த இயக்கமே மூல அவித்தை அல்லது மூல அக்ஞானம். இதனுல் பிறகு தன் கல்பனு சக்தியால் "நான்" – "நீ" யென்ற பேதங்களும் பிறகு ஜகத்தாகிய பல பொருள்களும் கற்பிக்கப்பட்டன. ஆகவே சிருஷ்டி ஆரம்பத்தில் மனஸாகிய ஒரே சரீரந்தான் ஏற்பட்டது. பிறகு இது தன் இச்சையால், பிரம்மாண்டத்தின் உற்பத்திக்குக் காரணமாகிய பஞ்ச பூதங்களையும் அவைகளின்

வேறுபாடாகிய இதர சக்திகள், ஆகவே பதி நான்கு மூல வஸ்துக்களையும் கொண்டு, சூரிய கிரணங்களாலும் வெப்பத்தினாலும் சிருஷ்டிக்கப் பட்ட உருவ அமைப்புக்களில் பிராணனென்று கூறப் படும் சக்தியாக உட்சென்று, இவ்விதம் இரண்டா வது சரீரத்தை அடைகின்றது. வாசனை என்பன இவ்விதம் ஏற்பட்டு, பிறகு சம்சாரமென்ற பிரவாகம் உலகத்தைத் திரட்டி நிற்கின்றது. ஆகவே இச்சா சொரூபங்களே இந்தப் பூதாதிக ளெல்லாம்.

முக்திஸ்திதி எல்லா ஜனங்களுக்கும் உண்டு பிரபஞ்ச வாழ்க்கையையும், சம்சாரத்தையும் கவனித் தால், மானிட வர்க்கங்கள் மூன்று முக்கியப் பிரிவுக ளாகப் பிரிக்கப்படும். அதாவது உத்தம, மத்திம, அதம மென்று. இந்த மூன்று பிரிவுகள் மறுபடியும் ஒவ் வொன்றும் மூன்று கிளைப் பிரிவுகளாக அதாவது சாத்வீக, ராஜஸ, தாமஸமென்று பிரிக்கப்படலாம். இந்தப் பிரிவுகளில் அடங்கப்பட்ட ஒவ்வொரு ஜனக் கூட்டங்களும் அவரவர்களின் குணம், செயல், சம்சார ஈடுபாடுகளையொத்து வெகு சீக்கிரமோ, அல்லது கொஞ்சம் தாமதித்தோ, அல்லது வெகு காலம் தாம தித்தோ சம்சாரத்திலிருந்து விடுபட்டு மோக்ஷத்தை அடைகிறார்கள். ஆகவே ஒவ்வொரு மனிதனும் காலக் கிரமத்தில் மோக்ஷத்தை அடைவது நிச்சயம். ஒருவர்க்கொருவரில் உள்ள வித்தியாசம் காலத்தில் தானே தவிர பதவியில் இல்லை.

அப்படி இருந்தும் இந்த கதியை அடையும் வரையில் சமசாரத்தில் சுழன்று திண்டாட வேண்டி யிருப்பதால் நம்முடைய யத்னங்களெல்லாம் இந்தப்

பதவியைக் கூடிய சீக்கிரம் அடையும்பொருட்டுச் செய்யப்பட வேண்டும். இந்தச் சம்சாரமாவது ஏற்கனவே சொன்னபடி கர்மாவினால் ஏற்பட்டது. கர்மாவோ கர்த்தாவைத் தவிர்த்து தனி சொரூபமாக இல்லை. பூவும் வாசனையும் போலவும், சமுத்திரமும் அலையும் போலவும், கர்த்தாவும், கர்மாவும் கூட ஏக காலம் உதித்து, விஸ்தரித்து, அழிந்து சம்சாரத் தோற்றம் நடைபெற்று வருகிறது.

ஆகையால், மனதின் இயக்கந்தான் கர்மாக்களுக்குக் காரணமாகின்றது. இக் கர்மாக்களே மறுபடியும் மனதிற்குச் சஞ்சல மேற்படக் காரணமாகின்றன. ஆகவே ஒன்றைத் தழுவி மற்றொன்று விஸ்தரிக்கின்றது. கர்மா நாசமடைந்தால் மனஸ் நாசமடையும். மனசு நாசமடைந்தால் கர்மாவுக்கு நாசம். மனசு சங்கல்ப சொரூபம்; சங்கல்பமென்பது அசைவின் சொரூபம்; இந்த அசைவினால் ஏற்படும் கிரியைகளெல்லாம் பாவனையின் பலன்களே.

ராமன்: முனி சிரேஷ்டரே! சங்கல்ப ரூபமாகிய மனஸ் ஜட சம்பந்தமான விஷயங்களில் எப்படி நிலை பெற்றது என்பதை எனக்கு விளக்கிச் சொல்வீராக.

மனது ஜடசம்பந்தத்தை அடைவதெப்படி?

வசிஷ்டர்: மனஸ் சஞ்சல சொரூபமென்று மேலே சொன்னோம். சஞ்சலம் ஏற்படக் காரணமென்ன? தான் யாரென்று அறியாமையே சஞ்சலத்திற்குக் காரணம். இந்தச் சந்தேகத்தினால் ஒவ்வொரு பொருளிலும் தானிருப்பதாகப் பாவித்து அதில் தன்னைக் கண்டு அறிலேயே சிக்கிக்கொள்கிறது. இப்படி எல்லாப் பொருள்களிலும் பற்றுதல் அடைந்து அவைகளாகவே மாறிவிடுகிறது. இதனால் ஜடத்

தன்மை வேறுன்றிவிட்டது. இப்படியின்றி தான் யாரென்ற வாஸ்தவ ஞானம் ஏற்பட்டு, சந்தேகமின்றி இருக்குமானல் மனதுக்கு சஞ்சலமேது? ஆதலால் தன் சுயநிலையாகிய சாந்தத்தில் அது நிலைத்து நிற்கும். ஆகையால் அக்ஞானமே சஞ்சலத்திற்குக் காரணம். இச்சஞ்சலங்களே கிரியை, கர்மா, வாசனை என்பவைகளாக ஏற்படுகின்றன. எவ்விதக் கிரியைகளும் மனதின் ஏவலின்றி ஏற்படமுடியாது.

ஆகவே சுத்த சம்வித்தே ஒரு களங்கத்தினல் மனமென்ற நிலைமைக்கு வந்தது. இந்த மனஸ் ஏதாவது ஒரு விஷயத்தில் ஒருமுகமாகி ஒரு நிச்சயத்தை அடையும்பொழுது புத்தியென்று சொல்லப்படுகிறது. மனஸுக்கு நானென்ற பாவம் ஏற்பட்டபொழுது அகங்காரமென்று சொல்லப்படும். ஒரு பாலனைப்போல் பல விஷயங்களில் சஞ்சலப்பட்டால் அப்பொழுது சித்தமென்று சொல்லப்படும். இவ்விதமே கர்மம், கற்பனை, ஸ்மிருதி, வாசனையென்று சமயத்திற்கேற்றபடி பல வேறு நாமங்களால் வழங்கி வருகிறது. இருப்பது சுத்த சம்வித் ஒன்றேயாகினும், இரண்டு என்ற பாவம்தான் பூரணமாக உணரப்படுகிறது. இதுதான் வித்தையென்று அக்ஞானத்தால் சொல்லப்படுகிறது.

**ராமன் :** உங்கள் உபதேசத்திலிருந்து மனஸ் ஜடமா. அல்லது அஜடமாவென்ற நிச்சயம் ஏற்படவில்லை. இதைத் தெளிவு படுத்தும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

### மனது ஜடமா அஜடமா ?

**வசிஷ்டர் :** அது இரண்டுமான தோற்றத்தையுடையது, ஆகையால் இரண்டிற்கும் நடுவிலுள்ள

தன்மை யென்றே சொல்லவேண்டும். இதுவோ அதுவோவென்ற நிச்சயம் தனக்கு ஏற்படாமல், ஆதலால் இங்குமங்கும் ஊஞ்சலாடித் திகைத்து நிற்பதைத்தான் மனமென்று சொல்லுகிறோம்.

இதரக் கொள்கைகளாகிய நியாய, வைசேஷிக, சாங்கிய ஜைமினி, புத்த சமயத்தவர்களால் இந்த மனஸின் சொரூபம் வெவ்வேறு விதமாகச் சொல்லப்படுகின்றது. ஆனால் இக் கொள்கைகள் யாவும் புத்திக்கோ, யுக்திக்கோ ஒப்பவில்லை. ஆகையால் இங்கே ஒரே ரூபமாக விஸ்தரித்துச் சொல்லப்பட்டதை மனதில் வாங்கிக்கொள்ளவும். சுருக்கிச் சொல்வோமாகில், மனஸ் ஜடமாக இருந்தால் சம்சாரத்திற்குக் காரணமாக இருக்கமுடியாது. அஜடமாக இருந்தாலும் அப்படியே. சேதனத் தன்மையுள்ள சிலந்திப் பூச்சி எப்படி ஜடமாகிய நூலை தன் தேகத்திலிருந்து வெளிப்படுத்தியும், பிறகு தன்னுள் இழுத்துக்கொள்ளவும் செய்கிறதோ, அதுபோலவே சுத்த சம்வித்தானது இப் பிரபஞ்சத்தை தன்னிடம் தோற்றவைக்கவும் மறைக்கவும் செய்கிறது. காண்கின்ற புருஷனும், மறைக்கின்ற புருஷனும் இம் மனமே.

ஆகவே இந்த மனஸ்தான், தேவர்கள், யக்ஷர்கள், அசுரர்கள், கின்னரர்கள், மனிதரென்றெல்லாம் விஸ்தரித்து, தன்னையே வெவ்வேறாகக் கருதி, அவ் விதமே கண்டு அனுபவித்து, பிறகு சஞ்சலித்து, துக்கித்து கடைசியாக விவேகம் தோன்றி ஆத்மாவை அடைகிறது. ஆத்மாதான் சத்யம், சாசுவதம், பரம சுகம். இதிலிருந்து தோன்றிய மனதோ சிருஷ்டிப்பதிலும் நாசமடைதலிலுமே சுழலுகின்றது.

ஆகையால் மனம் க்ஷிணித்தால் ஆத்மலாபம். இந்த மனஸைத்தான், சித்தாகாசம், சிதாகாசம், ஆகாசம். (பௌதிகம்) என்று மூவிதமாக ஞான மடையாதவர்களுக்குச் சொல்லப்படும். ஆனால் வாஸ்தவத்தில் ஞானிகள் அறிந்தபடி அது ஒரே சொரூப முடையது. இடம், காலங்களைத் தழுவி வெவ்வேறு பெயரால் அழைக்கப்படலாம்.

சம்சார ஈடுபாடு மனத்திற்கே

இந்த மனஸின் பிரதாபத்தை விளக்க ஒரு பூர்வ காலத்து விஷயத்தைச் சொல்லுகிறேன். இப்பூமியின் ஒரு பாகத்தில், ஒரு காலத்தில் ஆயிரம் கைகளை அடைந்த பிராமணன் ஒருவன் இருந்தான். நான் ஒரு தினம் யதேச்சையாக இக்காட்டின் வழிச் செல்லுகையில் இந்தப் பிராம்மணனைக் கண்டேன். கண்டது மிக ஆச்சரியப்படத்தக்கது, ஏனெனில் இவன் தன் ஆயிரம் கைகளிலும் கனத்த தடிகளைப்பற்றி தன்னைத் தானே பலமாக அடித்துக்கொண்டு, போதுமான அளவு அடி விழுந்தபிறகு அதன் துன்பத்தால் வெகு தூரம் ஓடிக் களைத்து கடைசியில் போய் ஒரு பாழுங் கிணற்றில் விழுந்தான். கொஞ்சம் சிரமம் தீர்ந்ததும் அங்கிருந்து கிளம்பி, மறுபடியும் அடித்துக்கொண்டு ஓடிக் களைத்து, கடைசியில் ஒரு முள் நிறைந்த புதரில் போய் விழுந்தான். திரும்பத் திரும்ப இவ்வாறு செய்து வந்ததன் காரணம் தெரியாமலும், மேலும் அவன் என்ன இன்பத்தை அடைகிறுனென்பதை அறியவும், ஓடிக்கொண்டிருந்த பிராமணனை நிறுத்தி அவன் அவ்வண்ணம் செய்வதன் நோக்கமென்ன வென்று கேட்டேன். கேட்டவுடன் சற்றுத் தயங்கி பிறகு கொஞ்சம் ஆலோசித்து, அதைத் தொடர்ந்து

துக்கித்து கடைசியாக முக மலர்ச்சியடைந்தான். அதன்பிறகு இவனுடைய பல கை கால்களெல்லாம் ஒவ்வொன்ருக மறைந்து உடல் சுருங்கி சிரசும் நாச மடைந்ததைக் கண்டேன். இவ்விதம் தேகத்திலிருந்து விடுபட்டவனாய் மறைந்தான்.

அவ்விடம் விட்டுச் சற்றுதூரம் சென்றபிறகு இன்னொரு பிராமணனைக் கண்டேன். அவனும் அதேமாதிரி அடித்துக்கொண்டும், ஓடிக்கொண்டும் ஒரு வாழைத் தோட்டத்தில் போய் விழுவதும், அவ் விடம் விட்டு எழுந்து பழையபடி அடித்துக்கொண்டு ஓடுவதுமாகச் செய்துவந்தான். இன்னும் சற்று தூரம் சென்றபிறகு இன்னுமொரு பிராமணன் அதே விதம் செய்வதையும், ஆனால் முள் காட்டை நாடிச் செல்வதைக் கண்டேன். மேலே போகப் போக அநேக ஜனங்கள் அவ்விதமே செய்வதைக் கண்டு வந்தேன். இவர்களை நெருங்கித் தாங்கள் செய்வதின் கருத்தென்னவென்று கேட்டபொழுது சிலர் என்னைக் கண்டு நகைத்தார்கள். சிலர் அசட்டை செய்தார்கள்; சிலர் நான் ஒன்றுமறியாதவனென்று எண்ணிப் பேசா மலும் போய்விட்டார்கள்.

ராமா! இந்தக் கதையின் தாத்பர்யத்தை நீ அறிவாயென்று நினைக்கிறேன். நான் கண்டதாகச் சொன்ன பிராமணர்களெல்லாம் அவர்களின் மனதே. இம் மனதே பல மனிதக் கூட்டங்களாகப் பல்வேறு விதமாக விஸ்தரித்து, சிலர் புத்திமான்களாகவும், சிலர் மகா மோகமடைந்தவர்களாகவும் வேறு சிலர் முழு முட்டாள்களாகவும் இருந்து, உலக நடைக்குக் காரணமாயிருந்து வருகிறார்கள். இம் மனதுதான்

உலகத்தில் அடையப்படும் இன்ப துன்பங்களையும் அனுபவித்து வருகிறது. ஜடமாகிய தேகம் என்ன அனுபவத்தை ருசிக்க முடியும். சில மனது, முள் காட்டில் விழுவதுபோல் துக்கத்தை நோக்கியே செல்லுகின்றது. விவேகம் போதிக்கப் படினும் ஒப்புவதில்லை. சில மனங்கள் சுகபோகங்களை நாடியே செல்லுகின்றன. விவேகத்தையுடைய மனங்கள் மிகவும் சொல்பம். இவைகள்தான் நல்ல போதனையால் லாபத்தை அடைகின்றன. ஆகையால் இந்தப் பிரபஞ்சத்தின் விஸ்தரிப்புக்குக் காரணம் மனமே. பிரபஞ்சம் நடைபெறுவதும் இந்த மனஸாலே. இதுதான் ஜீவனென்றும் சொல்லப் படும்.

மேற் சொல்லிய கதையில் உரைத்தபடி இன்ப துன்பங்களை மனது தானாகவே தேடிக்கொள்ளுகிறது. தான் சங்கல்பித்ததையே இன்னொரு சொரூபத்தில் பலனாக அடைகிறது. ஆகையால் ~~யார்~~ எவன் ஒருவன் கர்மமும் பலனும் ஒரே மனதின் வேறுபாடென்று அறிந்து அதற்கு மூலமாகிய சங்கல்பத்தை ஒழித்து சாந்தத்தையும் மௌனத்தையும் அடைகிறானோ அவன் ஆத்மாவை அறிவான். ஆகவே மனஸ்தான் உற்பத்தியானதாகவும் அழிந்ததாகவும், இருப்பதாக வும், இல்லாததாகவும் தோன்றுகிறது. சாசுவதமான தோற்றத்தை எப்பொழுது கொடுக்கவில்லையோ அப்பொழுது அது சத்யமில்லை. தவிர ஞானம், அக்ஞானம், சம்சாரம், விடுதலை யென்பனவெல்லாம் இம் மனதைப் பற்றிச் சொல்வதேயன்றி ஆத்மாவைப் பற்றியல்ல. இந்த மனமோ அசத்யம், ஆகையால் அதைத் தழுவியிருப்பதெல்லாமும் அசத்யமே. ஆத்மா

வைப்பற்றிப் பேசுங்கால் இவைகள் ஒன்றுமே ஒட்டாது. ஆகையால், பந்தம், மோக்ஷம் என்பவைகள், அக்ஞானிகளைக் குறித்துச் சொல்லும் வார்த்தைகளே ஒழிய வாஸ்தவமில்லை. ஆகையால் தான் பிரபஞ்சம் முற்றிலும் தோற்றமென்று நாம் சொல்லுகிறோம்.

## பாலன் கதை

வசிஷ்டர்: இந்தப் பிரபஞ்சம் எவ்வளவு அசத்ய மென்பதைத் தெரிவிக்க ஒரு சிறிய கதையுண்டு. ஒரு நாள் ஒரு சிறிய குழந்தை தன் தாயாரை வேடிக்கை யான கதையொன்றைச் சொல்லக்கேட்க, அவள் இக் கதையைச் சொன்னாள்.

"முன்னொரு காலத்தில் ஆகாயப் பிரதேசத்தில் உண்டாகாத பெரிய பட்டணம் ஒன்றிருந்தது. அப் பட்டணத்தில் மூன்று அழகிய ராஜகுமாரர்கள் இருந் தார்கள். அவர்களில் இரண்டுபேர் பிறக்கவேயில்லை, ஒருவன் கர்ப்பம் தரிக்கப்படவேயில்லை. இம் மூவரும் ஒருநாள் வெளியூர் சென்று திரவியம் தேடி வரலா மென்று உத்தேசித்துக் கிளம்பி ஒரு காட்டுப் பாதை யைத் தொடர்ந்து செல்லுகையில் தாகமெடுத்து நீரைத் தேட மூன்று ஓடைகளைக் கண்டார்கள். அவைகளில் இரண்டு வற்றியும், ஒன்றில் தண்ணீரே இல்லாமலுமிருந்தது. மூவரும் ஓடைகளில் இறங்கி ஸ்நானம் செய்து தண்ணீரும் அருந்தி பக்கத்தில் தென்பட்ட மூன்று மரங்களை அணுகி பழங்களைச் சாப்பிட எண்ணினார்கள். இந்த மூன்று மரங்களில் இரண்டு வளரவேயில்லை. ஒன்றுக்கு விதையே கிடையாது. இந்த மரங்கள்மேல் ஏறி வேண்டிவாறு பழங்களைத் தின்று திருப்தியடைந்தார்கள். பிறகு

அக்காட்டை விட்டுச் சென்று சிறிது நேரத்தில் ஏற்படாத நகரமொன்றை அடைந்து அங்கே சுவரே யில்லாத பெரிய சத்திரமொன்றைக் கண்டார்கள். சத்திரத்திலே மூன்று பாத்திரங்களிருந்தன. இரண்டு இருக்கவேயில்லை, ஒன்று ஓட்டை. இப் பாத்திரங் களில் நூறு படி அரிசியைச் சமைத்து, வாயில்லா விருந்தாளிகளுக்கு அன்னமிட்டு பாக்கியைத் தாங்கள் சாப்பிட்டு சுகமாக நித்திரை செய்தார்கள்.'' இக் கதையைக் கேட்ட குழந்தை மிகவும் சந்தோஷம் அடைந்தது. இப்படி உண்டாகாத ஜகத்தில்தான் எல்லாச் சம்பிரமும் நடைபெற்று வருகின்றன.

ஆகையால் இந்த மித்யையான ஜகத்தில் ஏன் இவ்வளவு பற்றுதல்! ஜகத் இருப்பது நம்முடைய மனதில் மாத்திரமே. இப்படி மனதால் கல்பிக்கப் பட்டதை ஏன் மனதாலேயே அழிக்கக்கூடாது? இந்த ஜகத்திலிருக்கும் பொருள்களனைத்தும் அல்லது ஜகத் முழுதுமே நாசமடைந்தாலும் என்ன நஷ்டம்? யாருக்கு நஷ்டம்? இதனால் ஆத்மாவுக்கு ஒரு குறையும் ஏற்படு வதில்லை. புஷ்பம் வாடி கசக்கப்பட்டபோதிலும் அதி லுள்ள வாசனைக்கு என்ன நஷ்டம். அது காற்றில் கலந்துவிடுகிறது. பானை உடைந்துபோனால் அதிலுள்ள ஆகாசத்திற்கு என்ன நஷ்டம்? அது மகா ஆகாசத்தில் கலந்துவிடுகிறது. அதுபோலவேதான் நம் தேகம் நாச மானாலும். வண்டானது ஒரு பூவை இழந்தால் இன் னொரு பூவை நாடிச் செல்லுகிறது. நமக்கும் ஒரு தேகம் போனால் இன்னொரு தேகம் கிடைக்கிறது. மரணமென்பது தேச கால வித்தியாசத்தில் ஏற்படும் ஒரு மரபே. இந்த தேகத்தை ஒரு கருவியாக உபயோ கித்து வந்த மனஸ் ஆகாயத்தில் கலந்துநின்று, திரட்டி

வைத்த வாசனைகளின் பலனுக, மறுபடியும் ஒரு தேகத்தைத் தேடிக்கொள்ளுகிறது. ஆகையால் மரணத்தைப்பற்றி வருந்துவது அவிவேகமே.

இப்படி இந்த மோசங்களெல்லாம் மனஸால் உண்டாவதால் அது நாசமடைய வேண்டிய உபாயங்களை, விசாரணை செய்தலும் அவசியம். இவ்விதப் பிரயத்தினங்கள் மனதாலேதான் செய்யவேண்டும். மனோ நாசம் ஆத்ம லாபம்.

### மனதும் செயல்களும்

மனஸானது பிரம்மத்தின் சொரூபமாக இருந்தும் அதற்கு இந்த சம்சாரமென்னும் பந்தம் ஏற்படுவது, தன்னை ஜகத்தாகிய தோற்றத்தில் விஸ்தரித்துக் கொள்வதாலேயே. அதாவது தன்னையே வேருக பாவித்து அதுவே தானுக மாறி நிற்கும் தன்மையை யுடையது. தனக்கு இஷ்டமிருந்தால் வேண்டிய அளவு தன்னை விஸ்தரித்துக்கொள்ளும், இல்லாவிட்டால் சுருக்கிக் கொள்ளும். மனது எந்த விஷயத்தில் ஈடுபட்டுக் கொள்ளுகிறதோ அதைத் தொடர்ந்து இந்திரியங்கள் ஊழியர்களைப்போல் வேலை செய்கின்றன. மனதின் ஊக்கத்தையொத்துத்தான் இந்திரியங்களும் பரபரப்பாகவோ தாமதமாகவோ வேலை செய்கின்றன. வெறும் இந்திரியங்களால் செய்யப்படும் செயல்கள் கர்மங்கள் ஆகமாட்டா. மனதால் ஏவப்பட்டனவே கர்மங்களாகும். அடையப்படும் பலன்களும் மனதின் ஊக்கத்தையும் முயற்சியையும் அனுசரித்துத்தான் கிடைக்கும். ஆகையால் எல்லா சங்கல்பங்கள், கிரியைகள், கர்மாக்கள். பலன்கள் அனைத்தும் மனதை அனுசரித்தே நடைபெறுகின்றன. ஆகையால் பிரபஞ்சத்தின் போக்கு மனதின் போக்கேயாகும்.

கால தேச உணர்ச்சிகள் மனோநிலையைத் தழுவித் தான் ஏற்படுகின்றன. இவ்வுணர்ச்சிகளை அனுபவிப்பதும், அங்கீகரிப்பதும் மனதே. மனதால் ஒரு சிறிய பிரதேசத்தை எல்லையற்றதாகவும், அல்லது ஒரு அகண்டப் பிரதேசத்தைக் கையளவாகவும் சங்கல்பித்துக்கொள்ள முடியும். ஒரு நிமிஷத்தை நீண்டகாலமாகவும் அல்லது நீண்ட காலத்தை ஒரு நிமிஷமாகவும் அனுபவிக்கும் சக்தியையுடையது மனது. இந்திரியங்களோடு கூடி பிரபஞ்ச விஷயங்களில் மனது ஈடுபட்டிருக்கையில் காலப் பிரமாணம் ஒருவிதம். இது இந்திரியங்களின் நுட்பத்தையும் சாமர்த்தியத்தையும் அவைகளுக்கு இயற்கையில் ஏற்பட்ட கட்டுப்பாடுகளையும் தழுவி, சூரிய சந்திரர்கள் பூமி இவைகளின் சம்பந்தத்தால் நிர்ணயக்கப்பட்டதாக இருக்கிறது. இவ்வளவு கட்டுப்பாடுகளையும் கூடிய காலப்பிரமாணத்தையும் மனது தன் இஷ்டப்படிதான் உணருகிறது. எப்படியெனில் ஒரே கால அளவை சந்தோஷ நிலையில் வெகு சொற்பமாகவும், விசனத்தில் வெகு நீண்டதாகவும் உணருவது எல்லோரும் அறிந்ததே.

பிறகு இந்த இந்திரியங்களின் சுமையை நீக்கிக்கொண்டபொழுது, அதாவது ஒரு மூர்ச்சையிலாவது, நித்திரையிலாவது, அல்லது மரணத்திலாவது காலப் பிரமாணம் மனதின் இஷ்டப்படி நேரிடுகிறது. அப்பொழுது அளவென்பதே கிடையாது. அதன் போக்கே அதன் அளவு. மனோவேகம் என்று வழங்குவதும் இந்த சந்தர்ப்பங்களையொத்து ஏற்பட்ட வசனம். ஒரு கல்ப காலத்து அனுபவம் ஒரு நொடிப்பொழுதில் ஆவது ஆச்சரியமில்லை. ஆகையால் காலம் தேசம் இரண்டும் வியவகாரத்தின்

பொருட்டு ஏற்பட்ட கற்பனைகளாகும். மனதால் இவைகள் நிர்ணயக்கப்பட்டு அதனாலேயே வேண்டிய பொழுது உதறித் தள்ளப்படுகிறது. இந்த கால தேசங்களின் சொரூபத்தை விளக்கும் புராதன கதையொன்றைச் சொல்லுகிறேன் கேள்.

### லவண உபாக்யானம்

வசிஷ்டர்: முன்னொரு காலத்தில், இப் பூகோளத்தின் ஒரு பாகத்தில் உத்தரபாண்டவம் என்று ஒரு பிரதேசமிருந்தது. அந்த தேசம் இந்திர லோகத்தை இகழும்படி நீர்வளம், நிலவளம், குடிவளம் பொருந்தியும், மாட மாளிகை கூட கோபுரங்களால் சிங்காரிக்கப்பட்ட அழகிய பட்டணங்கள் கூடியுமிருந்தது. மிகப் பிரசித்திபெற்றிருந்த இந்தப் பூபாகம், குணத்திலும், அழகிலும், பராக்கிரமத்திலும் நிகரற்றவனாகக் கருதப்பட்ட, அரிச்சந்திரன் குலத்தில் உதித்த லவணனென்ற அரசனால் செங்கோல் செலுத்தப்பட்டு வந்தது. அரசன் ஒருநாள் தன் சபா மண்டபத்தில் மந்திரிமார்கள், காரியதரிசிகள், சபையோர்கள் இவர்களுடன் கூடி ராஜ்ய காரியங்களை விசாரித்தபிறகு, இதிகாச புராணங்கள் படிப்பதைக் கேட்டவாறு சிம்மாசனத்தில் வீற்றிருந்தான். அந்தத் தருணத்தில் ஒரு இந்திரஜால வித்தைக்காரன் மிக அமைதியுடனும் கம்பீரத்துடனும் சபை முன்வந்து அரசனை நோக்கிச் சில வார்த்தைகளைச் சொன்னான். தான் ஒரு விசித்திரமான ஜாலவித்தை காண்பிப்பதாகவும். அதற்குப் பிரதியாய் தான் யாதும் அபேக்ஷிப்பதில்லை யென்றும் சொல்லி அரசனுடைய அனுமதியும் பெற்று அவனைச் சற்று உற்றுநோக்கிப் பார்த்தான். அரசனும் இமை

கொட்டாமல் சற்று கவனித்தபிறகு, தன்னுடைய சிற்றரசன் ஒருவனுடைய உயர்தரக் குதிரையைச் சபையில் கண்டதாக உணர்ந்து, பிறகு ஒன்றும் அறியாதவனாகத் தன் ஆசனத்தில் சாய்ந்தான். இரண்டு முகூர்த்தகாலம் கழித்து கண்ணை விழித்துக் கொண்டு, ஒரு நொடிப்பொழுது தன் இருப்பிடம் அறியாமல் பிறகு புத்தி சற்று தெளிவுபட்டதும் சபையோர்களை ஞாபகம் செய்துகொண்டு அவர்களை நோக்கித் தனக்கு சற்றுமுன் ஏற்பட்ட அனுபவத்தை சொன்னான்.

லவணன்: "நான் சவாரி செய்யும்பொருட்டு அனுப்பப்பட்டதாகக் கருதிய குதிரைமேல் அமர்ந்ததும், அது வாயுவேகம் மனோவேகமாக ஆகாயத்தில் பறந்து, பல தேசங்களைக் கடந்து; சூரியோதயத்தில் நம் தேசத்திற்கு ஒப்பாகும்படியான ஒரு திவ்ய தேசபாகம் அடைந்தது. கொஞ்ச நேரத்தில் இதன் எல்லையையும் கடக்க. ஒரு மரத்தின் கிளை எதிரில் படர்ந்திருப்பதைப் பார்த்து நான் அதைப் பிடித்துக் கொண்டு காலைத் தூக்கியதும் அடியிலிருந்த குதிரை மாயமாய்ப் பறந்துவிட்டது. பிறகு கால் நடையாய் வெகுதூரம் நடந்து சாயந்திர வேளைக்கு ஒரு சிறிய கிராமத்தைச் சேர்ந்த எல்லையை அடைந்தேன். பசியால் வருந்தி சற்று இளைப்பாறுகையில், ஆகாரத்தை தலையில் சுமந்துபோகும் ஒரு யௌவன ஸ்திரீயைக் கண்டேன். பசியின் கொடுமை பொறுக்க முடியாமல், அவளிடம் கொஞ்சம் அன்னம் யாசிக்கலாமென்று எழுந்து அவளைப் பின்தொடர்ந்து வேண்டிக் கொண்டேன். சாப்பாடு தன் தகப்பனுக்கு எடுத்துச் செல்லுவதாகவும், காலையிலிருந்து வேலை செய்து

வருவதால் அவன் மிகப் பசியுடன் காத்திருப்பான். ஆகையால் அவன் உணவை வேறொருவருக்கும் கொடுக்க முடியாதென்றும் சொல்லிவிட்டாள். மேலும் தான் சண்டாள குலத்தைச் சேர்ந்தவளாதலால் என்னைப்போல் உயர்குலத்தவர்களுக்கு அந்த அன்னம் தகாதென்றும் சொன்னாள். பசியால் வருந்துவோருக்கு அது பாதகமில்லையென்று சொல்லியும் கேட்கவில்லை. மானத்தை மதியாமல் மீண்டும் மீண்டும் கேட்டதின்மேல் அவள் ஒரு முடிவுக்கு வந்தாள். அதாவது நான் அவள் ஜாதிமுறைப்படி அவளை மணந்துகொண்டால் அன்னத்தில் பாதி கொடுப்பதாகச் சொன்னாள். கணவனுக்காக இப்படிச் செய்வது குற்றமில்லையென்பது அவள் கொள்கை. ராஜ குலத்திலுதித்தும், பசியின் கொடுமை பொறுக்க முடியாமல், இச் சண்டாளியை மணம் செய்துகொள்ள சம்மதித்தேன். இவ்வாக்களித்தபிறகு பாதி அன்னத்தைக் கொடுத்தாள். சாப்பிட்டதும் அவளுடன் சென்று தகப்பனைக் கண்டு, பிறகு எல்லோருமாக அந்தி நேரத்தில் பறைச்சேரியை அடைந்தோம்.

சிலதினம் கழிந்ததும், வாக்களித்தபடி அவளுடைய ஜாதி முறைப்படி இச் சண்டாளியை மணம் செய்துகொண்டேன். சில காலத்தில் நானும் சரியான சண்டாளனானேன். பூர்வ நடத்தையெல்லாம் முற்றிலும் மறக்கப்பட்டன. காலக்கிரமத்தில் ஒன்றன்பின் ஒன்றாக நான்கு குழந்தைகள் பிறந்து, இவைகள் வளரவும் நான் வயதில் முதிரவும் காலம் சென்ற வண்ணம் இருந்தது. சண்டாள சம்சாரத்தில் முற்றிலும் பீடிக்கப்பட்டேன். அக்காலங்களில் நான் யாரென்று நானே அறியேன்.

இப்படியாக முதுமைப் பருவத்தை அடைந்து நான் காலம் கழித்துவருகையில் மகா கொடுமையான க்ஷாமம் வந்து, ஜனங்கள் கூட்டங்கூட்டமாக வறுமையினால் உயிர் துறந்தும், தேசமெல்லாம் வறண்டு புல் பூண்டு தண்ணீரும் இன்றி ஒரு பாலைவனத்திற்கு ஈடாயிற்று. ஆகையால் என் மனைவி மக்கள் சகிதமாய் அண்டை தேசத்தை நாடிச்சென்றேன். போகும் வழியில் களைப்பால் எல்லோரும் ஒரு மரத்தடியில் படுத்திருக்கையில் இளையமகன் பசியினால் மிக வருந்தி சாப்பிட ஏதாவது மாமிசம் வேண்டுமென்றான். எங்கு தேடியும் இது அகப்படவில்லை. குழந்தை உயிர் துறப்பானே என்று விசனித்திருக்கையில் ஒரு எண்ணம் உதித்தது. அதாவது நான் இறந்தால் மனைவி மக்களாவது என் மாமிசத்தை உண்டு உயிர் பிழைக்கலாமே யென்று. இதைப் பூர்த்திசெய்யும் பொருட்டு சில குப்பை செத்தைகளைச் சேகரித்து தீ மூட்டி அதில் பிரவேசிக்க காலைத் தூக்கினதும் நான் இங்கே என் கண்ணை விழித்துக் கொண்டேன்.

மேல் சொல்லிய எழுபது வருஷத்திய அனுபவங்கள் இந்த இந்திரஜால வித்தையால், சொற்ப நேரத்தில் ஏற்பட்டன" என்று சொல்லி லவணன் முடித்தான்.

வசிஷ்டர்: அவன் சொல்லி முடிப்பதற்குள் எதிரிலிருந்த ஜால வித்தைக்காரனும் மாயமாய் மறைந்துவிட்டான். சபையோர்கள் மிகவும் வியப்படைந்தார்கள். ஆனால் இது கேவல ஜாலவித்தையன்று என்பதை அவர்கள் உணர்ந்தனர். கடவுளே அரசனுக்குச் சம்சார மாயையை விளக்கும்பொருட்டு

பிரத்தியக்ஷமாக வந்து ஜாலமாகக் காட்டிச் சென்றார்; நானும் அந்த சபையில் அன்று இருந்தபடியால், எல்லாம் நானே காணலானேன்.

### மனதே பிரபஞ்சம்

ஆகவே பிரபஞ்சத்தில் நடைபெறுவதெல்லாம் மனதை அனுசரித்தே. மனதுதான் பிரபஞ்சமாகவும், அதில் நடைபெறும் விஷயங்களாகவும் இவ் விஷயங்களால் நேரும் சுகதுக்கங்களாகவும் கடைசியில் இவைகளையெல்லாம் துறந்து விடுதலையடைவதும். ஜடமாகிய தேகம் மனதின் கருவியாயிருந்து அதன் ஏவலைச் செய்வதைத் தவிர வேறு என்ன செய்யக்கூடும்? தானாக எதைச் செய்வதற்கும் சக்தியற்றது. மனது இதில் வாசம் செய்திருக்கும் வரையில் அது தேகமென்றும்' மனது அதை விட்டகன்றதும் சவமென்றுந்தான் கருதப்படுகிறது. மனதானது கவனமற்றிருப்பின் எவ்விஷயமோ, பதார்த்தமோ உணரப்படுவதில்லை. ஆகையால் தேகத்தின் அசைவுகள் செயல் ஆகமாட்டா. மனதால் தூண்டப்பட்டு அதன் ஏவலை நிறைவேற்றும்படியான கிரியைகளே செயல் எனப்படும். இவ்விதச் செயல்களுக்குத்தான் பலன் உண்டாவதும். ஆகையால் உலகத்தில் நடைபெறும் செயல்கள் எல்லாம் மனதின் விளையாட்டுகளே. மேலும், பிரபஞ்சத்தில் வஸ்துக்களென்று கருதப்படுபவைகளெல்லாம் சுதந்தரமாக யாதொரு உபயோகத்தையும் அடைந்திருக்கவில்லை. மனதின் இச்சையைத் தழுவியே இவைகளின் உபயோகங்களும். ஆகையால் இப்பதார்த்தங்களெல்லாம் மனதால் வியாபிக்கப்பட்டிருக்கின்றன. வாஸ்தவமாக ஆகாயம், காற்று, ஜலம்,

பூமி எல்லாமுமே மனதால் சிருஷ்டிக்கப் பட்டவை களே. இவைகளின் இருப்பை மனதின்றி யார் உணரு வது? அல்லது அவைகளை யார் அறிவது? தவிர வாழ்க் கையில் ஏற்படும் சுக துக்கங்களும் இவ்விதமே. இவை களெல்லாம் அனுபவிக்கப்படுவது மனதால். ஆனல், இந்த சுக துக்கங்கள் பதார்த்தங்களில்லை. ஏனெனில் இவைகளெல்லாம் ஜடப்பொருள்கள். ஆகையால் சுகம் - துக்கமிரண்டும் மனதால்தான் சங்கல்பித்துக் கொள்ளப்பட்டவைகள். சுகத்தைத் துக்கமாகவும் துக்கத்தைச் சுகமாகவும் அனுபவிக்க மனதால் முடியும். ஆகையால் பிரபஞ்சமென்பதும் வாழ்க்கை யென்பதும் மனதின் சஞ்சலமாகிய சங்கல்பக் கூட்டங் களே. இச் சங்கல்பங்களுக்குக் காரணமான பேதங்கள் எல்லாம் ஒரு நொடிப்பொழுதில் மாறி நிற்கலாம், மன தானது ஒருமுகப்பட்டால். ஆகையால் நம் பிரயத் தினங்கள் முழுமையும் மனதை வெளி நோக்கிச் செல்லாமலிருக்கும்படி செய்தல் வேண்டும். இதை வெகு ஊக்கத்துடனும், இடைவிடாமலும் பயின்று வந்தால் மனதிற் கேற்பட்ட பற்றுதல், வாசனை யெல்லாம் அறுபட்டு, சம்சாரத்திலிருந்து விடுதலை ஏற்படும்.

### மோக்ஷோபாயம்

ஆகவே இந்த மோக்ஷோபாயமென்பது மனதை மனதாலேயே அடக்கிப் பிறகு அதை நாசமடையச் செய்வது. இதை அப்பியசிப்பதும் வெகு எளிதே. ஆனல் அதற்கு ஓர் முறையுண்டு. அதாவது எது நமக்கு அதிக சந்தோஷத்தையோ விருப்பத்தையோ கொடுக் கின்றதோ அதையே முதலில் தியாகம் செய்வது, அல்லது அதில் விருப்பமின்றிச் செய்துகொள்வது.

இவ்விதம் ஒன்ருென்ருகப் பல விஷயங்களிலும், பதார்த்தங்களிலும் ஏற்படும் இச்சையோ அல்லது மனோ வேறுபாடுகளோ உண்டாகாமல் அப்யசித்து வந்தால், மனதிற்கு முதலில் சஞ்சலம் குறையும், மேலும் அது நம் அதீனத்திற்கு வரும். அப்பொழுது நம் இஷ்டம்போல் ஆசைகளையும் வாசனைகளையும் ஒழிப்பது சுலபமாகும். இதற்குப் பிறகும் கூட ஊக்கம் குறையாமல் இம்மார்க்கத்தையே கைப்பற்றி வந்தால், மனது வெகு சீக்கிரத்தில் நாசமடையும். மனம் நாசமாளுல் பிரபஞ்சத்தில் சம பார்வை ஏற்படும். அதனுல் துவைத பாவமும் நீங்கும். இதுவே ஜீவன் முக்த ஸ்திதியாகும். இந்த ஸ்திதியிலிருக்கும் பொழுதும் அதைவிட்டு நழுவாமலிருக்க முயற்சியுடன் இருத்தல் வேண்டும்.

மேற்சொன்ன பிரயத்னத்தின் பலன் இவ்வளவு மேன்மையானதும் பரம சாந்தமுமான பதவியாக இருக்க, அதை எல்லோரும் ஏன் அனுசரித்து வரக் கூடாது? இப்படிச் செய்துவராதவர்கள் மூடர்களன்ருே? அவர்களுக்கு நற்கதி எவ்விதம் சம்பவிக்கும்?

சற்று நித்ய வியவகாரங்களைக் கவனிக்கையில், வெகுவாய் ஜனங்கள் கஷ்டமோ, மனக் கவலையோ நேர்ந்த காலத்திலும், அல்லது பந்துக்களில் யாராவது இறந்தாலும் அதிகமாக துக்கித்து மனத்தளர்ச்சியடைவதை நாம் அறிவோம். இதைச் சற்று விசாரித்துப் பார்த்தால், கவலையால் நிவர்த்தியாவது ஒன்றுமில்லை யென்று புலப்படும். இறந்தவர்கள் திரும்பித் திரும்பி இப்பிரபஞ்ச வாழ்வில் ஈடுபட்டுத்தான் தீரவேண்டும். ஆகையால் இவர்களை நினைத்துப்

புலம்புவது அக்ஞானம். இவ்விதம் ஒவ்வொரு விஷயத்தையும் ஆராய்ச்சி செய்து மனோ வேறுபாடுகளைத் தள்ளி சாந்தி அடைவதை அப்யசித்து வந்தால் சம்சாரம் இன்பமாய் நடைபெற்று வரும்.

இந்த மனஸின் சொரூபத்தையும் அது உண்டான கிரமத்தையும் அறிந்தால், இந்த மோக்ஷோபாயத்தை அனுசரிப்பது எளிதாகும். இது ஏற்பட்ட கிரமம் முன்னமே சொல்லப்பட்டது. அதாவது நிர்மலமான பிரம்மத்தில் அலைபோல் ஏற்பட்ட அசைவே சித்தென்பது. அசைவுதான் இதன் சொரூபம், இந்த அசைவின் காரணத்தாலேதான் உற்பத்தி உண்டாகின்றது. இந்த அசைவு ஒவ்வொரு ஜடாஜடப் பொருளிலும் கிரமமாகவும், ஒழுக்கத்துடனும் ஒரு கணக்குக்கு அடங்கியும் ஏற்பட்டுள்ளது. ஆகையால் இவ் வசைவின்றி பிரபஞ்சத்தில் ஒரு வஸ்துவுமில்லை. அப்படியின்றி நம் புத்திக்கும் புலன்பட முடியாது. ஆகவே இந்தப் பிரபஞ்சம் அசைவினால் வெளித் தோன்றிற்று.

இந்த சித்தே ஜீவ ஜந்துக்களில் மனஸாகத் தோன்றி மானிட வர்க்கத்தில் மிகப் பிரபலமாகி, அதுவே மானிட வாழ்க்கையாகவும் நிற்கின்றது. இம் மனஸின் சொரூபம் சஞ்சலம், ஏனெனின் இது சித்தின் வர்க்கத்தைச் சேர்ந்ததால். ஆனால் இதற்கு ஒரு கணக்கோ, கிரமமோ, ஒழுக்கமோ கிடையாது. இதுவே மனதுக்கும் சித்துக்குமுள்ள வித்யாசம். யாரிடம் மனம் அதிகச் சஞ்சலமாயிருக்கின்றதோ, அவர்களே வாழ்விலும் அதிக் இன்ப துன்பங்களை அனுபவிக்கிறவர்கள். இதர ஜந்துக்களுக்கும் மானிட

வர்க்கத்திற்கும் உள்ள வித்தியாசமும் மனதால் ஏற்பட்டதே.

ஆகையால் இதை அறிந்து இந்த மனதை ஒரு சீர்திருத்தம் செய்யவேண்டும், எப்படியென்றால் யதேச்சையாக உதிக்கும் எண்ணங்களை ஒவ்வொன்றாகக் கவனித்து, ஆராய்ந்து, இவைகள் தங்களிஷ்டப் படியின்றி ஒரு முறையாக ஏற்படும்படி அப்யசித்து வரவேண்டும். இப்படிச் செய்து வருவதால் மனது ஒரு கிரமமாக வேலைசெய்யும். நன்கு அப்யசித்த பிறகு மேலும் விஷயங்களை ஆராய்ந்து அவைகளை ஒவ்வொன்றாகத் தியாகம் செய்யவேண்டும். செய்வது கடினமாயிருப்பினும் மனதை திடப்படுத்திக் கொண்டு அப்யாசத்தை இடைவிடாமல் செய்து வரவேண்டும். ஒரு அரசனை சிக்ஷிக்க எப்படி வேறொரு அரசன் தேவையோ அப்படி எல்லாவற்றிற்கும் காரணமாயிருக்கும் மனதை யடக்க மிக திடமான புத்தியை உபயோகித்தல் வேண்டும். இப்படிச் செய்துவந்தால் மனமென்பது கொஞ்சம் கொஞ்சமாக மெலிந்து எண்ணங்களும் தோன்றாமல் இருக்கும். இச்சைகளின்றி எண்ணங்கள் ஏது? எண்ணங்கள் உதிக்காமலிருக்கையில் மனமென்பது ஏது? வாஸ்தவத்தில் அது எப்பொழுதும் இருக்கவில்லை; ஆகையால் இப்பவும் இல்லை.

ஆகவே முக்தியை அடைய இந்த மார்க்கத்தைத் தவிர வேறு மார்க்கமே கிடையாது. இந்த முறையானது எல்லாச் சாஸ்திரங்களை ஆராய்ச்சி செய்தும் என்னுடைய சொந்த அனுபவத்தாலும் அறியப்பட்டது, அதாவது மனதை மனதாலே தான் வெல்லவேண்டுமென்பது. மனம் வெல்லப்

பட்டால் மூவுலகமும் வெல்லப்படும். மனம் வெல்லப் பட்டு அது நாச மடைந்தால் ஆத்மா பிரத்யக்ஷமாகக் காணப்படும். அதாவது மனமென்று வழங்கிவந்த இல்லாமை, இருக்கையாகிய ஆத்மாவாக நிற்கும். சாதாரணமாக இத்த மனம்தான் ஜடப்பொருளாகவும் ஆத்மாவாகவும், ~~ஆக~~ இரட்டை சொரூபமான காட்சியை அளித்துவருகின்றது. ஜட சம்பந்தமற்று தனி~~ப்படை~~யாக அது இருக்குமாயின், அப்பொழுது அது மனமன்று, ஆத்மாவே.

### வாசனை அக்ஞானம்

இந்த ஆத்மாவை அடையத் தடையாயிருப்பது வாசனையென்ற அக்ஞானமே. இது ஒரு பொருளல்ல. இதற்கொரு உருவமுமில்லை. அதை எவ்விதமும் உணர இயலவில்லை. ஆயினும் பிரபஞ்சத்தின் போக்குக்கு இதுவே மூல காரணம். இதன் சொரூபத்தை மனிதர்களின் செயல்களினுல்தான் அறிய வேண்டும். இதன் தூண்டுதலின்றி பிரபஞ்சத்தில் ஒரு செயலும் நடைபெறுவதில்லை. இன்றைக்கு நடப்பது நேற்றைய வாசனையால், நாளை நடக்கப்போவது இன்றைய வாசனையால். இவ்விதம் இது உலகம் முழுவதையும் பற்றி, அதில் ஊடுருவி நிற்பதின் காரணம் யாது? அக்ஞானமே. ஞானத்தின் ஒளி வீசினுல் சூரியனைக் கண்ட பனிபோல் இது மறைந்துவிடும். இருளாகிய அக்ஞானத்திலேயே அது வளர்ந்தும் புஷ்டியாகிக்கொண்டும் இருக்கும். ஆனதுபற்றி நாம் யோசிக்கவேண்டியது, ஞானம் உதிக்கும்வரையில் நாம் என்ன செய்யவேண்டும் ~~டியது~~ என்பதே. ஆத்ம நோக்கமிருந்தால் வாசனையைப்பற்றி கவனிக்கத் தேவையில்லை. ஏனெனில் நம் செயல்களெல்லாம்

வாசனையால் ஏற்படுவதால், "நான் செய்கிறேன்" என்னும் எண்ணத்திற்கு அப்பொழுது இடமில்லை. பிறகு வாசனையே செயல்களை நடத்துகிறது. இப்படி விஷயங்களில் கர்த்தாவென்ற எண்ணம் அழிந்தால் வாசனைகளும் கூடவே அழிவடையும். அப்பொழுது பழைய வாசனைகளும், சக்தி குறைந்து, செயல்களில் நோக்கமற்றவனைப் பாதிக்க முடியாமல், அடங்கிப் போகும். ஆகையால் வாசனையை ஒழித்துக் கொள்ளும் மார்க்கம் அகங்காரம் என்ற அக்ஞானத்தை நீக்கிக்கொள்வதாகும்.

வாசனையென்னும் அக்ஞானம் ஜடமாகிய தேகத்தை ஒட்டியோ அனுசரித்தோ இல்லை. அது மனதைத் தழுவி நிற்கிறது. அதாவது அக்ஞானம் மனோமாத்ரமே. இந்த அக்ஞானம், பிரபஞ்சத்தின் உற்பத்தி எல்லாம் க்ஷணமாத்ரமான சங்கல்பத்தால் ஏற்பட்டவைகள். ஒரு தடவை ஏதாவது சங்கல்பிக்கப்பட்டால் பிறகு, திரும்பித் திரும்பி அதே ஸ்மரணை மனதிலுண்டாகி, ரூடியாகி, கனத்துவத்தையும் அடைகிறது. இதேமாதிரி ஒவ்வொரு விஷயமும் பொருளும் மனதால் கற்பிக்கப்பட்டும் ஆதரவுபட்டும் இருக்கின்றது. இவைகளே மனதின் பந்தத்திற்குக் காரணம். ஆகவே அக்ஞானம் சங்கல்பத்தால் ஏற்பட்டதால் சங்கல்பத்தாலேயேதான் அது அழிவையும் அடையவேண்டும். "நான்," "நீ" "பிரபஞ்சம்" என்பவைகள் நம்மால் பாவனை செய்யப்பட்டதின் காரணமாக சத்யமாகவே உணரப்படுகின்றன. இப்படிச் சத்யமல்லவென்ற பாவனையையே நாம் சங்கல்பித்து வந்தால் அதுவே சத்யமாக உணரப்படும். க்ஷண மாத்திரத்தில் உற்பத்தி

ஏற்பட்டபடி க்ஷணமாத்திரத்திலேயே நாசமும் ஏற்படும், அதாவது ஆத்ம உணர்ச்சி உண்டானவுடன்.

பந்தம் ஏற்படும் முறை

பந்தம் அதாவது சம்சாரம் ஏற்பட்ட முறை யாவது, முதலில் சங்கல்பமும், இது அடிக்கடி ஏற்படும்போது ஸ்மரணையாகி, ஸ்மரணையால் இச்சை யுண்டாகி சம்சாரம் ஏற்படுகிறது. இந்த முறைக்கு எதிரடியானதைக் கைப்பற்றினால் விடுதலையடையப் படும். எப்படியெனில், விஷயங்களில் இச்சை குறைந் தால் ஞாபகம் க்ஷீணிக்கும். ஞாபகம் குறைந்தால் சங்கல்பத் திவிரம் குறையும். சங்கல்பம் ஒழிந்தால் அக்ஞானம் ஏது? நிழலானது சூரியப் பிரகாசத்தை அடைய விரும்பினால் தனது நாசத்தால்தான் அதை அடைய இயலும். அதேமாதிரி ஞானத்தில் நோக்கம் சென்றால் அக்ஞானத்தின் நாசமேற்படும். அக்ஞான மென்ற ஒரு தத்வமிருந்தால் தானே அதை ஒழிக்க அதிகச் சிரமம் தேவை. நிர்மலமான ஆகாயத்தில் நாம் நீலத்தன்மையைக் காண்கிறோம். இது கண் களின் சக்திக் குறைவால் ஏற்படும் தோற்றம். பிரகாசமேயற்று வெறும் இருளேதான் நீலமான தோற்றத்தைக் கொடுக்கின்றது. அதேமாதிரி இந்த அக்ஞானமும், பந்தங்களால் ஏற்பட்ட சக்திக் குறைவால் சூன்யத்தில் தோற்றத்தைக் கொடுக்கிறது. ஆகையால் அபாவமான சங்கல்பத்தால்தான் ஞானம் ஏற்படும், அதாவது யாதொரு எண்ணமும் மனதில் உதிக்காத நிலையில்.

வால்மீகி: இம்மொழிகளைக் கேட்டதின் பலனாக ராமனுடைய முகம் தெளிவுபட்டுப் பிரகாச மடைந்தது. இந்த உபதேசங்களால் தனக்கு ஞானம்

உதித்ததென்றும், ஆகையால் தான் முனிவருக்கு மிகவும் கடமைப்பட்டதாகவும் தெரிவித்துக்கொண்டு மேற்படி லவணேபாக்யானத்தில் தனக்குத் தோன்றிய ஒரு சிறிய சந்தேகத்தை நிவர்த்தி செய்யும்படி கேட்டுக்கொண்டான். லவணனுக்கு நிஷ்காரணமாக சண்டாளனென மதிமயக்கம் ஏன் ஏற்பட்டது, அதன் கருத்தென்னவென்று கேட்டான்,

**வசிஷ்டர்:** நிஷ்காரணமாக பிரபஞ்சத்தில் ஒன்றும் ஏற்படுவதில்லை. ஆகவே லவணனுக்குண்டான அனுபவமும் காரணமின்றியில்லை. நான் அன்றைய தினம் சபையிலிருந்தபடியால் என்னையே சபையோர்கள் நாடி தங்கள் ஆச்சரியத்தைத் தெரிவித்துக்கொண்டு அதன் கருத்தை விளக்கும்படி வேண்டிக்கொண்டனர். ஞானதிருஷ்டியால் விஷயத்தை நான் அறிந்துகொண்டு அவர்களுக்குச் சொன்னேன்.

### செயலற்ற எண்ணங்களுக்கும் பலனுண்டு என்பது

அரிச்சந்திர குலத்திலுதித்த இந்த லவணன், தன் குல ஒழுக்கப்படி ராஜஸூய யாகம் செய்து முடித்தான். ஆனால் மற்றவர்களைப்போலன்றி இந்த யாகத்தை இவன் மானசீகமாக ஒன்றரை வருஷ காலத்தில் செய்திருந்தான். ஆனால் யாக முறைப்படி வெளி தேசங்களில், யாகம் முடிந்ததும், பன்னிரண்டு வருஷ காலம் சஞ்சரித்து பல கஷ்டங்களை அனுபவிக்கவேண்டிய கிரமத்தை அனுஷ்டிக்காமல் போனதால் இந்த அனுபவம் சம்பவித்தது. யாகம் மானசீகமாக செய்யப்பட்டதால், இந்த அனுபவம் மானசீகமாகவே ஏற்பட்டது. அன்று ஜால வித்தைக்காரனாக வந்தவன் ஒரு தேவதூதன்.

ஆகையால் எல்லா வியவகாரங்களைச் செய்வதும், அவைகளின் பலன்களை அனுபவிப்பதும் மனதாகிய புருஷனே. ஆதலால் இம் மனதை மேற்சொல்லியபடி வசம் செய்துகொண்டு ஆத்ம நோக்கத்தில் திடமாயிருப்பாயாக. அப்படிச் செய்துவந்தால் இந்த யோக பூமியைக் கொண்டு ஏழுவித பக்குவ நிலையில் ஒன்றையாவது அடையலாம்.

ராமன்: யோக பூமியாவது எது? ஏழுவித பதவிகள் யாவை? இவைகளை எனக்கு விளக்கும்படி வேண்டுகிறேன்.

ஏழுவித மானிடப் பிரிவு

வசிஷ்டர்: இந்த தேகத்தைத்தான் யோக பூமியென்றும் ஞான பூமியென்றும் சொல்லுவது. ஏனெனில் இதை ஆசிரயித்துக்கொண்டுதான் யோகம், ஞானம் என்றவைகளை அடையவேண்டும். பிறகு, இந்த ஏழு விதப் பதவிகள் மானிடர்களிருக்கும் நிலைமையைக் குறித்துச் சொல்வது; அதாவது அவரவர்களின் பாப புண்ணிய கர்மங்களுக்குத் தகுந்தவாறு இருக்கும் நிலைமையையொத்து. இவை வியவகாரத்தின் பொருட்டு ஏற்படுத்தப் பட்ட பிரிவுகள். இந்த ஏழுவிதப் பதவிகளை ஞானத்தை யொட்டியாவது அல்லது அக்ஞானத்தை தழுவியாவது பிரிக்கலாம். எப்படிப் பிரிக்கப்பட்டாலும் எல்லா மனித வர்க்கங்களும் இவ்வேழில் ஒன்றாகிய பதவியில் அடங்கியே தீரவேண்டும். இந்த ஏழு விதப் பதவிகளாவன:—

(1) ஜடப் பொருள்களை விட வேறில்லாதவாறு கருதும்படி, பிரபஞ்ச வாழ்க்கையிலேயே முற்றிலும் ஈடுபட்டு பரம்பொருளின் உணர்ச்சி லவலேசமுமில்லா

மலும், வாழ்க்கையெல்லாம் இச்சைகளாகவே இருப்பதே கடைசியான ஏழாவது நிலை. இந்த வாழ்வு ஜட வாழ்வைக் காட்டிலும் உயர்ந்ததல்ல. ஏனெனில் இது தேகமே பிரதானமென்று தேகத்தைப் போஷித்து வரும் வாழ்வாய் இருப்பதாலே. இந்த நிலையிலிருந்து கரையேறுவதற்கு, சுபஇச்சைகளைக் கருதியும் துராசைகளை யொழித்தும், நல்லொழுக்கங்களை அனுசரித்தும் வந்தால், மனது சொல்பம் சுத்தப்பட்டு இதற்கு மேலான பதவியை அடையலாம்.

(2) அடுத்த பதவி சொப்பன ஜாகிரதையென்று சொல்லப்படும். அதாவது நீண்ட சொப்பனமாகிய வாழ்வை சத்யமென்றே பாவித்திருப்பது. இந்நிலையில் கடவுளென்ற ஒரு பரம்பொருளின் உணர்ச்சியிருந்து அதனால் சில நல்லொழுக்கங்கள் ஏற்பட்டு வாழ்க்கை சற்று சீர்திருத்தப்பட்டிருக்கும். (யூ.6)

(3) ஐந்தாவதான நிலை சொப்பன நிலை எனப்படுவது, அதாவது வாழ்க்கையை அநித்யமாக உணர்ந்து சற்றும் சம்சாரத்தைப் பற்றுதலின்றி நடத்துவது. இந்த ஸ்திதியில் மனதை ஒடுக்கிப் பழகி வந்தால் சங்கல்பங்கள் நீங்கும்.

(4) நான்காவது ஜாகிரத சொப்பனமெனப்படும். ஜாகிரத ஸ்திதியில் இருந்துகொண்டே சம்சாரத்தை சொப்பனம் போல் உணர்ந்து முற்றிலும் பற்றுதலற்றிருப்பது. இந்த நிலையில் மனதை ஒருமுகப்படுத்தி ஆத்மாவை தியானித்துவந்தால் அடுத்த ஸ்திதி ஏற்படும்.

(5) இந்த மூன்றுவது ஸ்திதி அதிஜாகிரத ஸ்திதி என்று சொல்லப்படும். ஆத்ம தத்வம் அறியப்பட்டும், "நான்" "நீ" யென்ற துவைத பாவம் நீங்கா

மல் சம்சாரத்தைச் செலுத்தி வருவது. இந்நிலையில் பதார்த்த பாவனைகளை ஒழிப்பதை அப்யசித்துவந்தால் அடுத்த பதவியை அடையலாம்.

(6) இரண்டாவது ஸ்திதி வெறும் ஜாக்ரத ஸ்திதியெனப்படும். பதார்த்த பாவனைகளற்று "நான்" என்னும் உணர்ச்சிதான் மிஞ்சி நிற்கும். இந்த நானென்ற நினைவை ஆத்மாவாக இந்த நிலையில் பாவித்து வருதல் வேண்டும். இதுவே ஜீவன் முக்த ஸ்திதி யெனப்படுவது.

(7) ஆத்ம உணர்ச்சி ஸ்திரப்பட்டு நானென்ற நினைவும் அழிந்தால் அதுவே பீஜ ஜாக்ரத ஸ்திதி யென்றும், விதேகமுக்தி என்றும் சொல்லப்படுவது.

இவைகளை நீ அறிந்துகொண்டு தீரனுகவும் ஜீவன் முக்தனுகவும் ஆகக்கடவாய். இப்படி இருப்பவர்களுக்குச் சம்சாரம் ஒரு திருணமாத்திரம். அக்ஞானம், பயம், துன்பம் யாதும் அவர்களை அண்டாது.

இதுகாறும் சொல்லிவந்ததின் பொருளாவது பிரபஞ்சம் பிரம்மத்தைத் தவிர வேறல்லவென்பதே. தங்க வளையலில் தங்கத்தைத் தவிர்த்து வேருென்றும் நாம் காண்பதில்லை. தங்கமின்றி வளையலேது? தங்கத்தின் ஆதரவைக்கொண்டுதான் வளையலோ அல்லது இதர ஆபரணங்களோ, பொருளாலும் வார்த்தைகளாலும் விஸ்தரிக்கப்படுகின்றன. இவ்விதம் எந்தப் பொருளை ஆராய்ந்து பார்த்தாலும் அதில் கடைசியில் பிரம்மத்தைதான் உணரமுடியும். எப்படியென்ருல் ஒரு வஸ்துவை அறிய, அறிகிறவன் வஸ்துவில் ஐக்யமானுல்தான் முடியும். இப்படி ஒன்ருேடொன்று லயமடைய, இரண்டும் ஒரே இனத்தைச் சேர்ந்திருக்க

வேண்டும். அல்லது அறிகிறவனையும் அறியப்படுவதை யும் ஒருமித்து ஓர் உணர்ச்சியை ஏற்படுத்துவதே அறிவாகிய பிரம்மம்.

கனவு, நினைவு இரண்டின் சம்பந்தம்

தங்கத்தில் காணும் வளையலைப்போல, பிரம்மத் தைக் காட்டிலும் வேறாகக் கருதப்படும் பிரபஞ்ச அக்ஞானம் எவ்வளவு ரூடியாய் விஸ்தரித்திருக் கின்றது என்பது, லவணனுக்கு மேற்படி ஏற்பட்ட அனுபவத்தால், நமக்குத் தெளிவுபடும். சபையோர் களுக்கு நான் தாத்பரியத்தைச் சொன்ன மறுநாள், லவணன் என் மொழிகளைச் சிந்தித்து, தான் சொப் பனத்தில் அனுபவித்த சம்சாரமும் பிரதேசமும் ஒரு சமயம் எவ்விடத்திலாவது வாஸ்தவமாகவே இருக்க லாமோ வென்று நினைத்தான். பிறகு இதைச் சோதிப் பதே சரியென்று தீர்மானித்துக்கொண்டு சைன்யத் தைத் திரட்டிக்கொண்டு மந்திரிகளுடன் புறப் பட்டான். தான் கனவாகக் கண்ட காட்சிகளை ஞாபகம் செய்துகொண்டு, தன் சண்டாள வாழ்க்கை நடந்த பிரதேசத்தைத் தேடிச் சென்றான். பல தினங் கள் கழித்து விந்தியமலைச் சார்பை யடைந்து, அங்கே பல காடுகளைச் சோதித்து கடைசியில் தான் கண்ட காட்டை யடைந்து அவ்விடமிருந்து தான் வசித்து வந்த கிராமத்தையடைந்தான். பார்க்கப்பார்க்க யாவும் வியப்படையத்தக்கதாக இருந்தன. கனவில் கண்ட கிராமம், ஜனக்கூட்டம், உற்றார், உறவினர் எல்லாம் உருவமும் ஜீவனும் கொண்டு கண்ணெதிரில் புலப் பட்டார்கள். தன் மனைவியின் சுற்றத்தார்கள், அந்தப் பெண்ணுக்கேற்பட்ட அதிருஷ்ட தசையையும், பிற் பாடுண்டான பல துன்பங்களையும் நினைத்துப் புலம்பு

வதையும் பார்க்க ஆச்சரியம் அதிகரித்தது. அவ் வூரார்களைக் கேட்டும் வேறுவிதமாகப் பரிசோதித்தும் பார்க்கையில் தான் கண்ட சொப்பனம் இங்கே வாஸ்தவமாக நடைபெற்றிருப்பதாக அறியவந்தது. அதனால் மனம் கலங்கினான். அன்று கண்ட கனவுக்கும் இங்கே பிரத்யக்ஷமான காட்சிக்கும் என்ன சம்பந்தம்? ஒன்றும் அவனுக்கு விளங்கவில்லை. பிறகு கிராமவாசிகளுக்கு வேண்டிய வெகுமதியளித்து தன் பரிவாரங்களுடன் வீடு திரும்பினான். மறுதினம் சபை கூடியதும் என்னைப் பார்த்து, தான் கண்டதையெல்லாம் விவரமாகச் சொல்லி இவைகளுக்குள்ள சம்பந்தத்தைத் தனக்கு விளக்கும்படி வேண்டிக்கொண்டான்.

அப்பொழுது அவனுக்கும் சபையோர்களுக்கும் விவரமாக எடுத்துரைத்தேன். நாம் விழிப்பில் காண்பவைகளும் சொப்பனத்தில் காண்பவைகளும் வெறும் தோற்றங்களேயன்றி வாஸ்தவமல்ல. கனவில் வெகு அசம்பாவிதமான செய்கைகளையெல்லாம் நாம் காண்கிறோம். நம் மரணத்தையே கூடக் காணலாம். அதே மாதிரி நம் மனதில் கற்பனை செய்யப்பட்டவைகளை விழிப்பிலும் காட்சிகளாகக் காண்கிறோம். ஒரு க்ஷண நேரத்தை நீண்ட காலமாகவும், அல்லது நீண்ட காலத்தை ஒரு க்ஷண நேரமாகவும் அனுபவிப்பதையும் நாம் அறிவோம். இவையெல்லாமுமே சம்வித்தாகிய கண்ணாடியில், சித்தால் தோற்றுவிக்கப்படும் தோற்றங்கள், சத்யமல்ல. இப்படி இருக்க ஒன்றை மெய்யாகவும் மற்றொன்றைப் பொய்யாகவும் நினைப்பதற்கு இடமேது? ஒரு பெரிய மலையானது சிறிய கண்ணாடியில் பூர்த்தியாக எப்படிக் காணப்படுகிறது? அம்மாதிரி தேச கால நிபந்தனைகளுக்குக் கட்டுப்பட்டிருக்கையில்

மனதால் காணப்படும் காட்சி ஒருவிதம். இக் கட்டுப் பாடுகளின்றி காணும் காட்சி இன்னொரு விதம், அதாவது கனவில், இவைகளை ஒன்றோடொன்றைச் சேர்த்து வைத்துப் பேசினால் அசம்பாவிதமாகத்தா னிருக்கும்.

விந்திய மலைச்சார்பில் சண்டாளக் கிராமத்தில் நடந்தவைகள் லவணனுக்குச் சொப்பனமாகப் பிரதி பிம்பித்தன. அல்லது லவணனுடைய சொப்பன மாகிய சங்கல்பம் விந்திய மலையில் சொரூபத்தை யடைந்தது, அதாவது பூர்த்தியாயிற்று. இவ்விரண்டு விதமான கொள்கைகளும் சரியே.

சொப்பனத்திலும் விழிப்பிலும் காணப்படும் காட்சிகளை வேறு விதமாகவும் பாவிக்கலாம், அதாவது இரண்டும் தோற்றங்களல்லாமல் சத்யமுமல்ல, அசத்தியமுமல்ல என்பதே இன்னொரு கொள்கை. காட்சிகள் காணப்படுவதால் அசத்யமாகாது, ஆனால் காணப்பட்டவைகள் மறைந்து விடுவதால் சத்யமும் ஆகாது. மற்றொருவாறும் இவைகளைக் கருதலாம், தற்காலத்துச் சத்யமென்று. சொப்பனத்தில் காண்பவைகள் அப்பொழுது சத்யம், ஆனால் விழிப்பில் அசத்யம். விழிப்பில் காண்பது சொப்பனத்தில் அசத்யம். ஆனால் சம்வித்தை வைத்துப் பேசினால் எல்லாம் அசத்யம். கண்ணாடி பிரதிபிம்பத்தை எப்படி விருப்போ வெறுப்போ இல்லாமல் தோற்றுவிக்கிறதோ அதேமாதிரி சம்வித்தானது தோற்றங்களைக் கனவிலும், நினைவிலும் தோன்றியபடி பிரதிபலிக்கச் செய்கின்றது. ஒன்றில் காலதேச சங்கல்பமின்றியும், மற்றொன்றில் இச் சங்கல்பத்தைக் கூடியும், தோற்று விப்பதின் காரணத்தால் சம்வித்தானது தோற்றங் களுக்குக் கர்த்தாவாகாது; எப்படி கண்ணாடி பிரதி

பிம்பங்களுக்குக் கர்த்தா இல்லையோ அப்படியே, இந்தக் காரிய - காரண சம்பந்தம் ஒரே இனத்தைச் சேர்ந்தவைகளுக்குத்தான் பொருந்தும். சம்வித்தை எந்த இனத்தில் சேர்க்கத் தகும்? தோற்றமாகிய ஜகத்தின் விஸ்தரிப்பு எப்படி ஏற்படுகிறதென்பதைக் கவனிப்போம். சித் அல்லது மனஸ் கர்த்தாவாக நிற்க அதன் அசைவு சங்கல்பமாகவும், அதன் தொடர்ச்சியாக அது செயலாகவும் மாறுகிறது. இது ஜடப் பொருள்களில் நோக்கத்தைச் செலுத்தினால் அவைகளுடன் லயமாகி அவைகளின் தன்மையை உணருகிறது; அதாவது அவைகளின் அறிவு மனதிற்கு ஏற்படுகிறது. அந்த க்ஷணம் மனஸே ஜடமாய் நின்று தன் சுதந்திரத்தை இழக்கிறது. இப்படியே ஒவ்வொரு பதார்த்தத்திலும், விஷயத்திலும், உணர்ச்சியிலும் தானே அதுவாய் நின்று பல நாம ரூபங்களை யடைந்து பிரபஞ்சமாய் விஸ்தரிக்கின்றது.

இந்த அறிவு என்னும் சேதனம் ஏற்படுவதற்குக் காரணம், அகங்காரம் அல்லது "நான்" என்ற உணர்ச்சி. இந்த உணர்ச்சியுடன் கூடவே அறிகிறவன், அறியப்படுவது என்ற சங்கல்பங்களும் ஏற்படுகின்றன. ஆகையால் இவ்வுணர்ச்சியை ஒழிப்பதே முக்ய யத்னமாக இருக்கவேண்டும். அறிகிறவன், அறியப்படுவது அல்லது "நான்" பதார்த்தம் என்னும் பாவனை ஒழிந்தால் அபாவமாகிய தன்மைதான் மிஞ்சும். இதுவே பிரம்மம்.

### ஆத்ம உணர்ச்சியை அடையும் முறை

1. இந்தப் பிரகரணத்தில் சொல்லியவைகளைச் சுருக்கிச் சொல்வோமாகில், மனிதர்கள் கடைத்தேற ஆரம்பத்திலேயே சாஸ்திரங்களைப் படித்து ஆராய்ச்சி

செய்தும் நல்லோர் சேர்க்கையை அடைந்தும் முயற்சிப்பதே. இவைகளால் சற்று விவேகம் ஏற்பட்டுப் பிறகு படிப்படியாக நல்லொழுக்கம், விசாரம், பகுத்தறிவு, பற்றுதலற்றிருத்தல், மனமொடுக்கம், துவைத பாவம் நீங்குதல், கடைசியில் ஜீவன் முக்த ஸ்திதியும் ஏற்படும்.

(2) பிறகு சம்சாரத்திலிருந்து விடுதலையடைய முக்கியமான தடை வாசனையே. இவ்வாசனையின் பலன்களாகிய மோகம், மரணம் என்பவைகள் முதலில் தேகத்தைத்தான் பாதிக்கின்றன. பிறகு இவைகளால் ஏற்படும் இன்ப துன்பங்கள் மனதைப் பாதிக்கின்றன. ஆகையால் வாசனையை ஒழிப்பது மிக அவசியம். அதற்கு "நான் ஆத்மா" என்ற உணர்ச்சி ஏற்பட வேண்டும். மனதை ஒடுக்கினால்தான் இவ்வுணர்ச்சி சித்திக்கும். மனதானது செயல்களில் எவ்வளவு எளிதாக ஈடுபடுகிறதோ அதேமாதிரி செயல் இல்லாமையில் ஏன் ஈடுபடக்கூடாது? இதைப் பயிர்ச்சி செய்து வந்தால் மனம் சாந்தி யடைவதில் சந்தேகமில்லை.

(3) பிரபஞ்சம் என்பது, பிரம்மத்திலிருந்து உற்பத்தியானது போல் தோன்றும் மனஸின் தோற்றமே. சூரியன் கிளம்பியதும் அதன் கிரணங்கள் எங்கும் வியாபித்து நிற்பதுபோல் மனஸ் தோன்றியதும் பல பிரபஞ்சங்களும் சூக்ஷ்மமாய்க் கூடவே தோன்றுகின்றன. இதுதான் பிரம்மாவென்றும், சித்தென்றும், அகங்காரமென்றும் பலவாறுகச் சாஸ்திரங்களில் கூறப்படுகின்றது. ஆனால் எப்படி சூடு அனலைக் காட்டிலும் வேறில்லையோ, அல்லது ஜலத்தைக் காட்டிலும் அலை வேறில்லையோ, தங்கத்தைக்

காட்டிலும் வளை வேறில்லையோ, அப்படி இந்த மனஸாகிய பிரபஞ்சமும் ஆத்மாவைக் காட்டிலும் வேறில்லை. வியவகாரத்தின் பொருட்டுப் பல நாமரூபங்கள் ஏற்பட்டிருந்தும் விசாரணை செய்து பார்த்தால் சகலமும் ஆத்மாவைத் தவிர்த்து வேறில்லையென்று விளங்கும்.

உற்பத்திப் பிரகரணம் முற்றிற்று.

# 4

## ஸ்திதிப் பிரகரணம்

## ('நான்' என்பதன் விஸ்தரிப்பு)

வசிஷ்டர்: இந்தப் பிரகரணத்தில் 'நான்' என்று வழங்கிவரும் அகங்கார ரூபத்தைப்பற்றிச் சொல்லப் படும். இதைச் சரியாக அறிந்துகொண்டால் முக்தி யடைவதற்குச் சகாயமாக இருக்கும்.

### ஜகத் தோற்றம் பொய்யென்பது

பிரபஞ்சம் ஸ்திரமாயும் சாசுவதமாயுமிருப்பதாக நம் மனத்தில் தோன்றினாலும் அது சொப்பனத்தில் கண்ட காட்சிகளைப் போலவே அசத்தியம். ஒரு சித்தி ரத்தில் எழுதப்பட்ட உருவம் எவ்வளவு சார மற்றதோ அப்படியேதான் இப் பிரபஞ்ச உணர்ச்சி யுங் கூட. இவ்வுணர்ச்சிகளை நாம் எவ்வாறு அனுப விக்கிறோமென்றால், குரங்குகள் நெருப்பின் அனலைக் கண்ட அனுபவத்திலிருந்து சிவப்பு நிறமான குன்றி மணிகளைச் சேகரித்து அவைகளை அனலாகப் பாவித் துக் குளிர் காய்ந்து சந்தோஷத்தையும் அடைவது போல. மேகத்தில் காண்கிற கந்தர்வ நகரம் மறைவதுபோல, பார்த்துக்கொண்டிருக்கையிலேயே பிரபஞ்சமாகிய தோற்றமும் விசாரணை செய்யும் பொழுது அநித்யமாக அறியப்படுகிறது. நாம் சங்கல் பத்தில் மிகச் சந்தோஷிக்கத் தக்கவைகளைக் கற்பனை செய்துகொள்ளும்பொழுதும், அல்லது வெகு சார மான கதையைக் கேட்கும்பொழுதும் அனுபவிக் கும் இன்பத்தைவிட வேறானவையல்ல, பிரபஞ்ச அனுபவங்களால் ஏற்படும் இன்பங்களும். இவ்வின்ப

துன்பங்களும் அவ்வளவு ஸூக்ஷ்மமானவை! ஏன், சூன்யமே! சூரியனிடத்திலிருந்து கிளம்பும் கிரணங்களுக்குச் சொரூபமாவது வஸ்துத் தன்மையாவது இல்லாதிருந்தும், அவை சகலத்தையும் பிரகாசிக்கச் செய்கின்றன. மேகங்களிடையில் வானவில்லாகிய காட்சியைக் காண்கிறோம். பிறகு ஆகாயத்தில் நீல வர்ணத்தைக் காண்கிறோம். இல்லாதவைகளே இருப்பதென நமக்குத் தோற்றத்தை அளிக்கின்றன. அதேமாதிரியே பிரபஞ்சமாக ஏற்படும் நம் உணர்ச்சியில், வஸ்துத் தன்மையாவது சத்யமாவது லவலேசமும் கிடையாது. எல்லாம் வெறும் தோற்றம், அதாவது சூன்யம்.

ஜகத்தின் உற்பத்தியும் பொய்யென்பது

ராமன்: மரமானது விதையில் ஸூக்ஷ்மமாக இருப்பது போல ஜகத்தும் ஆத்மாவில் ஸூக்ஷ்மமாக இருந்து உற்பத்தியாகின்றது என்று எனக்குப் புலப்படுகின்றது. இவ்விஷயத்தை எனக்குத் தெளிவு செய்யும்படி கேட்டுக்கொள்கிறேன்.

வசிஷ்டர்: நீ சொன்னது மகா மூடத்தனமான கொள்கை. அவிவேகிகளின் புத்திக்குப் புலப்படுவதற்கு ஏதாவது ஒரு சித்தாந்தத்தைக் கொண்டு புலம்ப வேண்டியிருப்பதால் இந்த உபமானம் எடுத்துச் சொல்லப்பட்டது. நீயும் இதுதான் உற்பத்திக் கிரமமென்று எண்ணுவது தவறு. மரமும் விதையும் நமது இந்திரியங்களுக்குப் புலப்படும் வஸ்துக்கள். ஆகையால் இவைகளில் காரணகாரிய சம்பந்தத்தை நாம் உணருகிறோம். சூன்யமாகிய பிரம்மத்தில் உணர்ச்சிகள் ஏற்படுவதெப்படி? ஆகவே ஜகத்தாகிய உணர்ச்சி அதிலிருந்து உண்டானதென்பது யுக்திக்குச் சமாதான

மாகாது. பிரம்மத்திற்கும் ஜகத்திற்கும் அதாவது சூன்யத்திற்கும் உணர்ச்சிக்கும் காரண காரிய சம்பந்தம் ஒவ்வாது. இது பரமாணுவிலிருந்து மேரு பர்வதம் உண்டாயிற்றென்பது போலாகும். அல்லது நெருப்பில் குளிர்ச்சியைத் தேடுவதுபோலாகும். ஆகையால் ஜகத்தை உற்பத்தியானதாக நினைப்பது தவறு. சிலர் மகாப் பிரளயம் ஏற்பட்ட பிறகு பிரம்மா வுக்கு அழிவு ஏற்படுவதற்கு முன்னிருந்த வாசனையின் காரணத்தால் ஜகத் உற்பத்தியாவதாக நினைக்கலாம். இதுவும் தவறே. சாதாரணமாக நமது தோற்றத்தில் யதேச்சையாக ஒரு சங்கல்ப நகரம் தோன்றுகின்றது. இதற்கு என்ன வாசனை இருந்தது? பிரம்மாவுக்கும் அவ்விதமே, அதாவது யாதொரு வாசனையுமில்லை. இதை வேறு விதமாகவும் எடுத்துச் சொல்லலாம். மகாப் பிரளயம் ஏற்பட்ட நிலையில் எல்லோரும் மோக்ஷத்தை யடைவதால் வாசனைகள் அறவே அழிந்துவிடுகின்றன. ஆகவே ஜகத்தின் உற்பத்திக்குக் காரணம் ஏது?

வாஸ்தவம் என்னவென்றால் பிரம்மந்தான் ஜகத், ஜகத்துத்தான் பிரம்மம். அறிவு என்னும் உணர்ச்சி ஏற்படுங்கால் பிரம்மம் ஜகத்தாகத் தோன்று கிறது; அறியும் உணர்ச்சி அடங்கினால் ஜகத் பிரம்ம மாய் இருக்கிறது. ஆக எப்பொழுதும் ஒன்றுதான் சத்தியமாய் நிற்கும். அது, இது என்ற துவைத பாவந்தான் அக்ஞானம்.

மேற்சொன்னதை இன்னும் விவரித்துச் சொல் வோமாகில், மகா நிர்மலமான சித்திலிருந்து அதே இனத்தைச் சேர்ந்த உதவிக் காரணமின்றி, பிரபஞ்சம் எப்படி உற்பத்தியாகும்? எப்பொழுது காரண

மில்லையோ அப்பொழுது மூன்று காலத்திலும் இப் பிரபஞ்சமும் இல்லைதான். அல்லது பிரபஞ்சமே மூல காரணமாகிய பிரம்மமென்று சொல்லலாம். அதைத் தவிர்த்து வேருகக் கருதுவதற்கு இடமில்லை. மேலும் பிரபஞ்சம் ஏற்கனவே இருந்ததாக எண்ணப்படின் உற்பத்தியாவது தவறு, அல்லது ஏற்கனவே இல்லா விடின் இப்பொழுது வருவதற்கும் நியாயமில்லை. ஆகையால் பிரபஞ்சத்தைப் பிரம்மத்தை விட்டுத் தனியாக அறிவது தவறே.

### ஜகத் வேருகத் தோன்றுவது மனத்திலே - அதற்கு உபாயம்

மேற்சொன்ன உணர்ச்சி ஏற்படுவது மனதிலுலே. மனம் பிரபஞ்சமாகத்தான் விஸ்தரிக்கும். ஆகையால் இந்த உணர்ச்சிகள் அழிவதில் யத்னம் செய்து வந்தால் மனம் அழிவடையும். மனம் அழிந்தால் பிரபஞ்சமாகிய தனித் தோற்றம் நாசமடையும். ஆனால் பிரபஞ்சத் தோற்றம் அழிவதால் மனம் அழியவேண்டிய அவசியமில்லை. ஆகையால் மனத்தின் நாசத்தைத் தேட முயற்சி செய்தல் அவசியம்.

### மனத்தின் விஸ்தரிப்பு - சுக்கிரன் விருத்தாந்தம்

இந்த மனத்தின் விஸ்தரிப்பு எவ்வளவு அகண்டமாயும் அற்புதமாயும் இருக்கிறது என்பதை விளக்க ஒரு கதை சொல்லுகிறேன்; அதைக் கவனித்துக் கேட்பாயாக:

மந்தரபர்வதச் சார்பில் பிருகு என்னும் மகரிஷி ஒரு காலத்தில் ஒரு நீண்ட தபஸைத் தொடங்கியிருந் தார். அப்பொழுது அவருடைய குமாரனுகிய சுக்கிரன், அவர் கூடவே இருந்து வந்தான். தாயார் இல்லாததாலும் தகப்பனுர் உலக சிந்தையை மறந்து

தபசில் ஈடுபட்டிருந்ததாலும், பாலனை சுக்கிரன் தானகவே வளர்ந்து வந்தான். யாதொரு வேலையுமில்லாத நேரமெல்லாம் தகப்பனுரைப்போல் தானும் தபஸில் இருந்து வந்தான். இவ்வாறு யௌவன பருவத்தை யடைந்ததும் நிகரற்ற ரூபலாவண்யத்தை யடைந்தவனுகவும் மகா தேஜஸ்வியாகவும் விளங்கினன்.

## சுக்கிரனின் மனோராஜ்யம்

ஒரு நாள் நிஷ்டையிலிருந்து கண்ணை விழித்த தருணம் ஆகாயமார்க்கமாக ஓர் அப்ஸர ஸ்திரீ உல்லாசமாகப் போவதைக் கண்டான். அவளுடைய யௌவனப் பருவம், சுந்தரமான ரூபம், முகத்தின் அழகு எல்லாம், ஒருவரையும் அதுவரையில் காணுத சுக்கிரனுக்கு மனத்தைக் கவரத்தக்கதாகத் தோன்றிற்று. சற்று அவளேயே உற்று நோக்கவே, அப்சரசும் யௌவன புருஷனின் அழகால் மனத்தை இழக்கலானள். ஆனல் ஒருவர்க்கொருவர் தூரதிருஷ்டி ஆயினதைத் தவிர வேறென்றும் சம்பவிக்கவில்லை. இளைய சுக்கிரனைவன், அப்சரசின் உருவத்தை நன்கு மனத்தில் வாங்கிக்கொண்டு, உடனே கண்களை மூடி அவள் நிமித்தம் தபசில் ஆழ்ந்தான். கொஞ்ச காலத்தில் தபோவேகத்தினல் நினைத்ததை அடையும் சக்தியை அடைந்தான். அந்த ஸ்திதியில் மனத்தில் குடிகொண்டிருந்த அப்சரசை அடையும் பொருட்டு இந்திரலோகத்தை நாடிச் சென்றான். அங்கே இந்திரனல் வெகு அன்புடன் வரவேற்கப்பட்டு, லோகத்தின் போகங்களை வேண்டிய காலம் அனுபவிக்கும்படியும் அனுமதி பெற்றான். அதன்பின் அவன் தேடி வந்த அப்சரசைக் கண்டு அவளுடன் வெகு காலம் சரச சல்லாபமாகக்

கழித்தான். இப்படிப் பல யுகங்கள் கழிந்த பிறகு ஒரு நாள் சுக்கிரனுக்குத் தன் தகப்பனாரின் ஞாபகமும், அவருக்குத் தான் செய்துவந்த பணிவிடைகளும் மனத்தில் உதித்து, கூடவே தான் செய்த புண்ணிய கர்மங்கள் முடிவு பெற்றனவோ என்னும் சந்தேகம் தோன்றிற்று. இப்படித் தோன்றியதும் அப்சரசுடன் கூடிய சம்சாரம் முடிவுபட்டு அவனுடைய கல்பனா ஜீவனுக்கும் நாசம் ஏற்பட்டது. அந்த ஜீவன் அதன் பிறகு பல ஜன்மங்கள் அடுத்தடுத்து எடுத்துக் கடைசியாக ஒரு முனி புத்திரனாகப் பிறந்து தபோமகிமைகளையும் பெற்றிருந்தது.

இவ்வளவு காலம் சென்றும் சுக்கிரனுடைய தேகம், தகப்பனார் பிருகுவின் தபோபலத்தால், பஞ்ச பூதங்களாலோ அல்லது மிருகங்களாலோ அழிவடையாமல் பாதுகாக்கப்பட்டு வந்தது. ஆனால் தேகம் சருகுபோல் ஒடுங்கியும், பார்க்கப் பயங்கரமாகவும் விரக்தி ஏற்படும் வண்ணமுமாக இருந்தது. இந்நிலையில் பிருகு முனிவர் ஒரு நாள் தபசிலிருந்து கண் விழித்து, தன்னுடன் இருந்த மகனைக் காணமல் தியானத்தால் அவன் தற்சமயம் இருக்கும் ஸ்திதியை உணர்ந்தார். உடனே தேகத்தைத் தேடி, இருக்கும் நிலைமையைக் கண்டு மகா கோபங்கொண்டார். யமனுக்குத் தன் புத்திரனைக்கூட இரையாக்கிக் கொள்ள அவ்வளவு தைரியமா என்று எண்ணி, கமண்டலத்தைக் கையிலெடுத்து யமனைச் சபிக்கத் தொடங்கினர். அந்த க்ஷணமே காலத்துக்கு அதிபதியான யமன், இதை ஞான திருஷ்டியால் உணர்ந்து, உடனே மானிட உருவம் தரித்து முனிவரின் முன்

வந்து நின்றார். முனிவரை ஒரு க்ஷணம் நோக்கிச் சில வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கினார்.

தர்மராஜன் - பிருகு முனிவர் சம்பாஷணை

யமன்: பிருகு முனிவரே! நீங்கள் பிராமணனாக இருந்து மகா கடுமையான தபசுகளைச் செய்து, ஞானத்தையும் அடைந்தவராக யிருந்தும், தற்சமயம் ஒரு சாதாரண மனிதன்கூடச் செய்யத் துணியாத செயலில் தலையிடுவதாக இருந்தீர். காலத்தால் பீடிக்கப்படாதவர் எவர்? காலத்திற்கு இரையாவது அவரவரின் கர்மத்தாலென்று உமக்குத் தெரியாதா? என் கடமை நியதியை நிலைநாட்டுவதென்பதும் நீர் அறிந்த விஷயமே. இதரர்களைப்போல் பிரியத்தினாலோ அல்லது ஒரு குறிப்பிட்ட எண்ணத்துடனோ நான் என் கர்மாவில் ஈடுபடுவதில்லை. சகல தேவர்களும், இந்திரன், ருத்ரன், விஷ்ணு, சிவன் எல்லோருமே எனக்கு இரையாவதில் தப்புவதில்லை. இதை அறியாதவனும் ஒருவனுமில்லை. அப்படி இருக்க, ஞானியான நீரே பரபரப்பாய்ச் சாபமிடத் துணிந்தது வெகு ஆச்சரியப்படத் தக்கது. கோபத்தை முன்னிட்டுக் காரியத்தில் இறங்குவது வியர்த்தமென்று நீர் அறியவில்லையா? உங்களுடைய சாபம் என்னை என்ன செய்யக்கூடும்? ஏன் வீணாக உங்கள் தபோ மகிமைக்கு விக்கினம் தேடிக்கொள்ளுகிறீர்? என்னுடைய நிஜ சொரூபத்தை இன்னும் நீர் அறியவில்லை. இதோ என் விசுவ ரூபத்தைப் பாரும். நான் சர்வாத்மாவாக இருக்கிறேன். உமக்கு இன்னும் அகங்காரம் நீங்காமலிருப்பதால், பிள்ளையென்ற வாஞ்சை மேலிட்டது. தான் கர்த்தா என்ற எண்ணத்தை மேற்கொண்டவர்கள் மூடர்களல்லவோ? தண்ணீரில் சந்திரபிம்பத்தைக் காணும்

போது தண்ணீரைக் கர்த்தாவென்று எண்ணலாமா? ஆனால் தண்ணீர் இல்லாவிட்டால் பிரதிபிம்பம் ஏற்படாது. இவ்விதமான சம்பந்தந்தான் ஆத்மாவுக்கும் சிருஷ்டிக்கும் இருப்பது. சிருஷ்டி நியதியைத் தழுவியும், நியதி சிருஷ்டியைத் தழுவியும் விஸ்தரிக்கின்றன. இவைகளில் கர்த்தா, போக்தா என்பன ஏற்படுவதைப் போலவே அழிவையும் அடைகின்றன. இந்த நடையில் என் விருப்புக்கோ வெறுப்புக்கோ இடம் ஏது? நியதியை நிலைநாட்டுவதே நம் கடமை.

உங்கள் புத்திரன் விஷயத்தைக் கவனிக்க, ஒவ்வொருவருக்கும் இரண்டு சரீரமிருப்பது நீர் அறிவீர், அதாவது பூத சரீரமும், மனோ சரீரமும். சுக்கிரன் மனோ சரீரத்தைக் கொண்டு மகா சங்கல்பத்தையடைந்தவனாய் தன் இஷ்டம்போல் பல கர்மங்களை மேற்கொண்டு பல ஜன்மங்களை எடுத்து நான்கு சதுர்யுகத்தைக் கழித்தான். அவன் செய்த வினைப் பயன்களை அவன் அனுபவிக்கலானான். தற்சமயம் பிராமண குமாரனாகவும் அபூர்வ ஞானத்தை யடைந்தவனாகவும் இருக்கிறான். உம்முடைய ஞானக் கண்ணால் பார்த்தால் நீர் அவனை அறியலாம்.

வசிஷ்டர்: இப்படி யமன் சொல்லி முடித்ததும் பிருகு முனிவர் சற்றுக் கண்ணை மூடித் தியானித்து, தன் புத்திரன் இருக்கும் இடம், நிலை எல்லாம் உணர்ந்து பிறகு கண்ணை விழித்துக் காலபுருஷனைப் பார்த்துச் சொன்னார்.

பிருகுமுனிவர்: நீங்கள் சொன்னதெல்லாம் சத்தியமே. நான் செய்யத் துணிந்தது பெரும் தவறாகும்; அவசரத்தால் மதி இழந்தேன். ஆனால் என்னைப்போல் பூத உடலைத் தாங்குபவர்களுக்கு இதுவே நியதி. எவ்வளவு

அறிவாளியாக இருந்தும் இவ்விதச் சந்தர்ப்பங்களில் மனோவிகாரமடைந்து நாங்கள் மதியை இழக்கிறோம். கர்த்தா போக்தா என்ற உணர்ச்சி, வெகுகாலம் வேரூன்றினதால், மனத்தில் இருந்துகொண்டே இருக்கிறது. அது எங்களுக்கு ஏற்பட்ட நியதி.

நான் இப்பொழுது சமங்கா நதிக்கரையில் தபசி லிருக்கும் என் மகனைக் கண்டேன். மேலும் சகலப் பிராணிகளுக்குமுள்ள இரண்டு சரீரங்களில் மனது தான் சம்சாரமாகிய தோற்றத்தை நடத்தி வருகிற தென்றும், மனதே ஜகத்தாக வியாபித்து நிற்பதையும் நன்கு இப்பொழுது அறிந்தேன்.

### பேத புத்தியே மனம் : தர்மராஜனின் உபதேசம்

வசிஷ்டர்: காலத்திற்கு அதிபதியானவன் இதைக் கேட்டு ஆமோதித்து, பிறகு பிருகு முனிவருக்கு உபதேசம் செய்தார். குடத்திலுள்ள ஆகாசத்திற்குக் குடம் எவ்வளவு ஆதாரமோ அவ்வளவுதான் இந்த மனதாகிய ஜீவனுக்குப் பூத உடலும் மனத்தின் செயல் மனனம் செய்வதே. இப்படிச் செய்து தன்னை விஸ்தரித்துக்கொள்கிறது. மனம் ஏற்படும் நிலையில் பேதமும் கூடவே ஏற்படுகின்றது. பேதந்தான் மனமாகும். பேதம் அதிகரிப்பதால்தான் பிரபஞ்ச மும் விஸ்தரிக்கின்றது. பொருள்கள் மனத்தின் பாவனை களாகும். பாவிக்கப்பட்டதுபோல் அனுபவத்தை மனம் அடைகிறது. ஆகவே பாவனை, பொருள், அனுபவம் இம்மூன்று ஸ்திதியிலும் மனந்தான் வெவ்வேறு சொரூபமாகத் தோற்றத்தைக் கொடுக் கிறது. பதார்த்தங்களின் தன்மைகளும், உஷ்ணம், சீதளம் என்பவைகளும் மனத்தின் உணர்ச்சிகளைத்

தவிர வேறில்லை. ஆகையால் மனதின்றிப் பிரபஞ்ச மில்லை. மனது பிருமத்தில் ஏற்பட்ட பேதம்; பேதம் ஒழிந்தால் சம்சாரம் அடங்கும். இந்த மனம் என்னும் தோற்றத்தால் பந்தப்பட்டவர்களே அசுரர்கள், மானிடர், தேவர்களும். இவர்களில் ஒருவர்க்கொருவர் உள்ள வித்தியாசம் பந்தத்தன்மையில். ஆகவே எல் லோரும் பந்தத்தால் பிடிக்கப்பட்டவர்களாகும். பிரம்மா, ருத்ரன், ஹரி உட்பட. இவர்களுடைய கதியும் பரிதபிக்கப்பட்டதாகும், ஆகையால் இவர் களின் பதவியை அடைவதிலும் பிரயோஜன மில்லை. அடையவேண்டிய பதவி அந்தப் பரமபதம் ஒன்றே.

### சுக்கிரன் பூர்வதேகத்தை அடைதல்

யமதர்மராஜன் இவ்வாறு சொல்லி, பிருகு முனி வரின் கையைப் பிடித்து, இனிச் சுக்கிரனைப் பார்த்து வரலாமென்று அழைத்து இருவருமாக, சூரிய சந்தி ரர்கள் யாத்திரை புறப்பட்டதுபோல், ஆகாய மார்க்க மாகச் சம்கா நதியை நோக்கிச் சென்று சில நேரம் கழித்துப் பிராமண முனிவர் தபஸ் செய்துவந்த இடத்தை அடைந்தார்கள். வந்ததும் சமாதியிலிருக் கும் பிராமணனைக் காலன் விழிக்கவைத்து அவன் தபஸ் செய்வதன் நோக்கத்தைத் தெரிவிக்கும்படி கேட்டான். பிராமணன் வந்தவர்களை நல்வரவு கூறி அவர் யாரென்று விசாரித்தான். தன் ஞானக் கண்ணால் தெரிந்துகொள்ளும்படி காலபுருஷன் பதிலளித்தார். அவ்வாறே க்ஷண நேரம் பிராமணன் கண்ணை மூடித் தியானிக்க, வந்தவர்கள் யாரென்றும, தன்னுடைய பூர்வ ஜன்மங்களையும் உணர்ந்தான். கடந்த லக்ஷக்கணக்கான ஜன்மங்களையும், அவை

களால் உண்டான அனுபவங்களையும், கடைசியாகத் தற்காலம் ஏற்பட்ட ஞானப் பதவியையும் உணர்ந்தான். வந்தவர்களுக்கு இவைகளை எடுத்துரைத்தான். தற்சமயம் தனக்கு யாதொரு தேவையில்லை என்பதாகவும், ஆயினும் நியதியின் கட்டுப்பாட்டினால், தேகம் இருக்கும்வரையில், தன் கர்மங்களைச் செய்து வர உத்தேசமென்றும் சொல்லி முடித்தான்.

இதைக் கேட்ட காலபுருஷன், பிராமணனைப் பார்த்து, அவன் இப்பொழுது பற்றுதலற்றிருந்தும், பழைய வாசஸ்தலமாகிய மந்தரகிரியை யடைந்து அங்கே விட்டுவந்த தேகத்தை மீண்டும் தரிக்க வேண்டிய கிரமம் இருப்பதாகச் சொன்னார். ஏனெனில் அந்த ஜன்மத்தின் பலனைப் பூர்த்தியாகச் சுக்கிரன் அனுபவிக்கவில்லை. மேலும் சுக்கிர தேகத்துடன் ஜீவன் முக்தனாகி அசுரர்களின் குருவாக நியமிக்கப்படும் கிரமமும் ஏற்படும். இப்படிச் சொல்லி முடித்த பிறகு மூவரும் ஆகாய மார்க்கமாக மந்தரகிரியை யடைந்து, சுக்கிர தேகத்தைக் கண்டு, இந்தத் தேகத்தில் புகுந்து கொள்ளும்படி பிராமணனிடம் சொல்லிவிட்டுக் கால புருஷன் அந்தர்த்தியானமானார்.

அவ்வாறே பிராமணன் பழைய உடலில் தன் ஜீவனை ஸ்மரித்துப் புகுந்து, பிராமண தேகத்தை விட்டான். வெறும் தோலும் எலும்புமாக இருந்த தேகம் ஜீவசக்தியை அடைந்ததும் கொஞ்சம் கொஞ்சமாகத் தெளிந்து, அசைவுற்று, ரத்தஓட்டம் கிரமமாகச் செல்ல, பழைய யௌவனமும் பூர்ணமாக உண்டாயிற்று. ஜீவன் அகன்ற பிராமணதேகம் சவமாயிற்று. பிருகு முனிவருக்கு, உடனே மகனென்ற வாஞ்சை உண்டாகிப் பிள்ளையை ஆலிங்கனம் செய்துகொண்

-டார். பிறகு முறைப்படி சவத்திற்கு வேண்டிய கர்மங்களைச் செய்துமுடித்து, இருவரும் வெகுகாலம் ஜீவன் முக்த ஸ்திதியில் இருந்தார்கள். இப்படி இருக்கையில் சுக்கிரன் அசுரர்களால் தங்கள் குருவாக இருக்கும்படி வேண்டப்பட்டு, அதை ஒப்புக்கொண்டு அவர்களுடைய பிரதேசம் சென்றான். பிள்ளையை விட்டுப் பிரிந்த பிறகு, பிருகு முனிவர் மீண்டும் தன் தபஸில் ஆழ்ந்தார்.

### தேகத்தின் நியதி

வால்மீகி: இக் கதை முடிந்ததும் ராமன் வசிஷ்டரைப்பார்த்து, இவ்விரு முனி சிரேஷ்டர்கள் ஜீவன் முக்தர்களாக இருந்தும் ஏன் தங்கள் உடலின்மேல் வாஞ்சை, அதாவது தகப்பன் மகனென்ற பிரீதி, மேலும் ஏன் அவர்கள் விடுதலையடையவில்லை என்று கேட்டான். அதற்கு வசிஷ்டர், "அவர்கள் எல்லா இச்சை மோகங்களை மனத்தில் ஒழித்திருந்தும் தேகத்தின் நியதியைக் கடக்க முடியாமல் நீ எடுத்துக் காட்டிய உணர்ச்சிகளுக்குக் கட்டுப்பட்டவர்களாகத் தோன்றினார்கள்" என்றார். தேகம் இருக்கும் வரையில் அதன் நியதிக்கு உட்பட்டும் உலக வழக்கங்களாகிய கட்டுப்பாடுகளை அனுசரித்துமிருப்பதே ஞானிகளின் ஒழுக்கம். ஆனால் அவர்கள் இவ்வித அனுசரணைகளால் பந்தப்பட்டிருப்பதில்லை. யாதொரு பலனையும் கருதாமல் அவர்கள் கர்மங்களை இச்சை-துவேஷமில்லாமல் செய்துவருவார்கள். இவைகளைக் கேட்ட பிறகு ராமனுக்கு மேலும் சில சந்தேகங்கள் தோன்றி அவைகளை நிவர்த்தி செய்யும்படி வசிஷ்டரைக் கேட்டுக்கொண்டான்.

ராமன்: சுக்கிரனுக்கு மனத்தோற்றமாக ஏற்பட்ட சம்பவங்கள் எவ்விதம் வாஸ்தவமான அனுபவங்களாக நிறைவேறின?

நம் அனுபவங்கள் ஏற்படும் முறை

வசிஷ்டர்: எல்லோருக்குமே தோற்றமாக மனத்தில் உண்டாவதுதான் பிற்பாடு பலனாக அனுபவிக்கப்படுகிறது. சுக்கிரனுக்கு இவ்விதம் ஏற்பட்டதில் யாதொரு ஆச்சரியமும் இல்லை. ஆனால் ஒரு விஷயம் கவனிக்கத்தக்கது. சாதாரணமாக எல்லோருடைய மனமும், பல ஜன்மங்களெடுத்து பந்தம் மேலுக்கு மேல் அதிகரித்திருப்பதால், களங்கப்பட்டிருக்கும். ஆனதால் மனத்தோற்றங்கள் நிறைவேறுவதற்குக் கால தாமதமாகும். மனமானது எவ்வளவுக்கெவ்வளவு பந்தமின்றிப் பரிசுத்தமாயிருக்கிறதோ அவ்வளவு சீக்கிரம் தோற்றங்களும் நிறைவேறும். சுக்கிரனுக்கு இதுவே முதல் ஜன்மமாக இருந்து வாசனைகளால் பீடிக்கப்படாமலிருந்ததால் சங்கல்பங்கள் உடனே நிறைவேறுவதற்கு லகுவாக இருந்தது. ஞானிகளுக்கும் இவ்விதமே ஏற்படும்.

ராமன்: இது அவனுக்கு முதல் ஜன்மமாக இருந்தால், எவ்விதம் பல ஜன்மங்களெடுத்த இதரர்களுக்குப் போலவே காலதேசக் கிரியைகளாகிய அனுபவங்கள் சுக்கிரனுக்கும். உண்டாயின?

வசிஷ்டர்: அப்படி ஏற்படுவதில் ஆச்சரியமென்ன? விதையைப்போல்தான் மரமாகும். பிருகு முனிவரின் புத்திரனாக உதித்த காரணத்தாலேயே அவருடைய அனுபவங்களெல்லாம் சுக்கிரனுக்கு வாசனா ரூபமாக இருப்பதுதானே சகஜம். இவைகள் அவனிடம்

சூக்ஷ்மமாக இருந்ததால் அவனுடைய தோற்றம் ஆகாசத்தில் கிளம்பியது.

கனவு விழிப்பு என்பவைகளைப்பற்றி

ராமன்: சொப்பனத்திற்கும் ஜாக்கிரத ஸ்திதிக்கும் உள்ள பேதம் என்ன? ஜாக்கிரத ஸ்திதியென்பது எவ்விதம் ஜாக்கிரதையாகும்? பிறகு சொப்பன மாவது என்ன? ஜாக்கிரத அனுபவங்கள் சொப்பனத்தில் தோன்றுவது எப்படி?

ஜாக்கிரத, சொப்பன, சுஷுப்தி, துரீயநிலைகளும், மனத்தின் நிலையும்

வசிஷ்டர்: இரண்டு ஸ்திதிகளிலும், அனுபவிக்கும் புருஷன் ஒருவனே, அதாவது மனம் அல்லது ஜீவன். இந்த மனமானது ஜாக்கிரத ஸ்திதியில் சங்கல்பித்துக் கொண்டதை இந்திரியங்களின் உதவியால் ஜகத்தில் சங்கல்பித்தபடியே காண்கிறது. வேறாகக் காண்பதில்லை. காணப்பட்டதை அனுபவிக்கின்றது. இப்படியான அனுபவங்களை நிஜமென்றும் ஸ்திரமென்றும் நாம் சொல்லுகிறோம். ஆராய்ந்து பார்க்கையில் இதுவும் ஒரு மோகமென்றுதான் சொல்லப்படும், ஏனெனில் மனம் தன்னை வேறாக உணருவதால். ஆனால் இவ்விதந்தான் ஜாக்கிரத ஸ்திதியில் சதா நடைபெற்று வருகிறது. சொப்பனத்திலோ இந்திரியங்கள் அடங்கியிருப்பதால் மனத்திற்கும் வெளிப் பிரபஞ்சத்திற்கும் சம்பந்தமில்லாமல் போகின்றது. ஆகையால் ஜாக்கிரத ஸ்திதியில் ஏற்பட்ட அனுபவங்களை மனமானது சூக்ஷ்ம ஸ்திதியில் அனுபவிக்கின்றது. இந்த அனுபவங்களை நாம் விழித்த பிறகு பொய்யாகப் பாவிக்கிறோம். வாஸ்தவத்தில் அந்தந்த ஸ்திதியில் அவ்வவ்வனுபவங்கள் சத்தியமே. ஆனால் இரண்டு வித

அனுபவங்களும் மனத்தின் சுய சொரூபமின்றிக் கற்பனை செய்யப்பட்ட தோற்றங்களேயாதலால் இரண்டும் மோகமேயாகும். ஜாக்கிரத ஸ்திதியானது ஒரு நீண்ட சொப்பனத்தைத் தவிர வேறில்லை.

மூன்றுவது நிலையாகிய நித்திரையில், காற்றில்லாத இடத்து வைத்த தீபம்போல், மனம் யாதோர் அனுபவமுமின்றிச் சலனமற்றிருக்கிறது. அறியும் தன்மையுமற்று இருப்பதால் இது ஒரு ஜாட்ய நிலையென்றுதான் சொல்லத் தகும். இம் மூன்று நிலைகளையும் விட்டு நான்காவதான துரீய பதவியில், நித்திரையிலிருப்பது போலவே, ஜாட்யமாகிய பிரபஞ்ச உணர்ச்சியற்று இருக்கும் தானே பிரபஞ்சமாகவும், பிரபஞ்சமே தானுகவுமிருக்கும் நிலையாகும் இத்துரீய பதவி. அறிவதற்கு இப்பொழுது பொருள் கிடையாது, ஏனெனில் எல்லாம் அதுவாக இருப்பதால். கண்ணில் இதர வஸ்துக்களை பார்க்க முடியும். தன்னையே எவ்விதம் பார்க்க இயலும்? ஆகையால் தன் மயமாய் இருக்கும் ஜகத்தைப் பார்ப்பதென்பது இவ்விடத்தில் பொருந்தாது.

ஆகையால் நீ சுக்கிரனைப்போல் உணர்ச்சிகளாகிய மனத்தை அடக்கி மோக்ஷத்தை அடைவாயாக. மனத்தை வெளி நோக்கத்தில் சற்றுச் செலுத்தின காரணத்தால் சுக்கிரன் சம்சார வலையில் சிக்கிக்கொண்டு, அலைந்து, திரிந்து வெகு காலங்களுக்குப் பிறகுதான் மோக்ஷத்தை அடைய முடிந்தது.

ராமன்: எல்லாம் பிரம்மமாக இருந்து, பிரம்மத்தைத் தவிர்த்து வேறு சத்தியமில்லாமலிருக்க, இந்தச் சம்சாரமென்ற மோகத்தைக் கற்பிக்கும் மனமும்

பிரம்மத்தைத் தவிர வேருக இருக்கமுடியாது. அப்படி இருக்க மோகம் ஏற்படுவது எவ்விதம்?

வசிஷ்டர்: உன் கேள்வி வெகு சிலாக்யமானதே. இதனால் நீ நன்ருகக் கவனித்து வருவதாகவும் மேலும் ஆராய்ச்சி செய்துவருவதாகவும் அறிகிறேன். ஆனல் இக் கேள்விக்குத் தற்சமயம் பதில் சொன்னல் உன் புத்திக்கு விளங்காது. ஏனெனில் இப்பொழுது நாம் மனதின் தத்துவத்தை ஆராய்ந்து வருகிருேம். பிற்பாடு பிரம்மத்தைப்பற்றி நாம் பேசும்பொழுது இக்கேள்வி பொருத்தமாயிருக்கும். அப்பொழுது சொல்வதின் பொருளும் உன் மனதிற்கு விளங்கும்.

இவ்விடத்தில் நாம் மேலும் மனதைப்பற்றி ஆராய்ச்சி செய்வோம். மனதின் குணம் சஞ்சலம். இந்தத் தன்மையானது இயங்குவதிலும் கிரியைகளாக முடிவு பெறுவதிலும் தோற்றுவிக்கப்படுகிறது. ஆகவே கிரியை, கர்மாவென்பவைகள் மனதைத் தவிர்த்து வேறல்ல. மனம்தான் கர்மா, கர்மாதான் மனம். கர்மமின்றிக் மனமில்லை, மனமின்றிக் கர்மா இல்லை. ஆகையால் மோக்ஷத்தை அடைவதற்கு மனதை ஒழிப்பதினல்தான் முடியுமென்பதில் சந்தேகத்திற்கு இடமேது?

### மோக்ஷோபாயம் - வேறு கொள்கைகள்

இந்த மனத்தத்துவத்தை யொத்துத்தான் இதர கொள்கைகளை அனுசரிப்போர் அதாவது வேதாந்த, சாங்கிய, விக்ஞான, பௌத்த சமயத்தோர் வேருன மோக்ஷ உபாயங்களைத் தெரிவித்திருக்கிருர்கள். ஆனல் இம் மார்க்கங்களெல்லாம் மனதின் கட்டுப்பாட்டை அனுசரித்திருப்பதால் மோக்ஷ மார்க்கமென்று

சொல்லத்தகாதது. எல்லையைக் கடந்து நிற்கும் பிரம்மத்தை இவ்விதம் எல்லைக்குள் அடைவது சாத்யமா? ஆகையால் இம்மார்க்கங்களைக் கடைப் பிடிப்பதில் பிரயோஜனமே இல்லை. பிரபஞ்சம் சம்சாரம் என்பவை பாவனையால்தான் ஏற்படுவ தாலும், இவைகள் சங்கல்பத்தைத் தவிர்த்து வேறல் லாததாலும், அபாவம் செய்து வருவதினால்தான் மோக்ஷம் சித்திக்குமே தவிர வேறெவ்விதத்தாலும் முடியவே முடியாது. சிந்தனை, எண்ணம் என்பவை களை அடியோடு ஒழிக்கவேண்டும். அப்பொழுது தான் மனம் நித்திரையிலிருப்பதுபோல் இருக்கும். அல்லது பிரபஞ்சமெல்லாம் பிரம்மமென்ற பாவனை ஏற்படவேண்டும். அப்படியுமின்றி நானே பிரபஞ்சம், பிரபஞ்சமே நான் என்ற பாவனையாகிலும் ஏற்பட் டால் உணர்ச்சி யென்பது நசிக்கும். இதுவும் சித்தி யைக் கொடுக்கும்.

நம் பிரயத்தனங்கள் யாவும் தேகத்தை அனுசரித் தும், அதன் உதவியாலும் செய்யவேண்டி இருப்ப தால், அதை நம் கைவசத்தில் வைத்துக்கொண்டு தான் மேற்படி முயற்சிகளைச் செய்யவேண்டும்.

ராமன்: சாதாரணமாக மனிதர்களுக்கு இத்தேகம் முக்தியடையத் தடையாக இருப்பதாகத்தான் சொல் லப்படும். ஆனால் தாங்கள் சொல்வதோ, நம் முயற்சி களுக்கு இத்தேகம் சௌகரியமாக இருப்பதென்று. இது புதிய கொள்கையாக இருக்கிறதே!

### மோக்ஷ சாதனத்திற்குத் தேகம் தடங்கலா ?

வசிஷ்டர்: ஆம்! ஆனால் இதுதான் சத்யம். அக் ஞானிக்கு மாத்திரமே இத்தேகம் அசௌகரியமாகவும்

தடங்கலாகவும் தோன்றும். விவேகத்தை யடைந்தவனுக்கு இத்தேகத்தால் யாதொரு பாதையும் ஏற்படுவதில்லை. இதனால் எல்லாவித போகங்களையும் அனுபவிக்கச் சௌகரியமாக இருக்கின்றது. இந்திரனுக்கு அமராவதிப் பட்டணம் எப்படியோ அப்படியே இத்தேகமும் ஒரு விவேகிக்கு. விவேகியானவன் இந்திரியங்களையும் மனதையும் முதலில் பிரயத்தனத்தால் ஜயித்துத் தன் கைவசப்படுத்திக்கொண்டு, பிறகு தன் இஷ்டம்போல் சம்சாரத்தை நடத்தி வருகிறான். யாதொரு இச்சையோ துவேஷமோ இல்லாமல், வந்தவைகளை அனுபவித்தும், வராதவைகளைப்பற்றிச் சிந்திக்காமலும் காலத்தை அநாயாசமாகச் செலுத்துவான். இந்த தேகத்தை இருப்பதில் சிந்தையின்றியும் புதிய தேகத்தை எடுப்பதில் ஆசையின்றியும் இருப்பான். கஷ்டம், சுகம், துக்கம், சந்தோஷம் என்பவைகளை அறியாமல் எல்லாவற்றிலும் சம பார்வையுடன் இருப்பவனுக்கு யார்தான் ஒப்பாகும்? இவ்வித மகா புருஷனை நான் நமஸ்கரிக்கிறேன்.

இப்படி மனதை அடக்கிச் சர்வ அமைதியாக இருப்பதை விட்டு, தேகம், மனம் இவைகளின் தேவையிலும், நோக்கத்திலும் சிக்கிக் கொண்டால் பிறகு அநேகவிதத் துன்பங்களுக்குப் பாத்திரமாகத் தான் வேண்டும். ஆகையால் உலக வியவகாரத்தில் நீ தாம, வியால, கடன் என்னும் அசுரர்களைப் போலில் இராது, பீம, பாச, த்ருடனென்பவர்களைப்போல் இருப்பாயாக. இவர்களின் விருத்தாந்தத்தை இப்பொழுது உனக்குச் சொல்லுகிறேன்.

தாம, வியால, கடன் விருத்தாந்தம்

சம்பரன் என்ற அசுரத் தலைவன் ஒருகாலத்தில் பாதாளத்திற்கு அதிபதியாக இருந்துவந்தான். இவன் அநேக காலம் தபஸ் செய்து பிரம்மா, ஈசுவரன் இவர்களின் பரிபூர்ண அனுக்கிரகத்தையும் அவர்களிடம் அநேக வரங்களையும் பெற்று, மூன்று லோகங்களையும் ஜயித்துத் தன் வசமாக்கிக்கொண்டான். பிறகு இந்திரனுடைய நகரத்தையும் பதவியையும் இகழத்தக்கவாறு, பாதாளத்தில் பிரம்மாண்ட நகரமொன்றை ஏற்படுத்தி எல்லாவித போகங்களுக்கும் தகுந்த சௌகரியங்களையும் உண்டாக்கி, இந்திரனுக்குப் பதின்மடங்கு மேலாக விளங்கி நின்றான்.

இதைக்கண்டு தேவர்கள் வியப்பும் பொறாமையும் அடைந்து, ஆனால் ஒன்றும் செய்யமுடியாமல் மன வருத்தப்பட்டு இருந்தார்கள். ஆயினும் சம்பரனை எவ்விதமாயினும் துன்பப்படுத்திக்கொண்டே இருப்பதுதான் சரியென்று தீர்மானித்துக்கொண்டு தங்களால் முடிந்தபோதெல்லாம் அவன் சேனைகளைத் தாக்கியும், பட்டணங்களை அழித்தும், பலவாறு இம்சித்து வந்தார்கள். இது பொறுக்கமுடியாமல் போகவே, சம்பரன் வெகு கோபங்கொண்டு இத் தேவர்களை நிர்மூலமாக்கிவிட எண்ணித் தாமன், வியாலன், கடனென்று மூன்று அசுரர்களைச் சிருஷ்டித்தான். இவர்களின் குண விசேஷம் என்னவென்றால், தங்கள் கடமையைச் செய்வதைத் தவிர்த்து வேறொன்றும் அறியார். நன்மை - தீமை, ஜயம் - அபஜயம், சந்தோஷம் - துக்கம் இவைகளென்னவென்று கூடத் தெரியாது. மேலும், முதல் சிருஷ்டியானபடியால் இவர்கள் பூர்வ வாசனையுமில்

லாமல் இருந்தார்கள். ஆகையால் தங்கள் கட்டளையை இக் குறைத்திற்கேற்றவாறு சளைக்காமல் செய்யத் தகுந்தவர்களாக இருந்தார்கள்.

தேவாசுர யுத்தம்

சம்பரன் இவர்களைத் தன் சேனைத் தலைவர்களாக நியமித்து தேவர்களை அழித்துவர அனுப்பினான். சம்பரன் எண்ணியபடியே இச்சேனைகள் தேவேந்திரன் பட்டணத்தைத் தாக்கித் தேவர்களை யெல்லாம் அதம் செய்து வந்தார்கள். எவ்வளவு பராக்கிரமத்துடன் சண்டையிட்டும் தேவர்கள் அசுர சைன்யங்களை எதிர்க்க முடியாமல் போனார்கள். பிறகு ஒளிந்து மறைந்து சண்டை செய்தும் மாய யுத்தம் செய்தும் ஒன்றும் பயன் படாமல் உதையோடு ஓடலானார்கள்.

கர்மாவில் ஈடுபட்டுக்கொண்டே இருந்தால் அகங்காரமும் நாசமும் ஏற்படும்

இப்படித் தப்பித்த தேவர்கள் ஒன்றுகூடி பிரம்மாவை நோக்கிச் சென்று சரணாகதி அடைந்தார்கள். இவர்களின் நிலைமையைக் கண்டு பிரம்மா பரிதபித்து சற்று ஆறுதல் சொல்லி மேற்கொண்டு செய்ய வேண்டிய யத்தனங்களைக் காட்டிக்கொடுத்தார். பல வரப்பிரசாதங்களைப் பெற்ற சம்பரன் இப்பொழுது அழிக்கப்பட மாட்டானென்றும்; ஆனால் ஒரு லக்ஷ வருஷ காலம் கழிந்ததும் அவன் ஆயுளுக்கு முடிவு உண்டாகும் என்றார். அதுவரையில் தேவர்கள் விடாமுயற்சியோடு சண்டையிட்டுக்கொண்டே வந்தால் தங்கள் எண்ணம் பூர்த்தியாகுமென்றார். அசுரத் தலைவர்களாகிய தாம, வியால, கடன் மூவரும் சண்டையைப்

பற்றுதலற்றுச் செய்வதால் வெல்லப்படாம லிருக்கி ருர்கள். ஆனுல் அடிக்கடி சண்டையில் ஈடுபட நேரிட்டால் அதனுல் பற்றுதல் ஏற்பட்டு, கூடவே வாசனையும் அதன் பரிவாரங்களாகிய பேத புத்தி, அகங்காரம் எல்லாம் ஒன்று சேர்ந்து பிறகு லகுவாக ஜயிக்கப்படுவார்கள் என்று சொல்லியனுப்பினுர்.

அசுரர்களின் தோல்வி

உடனே தேவர்கள் தங்கள் இருப்பிடம் அடைந்து கொஞ்ச காலம் ஒளிந்து வசித்து, பிறகு சேனைகளைத் திரட்டி அசுரர்கள்மேல் மாயா யுத்தம் செய்துவந் தார்கள். ஓயாமல் சண்டைசெய்து வரவே, தாம, வியால, கடன் மூவரும் கொஞ்சம் கொஞ்சமாக அகங்காரத்தை அடையலாஞர்கள். அதனுல் இச்சையும் தன் தேகமென்ற எண்ணமும் அதைப் பாதுகாக்கும் பொறுப்பும் ஏற்பட்டுவிட்டது. இவ்வளவு கேவல ஸ்திதிக்கு இறங்கின அசுரத் தலைவர்களைத் திடமாகவும் மஹா தைரியத்துடனும் தேவர்கள் தாக்கினுர்கள். மனம் கலங்கியிருந்த தலைவர்கள், சண்டை மேலிட்டதும் திகிலடைந்து உயிர் பிழைக்கப் போர்க்களத்தைவிட்டு ஓடிவிட் டார்கள். தலைவர்கள் ஓடின பிறகு பரிவாரங்கள் இருப்பது ஏது? எல்லோரும் பயந்து ஓடுவதைக் கண்டு, தேவர்கள் இன்னும் அதிக ஊக்கத்துடன் துரத்தித் துவம்சம் செய்தார்கள்.

இச் செய்தியைக் கேட்டதும் சம்பரன் மகா கோபங்கொண்டு இச் சேனைத்தலைவர்களைச் சிக்ஷிக்க எண்ணினுன். ஆனுல் இவர்களோ தண்டனைக்குப் பயந்து ஏழாவது பாதாளமாகிய யமபுரத் திற்குச் சென்று ஒளிந்துகொண்டார்கள்.

சம்பரன் கைக்கு அகப்படாவிட்டாலும் யம கிங்கரர்கள் கையிலகப்பட்டு உயிரை இழக்க நேரிட்டது. இப்படியான மரணத்திற்குப் பிறகு அவர்களடைந்த மனோ நிலைக்குத் தகுந்தபடி புழுவாகவும் மிருகங்களாகவும் பல ஜன்மங்கள் எடுக்கலாயிற்று. ஆகவே எவ்வளவு மகத்தான நிலைமையிலிருந்தாலும் அகங்காரங் கொண்டால் இந்த அசுரர்கள் அடைந்த நிலைமைக்குத்தான் வரவேண்டும்.

இருக்கையும் இல்லாமையும்

ராமன்: இக்கதை விஷயமாக எனக்கு ஒரு சந்தேகம், அதை நிவர்த்தி செய்யும்படி வேண்டுகிறேன். இருப்பது இல்லாமல் போகமுடியாது, இல்லாதது இருக்கையென்ற தன்மையையும் அடைய முடியாது. ஆகவே இந்த மித்யா ரூபமான மூன்று அசுரத் தலைவர்களுக்கும் இருப்பு என்ற குணம் எப்படிப் பொருந்தும்?

வசிஷ்டர்: நீ சொல்வது சரியே; ஆனால், இருக்கை, இல்லாமை என்பவைகளை நீ எவ்வாறு உணருகிறாய்?

ராமன்: கதையில் சொல்லப்பட்ட அசுரத் தலைவர்கள் இல்லாதவர்கள், இங்கே இருக்கும் நாம் இருப்பவர்கள்.

வசிஷ்டர்: அவர்கள் இல்லாதவர்களானால் நம்மை மாத்திரம் இருப்பவர்களாக எப்படிச் சொல்லமுடியும்? அவர்கள் சித்தின் விகாரம். நாமும் சித்தின் விகாரம். நாம் இருப்பதாக இருந்தால் அவர்களும் இருந்தது சத்யம். அல்லது அவர்கள் இல்லாதவர்களானால் நாமும் இல்லாதவர்களே. இதுதான் வாஸ்தவம். இல்லாதது தான் இருப்பதாகத் தோற்றத்தைக் கொடுத்து வருகிறது. இதுதான் அக்ஞானம்.

### அசுரத் தலைவர்களின் விமோசனம்

ராமன்: இந்த மூன்று அசுரர்களுக்கும் விமோசனம் எப்பொழுது ஏற்படும்! அல்லது வேறு நற்கதியே கிடையாதா?

வசிஷ்டர்: இந்த விஷயத்தைப்பற்றி யம கிங்கரர்களே அவர்களுடைய அரசனாகிய யமதர்ம ராஜனிடமிருந்து கேட்டுத் தெரிந்து கொண்டார்கள். பிறகு அவர்கள் இதை அசுரத் தலைவர்களுக்கு மன ஆறுதலுக்காகச் சொன்னார்கள். இந்த ஜன்மத்திற்குப் பிறகு மீளகப் பிறந்து அதற்கப்பால் பறவை ஜன்மம் எடுத்து ஒருவரையொருவர் விட்டுப் பிரிந்து காலம் கழிக்கையில், அவர்கள் வசித்துவரும் காஷ்மீர தேசத்தில் மகா தீரனை அரசனும் அவனுக்கேற்ற மிக ஞானியாயுள்ள மந்திரியும் அமைந்திருப்பார்கள். அரசனுடைய உத்யான வனத்தில் இம்மூன்று அசுரர்களும், ஒன்று குருவியாகவும், ஒன்று கிளியாகவும், மூன்றுவது கொசுவாகவும் வசித்து வருகையில் மந்திரியானவன் தாம, வியால, கடன் என்றவர்களின் வரலாற்றைப் பற்றி ஒரு காவியம் செய்து அதை வெளியிடுவான். இதைக் கேட்டவுடன் இந்த மூன்று அசுரர்களும் மோக்ஷத்திற்குத் தயாராவார்கள்.

ஆகையால் சம்சாரமென்ற மோகத்தில் சிக்கிக் கொண்ட மாத்திரமே எப்பேர்ப்பட்ட மகான்களும் வெகு கேவல நிலையை, அடைவார்களென்று இக்கதையால் விளங்கும். இச்சை, தேவை என்பவையே இதற்குக் காரணம். எவன் ஒருவன் தேவையென்பதையே அறியாமலிருக்கிறனே அவனே மகா புருஷன்; எல்லோராலும் பூஜிக்கத் தகுந்தவன்.

விடா முயற்சியே மோக்ஷ ஸாதனம்

வசிஷ்டர்: இந்த மேற் சொன்ன ஸ்திதியை அடைய ஊக்கஞ்சேர்ந்த விடா முயற்சியே பிரதானம். இவ்வித முயற்சியால் உலகத்தில் அடையப்படாதது ஒன்றுமே இல்லை. பிரயத்தனம் பலனில்தான் முடிய வேண்டும். இதுவே நியதி. பலன் சித்திக்காவிட்டால் முயற்சியில் குந்தகமென்று அறிதல் வேண்டும், முயற்சி பயனில் முடியாதிருப்பதைவிட உலகத்தில் வேறு அதிசயம் கிடையாது. இப்படி முயற்சியால் உத்தம பதவியை அடைந்தவர்களைப்பற்றி நாம் புராணங்களில் கேட்டிருக்கிறோம். மருத்தன் என்ற அசுரன் தன் வீட்டிற்குப் பிராமணார்த்தத்திற்கு, பிரகஸ்பதியின் சகோதரனாகிய சம்வர்த்தனைக் கொண்டு தேவர்களை வரவழைத்தான். நந்தி பதினான்கு வயதில் மிருத்யுவை ஜயித்து அமரத்வத்தை அடைந்தான். சாவித்ரீ தன் வாக்கின் சமத்காரத்தால் மிருத்யுவிடமிருந்து தன் கணவன் சத்தியவானுடைய உயிரை மீட்டிவந்தாள். இதோ இருக்கும் விஸ்வாமித்திரர் க்ஷத்திரியனாகப் பிறந்தும் பிரம்ம ரிஷி ஆயினர்.

இவ்வித விடாமுயற்சியை நீ அகங்காரத்தை ஒழிப்பதில் உபயோகிப்பாயாக. அகங்காரத்தால்தான் பிரபஞ்சம் விஸ்தாரமடைகிறது. இந்த அகங்காரம் மூவகைப்பட்டது:—

(1) எல்லோராலும் அனுபவிக்கப்பட்டும் அதனால் பிரபஞ்ச வியவகாரத்தில் மூழ்கிக் கிடப்பதும் ஒன்று. இதுவே வேரோடு அறுபட வேண்டிய அகங்காரம்.

(2) பிரம்மத்தின் ஒரு அணுவாக எண்ணி வியவகாரத்தை முற்றிலும் மனதில் ஒழித்து உத்தம பதவியிலிருக்கும் அகங்காரம், இரண்டாவது.

(3) இவ்விரண்டிற்கும் மேலாக, தானே பிரம்மமென்று அறிந்து சம பார்வையுடனிருப்பது மூன்றுவதாகிய அகங்காரம். இப்பதவிகளைப் படிப்படியாக முயற்சியால் அடையலாம். ஆகவே நீ இவ்வித முயற்சியைச் செய்வாயாக.

ராமன்: எல்லாம் பிரம்மமென்றால் நாம் இப்பொழுது இருக்கும் நிலையும் பிரம்ம நிலை; பிறகு நம் பிரயத்தனத்திற்கு என்ன அவசியம்?

வசிஷ்டர்: ஆம், நீ சொல்வது சரியே; ஆனால் இந்த பிரும்ம நிலையில் துக்கமும் துன்பமும்தான் அனுபவிக்கப்படுகின்றன; இப்படியின்றி சாஸ்திர விதிப்படி பிரம்மத்வத்தை அடைந்தால் நித்யானந்தம் சம்பவிக்கும். ஆகையால் உன் இஷ்டப்படி நீ செய்யலாம்.

பீம, பாச, த்ருடன் விருத்தாந்தம்

வசிஷ்டர்: மேற் சொல்லிய கதையைத் தொடங்க, சம்பரன் தன் சேனாதிபதிகளுக்கும் சேனைகளுக்கும் சம்பவித்ததையும், இத்தோல்விக்குக் காரணமும் அறிந்துகொண்டு, மறுபடியும் மூவரைச் சிருஷ்டித்தான். இவர்களே பீம, பாச, த்ருடனென்ற சேனைத் தலைவர்கள். இவர்கள் ஆத்ம ஞானிகளாகவும், ஆகையால் எப்பொழுதும் எந்நிலையிலும் மனோ வேறுபாடின்றி தங்கள் காரியத்தைச் செய்கிறவர்களாகவும் சிருஷ்டிக்கப்பட்டார்கள். சேனைகளை இவர்களிடம் ஒப்படைத்துத் தேவர்களைச் சிக்ஷிக்கும்படி அனுப்பினான். கட்டளைப்படி தேவ சேனைகளைத் தாக்கி, இச்சையோ அல்லது கவலையோ யில்லாமல், ஓயாமல்

சண்டை செய்து வந்தார்கள். ஆகையால் அபஜய மென்பதையும் அறியவில்லை. தாங்களாகவே சண்டையைத் தொடராமல், தங்களை எதிர்த்து வந்த தேவர்களை விடாமலும், ஒருவித துவேஷமும், பற்றுதல் இன்றி தங்களுக்கேற்பட்ட கட்டளையை நிறைவேற்றும் எண்ணத்துடன் சண்டை செய்துவந்ததால், ஜயத்தையே கைப்பற்றியிருந்தார்கள். தேவ சைன்யங்கள் சளைத்துக் களைத்து இனிச் சண்டை செய்வது முடியாதென்று அறிந்துகொண்டு ரணகளத்தைவிட்டு ஓடி பிரம்மதேவனிடம் சரணமடைந்தார்கள். பிரம்ம தேவன் இவர்களின் முறையைக் கேட்டு, இருக்கும் நிலைமையையும் அறிந்துகொண்டு இனித் தேவர்களால் யாதொன்றும் செய்ய முடியாதென்பதை உணர்ந்தார். தானே இவ்விஷயத்திற்கு ஒரு முடிவு செய்வதாகக் கூறி, சம்பரனை நேராகத் தேடிச் சென்று அவனை யுத்தத்தில் சம்ஹாரம் செய்தார். இதனால் சம்பரனும் முக்தியை அடைந்தான். இப்படி யஜமானன் காலமானதும் பீம, பாச, த்ருடனென்ற அசுரத் தலைவர்களுக்கு யுத்தம் செய்ய வேண்டிய கடமை ஒழிந்து விட்டது. காற்று வீசும் வரையில் தீபம் அசைந்து கொண்டிருக்கும், காற்று நின்றவுடன் தீபமும் அசையாமல் ஒளியைக் கொடுக்கும். அதுபோல சம்பரனாகிய காற்று நின்றவுடன், ஆத்ம ஞானிகளாகிய பீம, பாச, த்ருடன் மூவரும் தங்கள் சுய ரூபமாகிய அறிவாக நின்றார்கள். இதனால் தேவர்களும் தப்பிப் பிழைத்தார்கள்.

### பிரபஞ்சம் இயற்கையில் இல்லை, செயற்கையில் உண்டு

ஆகவே பிரபஞ்சமென்பது வாக்கினாலும் பாவனையாலும் மாத்திரம் இருக்கை யென்ற

தன்மையை அடைகின்றது. ஆகையால் இது நம் செயற்கையால் ஏற்பட்ட பிரபஞ்சமே ஒழிய இயற்கையாக ஏற்பட்டதல்ல. எல்லா வஸ்துக்களும் நம் பாவனைகளே. ஆக இந்த பாவனைகளில்தான் பல என்ற உணர்ச்சிகள் நமக்கு ஏற்படுகின்றன. பாவனை ஒழிந்தால் எல்லாப் பொருள்களும் அஸ்தமன மடையும்; சத்திய மொன்றுதான் யாதொரு மாறுபாடுமில்லாமல் நிற்கும்.

பிரபஞ்சம், சம்சாரம் என்பவைகள் மனம் என்னும் தோற்றத்தில்தான் பிரதிபலிக்கின்றன. மனம் அசைவற்று நின்றால் இவைகளும் வேறுபாடில்லாமல் ஏக காட்சியைத்தான் அளிக்கும். ஆனால் மனம் என்பதே ஒரு கற்பனை ; ஆகையால் இதில் பிரதிபலிக்கும் காட்சிகளும் அசத்யமாகத்தான் இருக்கவேண்டும், மனம் நாசமடைந்தால் பந்தம்-மோக்ஷம் என்பவைகளும் நாசமடையும். ஆத்மாவில் இவைகளுக்கு இருப்பிடமேது ? இவைகளொன்றும் அதில் ஒட்டாது. இவைகளை நீ அடிக்கடி ஆராய்ச்சி செய்து பகுத்தறிந்து அனுபவத்திற்குக் கொண்டுவருவாயாக. அனுபவத்தில்தான் பலன் ஏற்படும். தத்துவங்களை அறிந்துகொள்வதில் மாத்திரம் யாதொரு பயனும் இல்லை. அனுபவத்தில் கொண்டுவந்தால்தான் இந்திரியங்களும் மனமும் அடங்கும். அதனால் சித்தியும் மனச்சாந்தியுமுண்டாகும். சாந்தி உண்டானால் வாழ்க்கையை யாதொரு கவலையுமின்றி அனாயாசமாக நடத்தலாம். இதுதான் ஞானிகளுக்கேற்ற மார்க்கம். கர்மங்களை யாதொரு பற்றுதலுமின்றிச் செய்து வருவதே அறிவாளிகளின் நோக்கம். இத் தத்துவங்க

ளெல்லாம் வாழ்க்கையைச் சீர்திருத்தும் பொருட்டே சொல்லப்பட்டன.

வால்மீகி: வசிஷ்டர் மேற்படி உபதேசங்களை எடுத்துரைத்தும், ராமனுக்குப் புத்தி முற்றிலும் தெளிவடையாததால், மீண்டும் வசிஷ்டரை நோக்கி பிரம்மமொன்றுதான் சத்யமென்றால் அசத்யமாகிய ஜகத் அதிலிருந்து உற்பத்தியானதென்பது எப்படிப் பொருந்தும் என்று கேட்டான். வசிஷ்டர் இதைக் கேட்டதும் சற்று ஆலோசிக்கலானார். மிகத் தெளிவாகவும், நானாவித நியாயங்களைக் கொண்டு தத்துவங்களை எடுத்துச் சொல்லியும் ராமன் புத்திக்குப் புலப்படவில்லையென்று உணர்ந்தார். இதற்குக் காரணம் அவன் இன்னும் பக்குவமடையாததே. ஆகையால் அவன் இப்பொழுது தத்துவங்களை மனதில் வாங்கிக் கொண்டால் போதுமென்றார்.

பிறகு இவைகளை அடிக்கடி ஆராய்ச்சி செய்தால் நாளடைவில் பக்குவமடைவானென்றும் சொன்னார். இப்படிச் சொல்லி முடித்த பிறகு உபதேசத்தைத் தொடர்ந்தார்.

### ஜகத்தாகிய காட்சி நம் மனதில் சதா மாறுதலடைந்துகொண்டே இருக்கிறது - இதன் தத்துவம்

வசிஷ்டர்: இந்திரஜாலத்தைப் பார்க்கும்பொழுது நாம் மிகவும் அசம்பாவிதமான விஷயங்களையும் விசித்திரமான காட்சிகளையும் காண்கிறோம். மிகச் சொல்ப நேரம் காணும் காட்சிகளே இவைகள். இப்படிப் போலவேதான் ஜகத்தாகிய காட்சியும். மானிடர்கள் உலகத்தில் உதித்து, வளர்ந்து, அழிவடைவதும் சொற்ப காலத்தில்தான். இந்த அளவிட்ட காலத்தில் இவர்கள் மனதில் ஜகத்தின் சொரூபம் சதா மாறுத

லடைந்தே வருகிறது. எந்த ஜகத் சொரூபமும் வாஸ்தவமென்று சொல்லுவதற்கில்லை. மறு பிறப்பில் அனுபவிக்கும் ஜகத்தானது மறுபடியும் வேறானது. அவ்விடத்தும் இப்படியே க்ஷணத்திற்கு ஒரு சொரூபத்தை இவர்கள் மனதில் கொடுத்து வருகிறது. ஆகையால் இதைச் சத்யமென்று எவ்வாறு சொல்லத் தகும்? பிரம்மம் ஒன்றுதான் சத்யம். இதில் தோன்றும் தோற்றங்களே ஜகத். இக் காட்சிகள் பிரம்மத்தை ஒட்டுவதில்லை, ஆனால் பிரம்மமின்றி காட்சிகள் ஏற்பட முடியாது. காட்சிகளும் அனுபவங்களும் பிரம்மத்தைத் தவிர்த்து வேறாக இருக்கமுடியாது. அப்படி வேறாக நினைப்பதே அஞ்ஞானம், ஏனெனில் அது தான் சம்சாரத்திற்கு காரணமாகிறது. சமுத்திரத்தில் எவ்வளவோ அலைகள் ஏற்படினும் அவைகளெல்லாம் ஜலத்தைத் தவிர வேறில்லையல்லவா? அது போலவே ஜகத்தும் பிரம்மத்தைத் தவிர்த்து வேறில்லை.

ஆகையால் ஜகத்தை பிரம்மத்திலிருந்து உற்பத்தியானதாக நினைப்பது தவறு. இவ்விதமான எண்ணம் உண்டாவது மனதின் தன்மையாலும் அதன் சக்திக் குறைபாட்டாலுமே. ஆகையால் அது அசத்யமான மனத்தின் அனுபவமே தவிர, பிரம்மத்தின் அனுபவமல்ல. சத்யமாக ஒன்று எப்பொழுதும் நிலைத்திருப்பதால்தான் அசத்யமாகிய தோற்றங்களுக்கும் இடம் கொடுக்கிறது.

ராமன்: இந்த பிரம்ம தத்வத்தைப்பற்றித் தாங்கள் எனக்கு வெகு கம்பீரமாகவும் சாதுர்யமாகவும் எடுத்துரைத்ததின் பலனாக, எனக்கு ஒரு க்ஷணம் பிரம்மத்தை அறிந்ததாகவும் அடுத்த க்ஷணம் மேகத்தால்

மறைந்த சூரியனைப் போலவும் இருக்கிறது. சந்தே கங்கள் மூற்றிலும் நிவர்த்தியாகவில்லை. ஆகையால் இந்த சுத்த, களங்கமற்ற பிரம்மத்தில் அக்ஞான அழுக்கு எப்படி சேர்ந்தது என்பதை மீண்டும் விவரித்துச் சொல்ல வேண்டிக்கொள்கிறேன்.

பேதங்களை அதிகரிப்பதே வாக்கின் கருத்தாகும்

வசிஷ்டர்: ராமா! என் வார்த்தைகளால் உனக்கு பிரம்மம் ஒரு க்ஷணம் அறியப்பட்டும் அடுத்த க்ஷணம் அறியப்படாமலுமிருந்தால் பிரம்மம் அப்படித்தான் இருக்கவேண்டுமென்று அறிவாயாக. இது இப்பொழுது உனக்கு விளங்காது. சித்தாந்தப் படுத்தும் காலத்தில் நீயாகவே இதை அறிவாய். தற் சமயம் என் வாக்குகளின் கருத்தை மனதில் வாங்கிக் கொள்வதே உனக்குத் தகும். வார்த்தைகள் பேதத்தை அனுசரித்துத்தான் கற்பிக்கப்படுகின்றன. பேதங்களைத் தள்ளிவிட்டால் வார்த்தைகளுக்குத் தேவை ஏது? இவ்வார்த்தைகள் ஒருவர்க்கொருவர் செய்யவேண்டிய வியவகாரத்தின் பொருட்டும், உப தேசத்தின் பொருட்டுந்தான் பிரயோஜனம். வார்த்தை யின்றி, தத்வங்களைப் பிறருக்குப் போதிக்கமுடியாது. ஆகையால் வாக்கானது பேதங்களை அனுசரித்து அக்ஞானத்தின் விஸ்தரிப்பைச் சுட்டிக்காட்டும்.

அக்ஞானத்திலிருந்துதான் ஞானம் ஏற்படவேண்டும்

ஆயினும் பிரம்மத்தை அறிய இந்த அக்ஞான ஸ்திதியிலிருந்துதான் முயற்சிக்கவேண்டும். அக் ஞானத்தைக் கொண்டுதான் ஞானத்தை ஸ்தாபிக்க லாம். சுத்த அக்ஞானத்திலிருந்து கொஞ்சம் கொஞ்ச மாய் ஞானத்தை விருத்தி செய்துகொண்டு பிறகு

பிரயத்தனத்தாலும் விவேகத்தாலும் பூர்ண ஞானத்தை அடைவதுதான் முறை.

ஆகவே மானிடர்கள் படும் துன்பமெல்லாம் வாஸ்தவத்தில் இல்லாததானதும் ஆராய்ந்து பார்த்தால் உடனே நாசமடையும் தன்மையை அடைந்ததாகும் அக்ஞானத்தாலேதான், ஏற்பட்டதென்று ஏற்கனவே சொல்லப்பட்டது. சமுத்திரத்தின் ஒரு பாகத்தில் அலைகள் கிளம்புவதுபோல, சர்வ அமைதியுற்ற பிரம்மத்தில் அதனுள் அடங்கியே இருக்கும் ஸ்பந்த சக்தியால் ஒரு அசைவு ஏற்பட்டு பிரபஞ்சத்தின் உற்பத்திக்குக் காரணமாயிற்று. சமுத்திரத்தின் உள்பாகம் அசைவற்றும் கம்பீரமாகவும் இருப்பதுபோல பிரம்மமும் கேவலம் சாக்ஷியாய் நிற்கின்றது. இயக்கத்திற்குக் காரணமாய் இருப்பதைத்தான் சித் சக்தியென்று சொல்லுவது. இதைத்தான் இதர கொள்கைகளையுடையவர்கள், பிரகிருதி, மலம், கர்மம், பந்தம், இச்சை, மாயையென்று பலவாறாகக் குறிப்பிடுகிறார்கள். எப்பெயரிட்டாலும் அது ஆத்மாவைத் தவிர வேறாகாது.

மேற்சொன்ன இயக்கத்தின் காரணத்தால் பஞ்ச பூதங்களும் ஒன்றன்பின் ஒன்றாகக் கற்பிக்கப்பட்டு இவைகளின் சம்பந்தத்தாலும் வேறுபாடுகளினாலும் பதினான்கு முக்கிய தத்துவங்கள் ஏற்பட்டு பிரபஞ்சத்திற்கு மூலகாரணமாய் நின்றன. சித்தின் விஸ்தரிப்பு இப்படி நடைபெற்று வருகையில் அகங்காரமென்பது கிரமமாகவும், சகஜமாகவும் ஏற்பட்டு, இதிலிருந்து புத்தியென்னும் ஸ்திதியும், புத்தி விஷயங்களில் ஈடுபட்டுக்கொண்டபொழுது மனம்

என்னும் தன்மையும் ஏற்பட்டன. மனம் நிலைபெறாமல் பல வியவகாரங்களில் பற்றுதலையடைவதால் சித்தமென்று சொல்லப்படும் கேவல ஸ்திதியை நாளடைவில் அடைகிறது. இந்த நிலைமையில்தான் இந்திரியங்களைக் கூடிய உடல் அல்லது க்ஷேத்திரத்தை அடைகிறது. இந்த க்ஷேத்திரத்திற்கு அதிகாரி சித்தம், மனம், புத்தி, அகங்காரம், ஜீவன் என்று பல பெயரைத் தரித்த ஆத்மாவே. இந்த க்ஷேத்திரமாகிய உடல்தான் முதுமை, மரணம் என்பவைகளுக்குப் பாத்திரமாகும். மூட ஜனங்கள் தாங்கள் ஆத்மாவைக் காட்டிலும் வேறில்லை என்பதை மறந்து, ஒரு மலையைக் காணும்பொழுது அதைத் தாங்கள்தான் தாங்கி நிற்பதாக எண்ணி, எல்லா வியவகாரங்களிலும் தாங்களே கர்த்தாவாக நினைத்து அதனால் கோபம், தாபம், துக்கம், முதுமை, மரணம் இவைகளுக்கு இருப்பிடமாகிறார்கள். இதுதான் அக்ஞானம். யாருக்கு இந்த அக்ஞானமென்று யோசித்தால், உண்மை அறியப்படும்.

வால்மீகி: இவைகளைக் கேட்டதும் ராமனுக்கு சற்று மனக் குழப்பம் ஏற்பட்டு வசிஷ்டரை மறுபடியும் இந்த தேகம் உண்டான கிரமத்தை விஸ்தரித்துச் சொல்லும்படி கேட்டுக்கொண்டான். இதற்கிணங்கி வசிஷ்டர் மீண்டும் மேற்சொல்லியவைகளை விவரித்து ராமனுக்கு உரைத்தார்.

ஞானமார்க்கத்தை அனுசரிப்பது வாழ்க்கையின் பொருட்டே

வசிஷ்டர்: இந்த ஞான மார்க்கத்தை அனுசரித்து இதனால் ஏற்படும் விவேகத்தை வாழ்க்கையில் உபயோகிப்பதே உபதேசத்தின் கருத்து. ஆகையால்தான் பெரியோர்கள் இத்தத்துவங்களைப் பொது

ஜனங்களுக்கு அடிக்கடி எடுத்துரைக்கிறார்கள். ஆராய்ந்து பார்த்தால் வாழ்க்கையில் நேரும் சுக துக்கங்கள் மனதையும் தேகத்தையும்தான் பாதிக்கக் கூடும். தேகமோ, மரம் மட்டையைவிட வேறல்லாத ஜடப்பொருள். முதுமை, மரணம் இவைகளால் பீடிக்கத்தக்கது. உணர்ச்சி, அறிவு என்னும் சூக்ஷமத்தை அறியாதது. ஆகவே இதன் பாதை நம்மைப் பாதிக்காது. பிறகு மனம் என்பது சூன்யத் தன்மையை யுடையது. இல்லாத ஒரு கற்பனை. அது ஆத்மாவைக் காட்டிலும் வேறல்லாததாக இருந்தும் அதை மறந்து வேறாக இருப்பதான ஒரு மோக நிலை. இந்த மோகம் பாதிக்கப்பட்டால் யாருக்கு நஷ்டம்? ஆத்மாவையோ ஒன்றும் ஒட்டாது, ஒன்றும் பாதிக்காது. இதனால் ஏற்படும் சுக துக்கங்களாகிய மோகங்கள் மனம் - தேகம் என்னும் மோக ரூபங் களைத்தான் பாதிக்கின்றன. ஆகையால் இதைக் குறித்து யார்தான் கவலைப்படலாம்?

ஒரு மனிதனின் நடத்தையைப்பற்றி கவனித் தால், அவன் தன்னை நெருங்கி இருப்போர்களைக் குறித்தும், தனக்கு வாழ்க்கையில் தேவையானவை களைக் குறித்தும்தான் இன்ப துன்பங்களை அடை கிறான். இவைகளைத் தவிர்த்து இதர விஷயங்களைப் பற்றியோ, அல்லது ஜனங்களைப்பற்றியோ ஒரு கவலையுமின்றி யிருக்கிறான். இவைகள் விஷயமாக ஒருவித மனக்கலக்கமும் அடையாமல் சற்று ஒரு அறிவாளியைப்போல் விளங்குகிறான். இதேமாதிரி தன்னுடைய சிறிய உலகத்திலும் நடந்துகொண் டால் மனோசாந்தி யடைவது எளிது. யாருக்குமே வெளி விஷயங்களில் ஈடுபடுவதாக இருந்தால்

கவலைக்கு அளவே இல்லை. அப்படியின்றி வெளி விஷயங்களில் ஈடுபடாமலிருப்பது போலவே தன் விஷயங்களிலுமிருந்தால் இன்பத்திற்கு அளவே இல்லை. ஆகவே நாம் கவனித்த மனிதனின் நடத்தையில் யாதொரு ஒழுக்கமும் நீதியும் கிடையாது. தானாகவே சில விஷயங்களைத் தியாகம் செய்தும் சிலவைகளை மேற்கொண்டும் தானாகவே இன்ப துன்பங்களுக்குப் பாத்திரமாகிறான். ஞானிகளோ எல்லா விஷயங்களையும் ஒரே நோக்கத்துடன் பாவிக்கிறார்கள். அதாவது மோகமாக; ஆகையால் சாந்தத்தை அடைந்திருக்கிறார்கள். ஆகவே நீயும் இவ்விதம் இருப்பாயாக.

ஜகத் மோகம் காலதேச உணர்ச்சியால் ஏற்படுகிறது

வசிஷ்டர்: நாம் இதுவரையில் சொல்லியதன் பொருளாவது - இந்த சம்சாரம், ஜகத் என்பவைகள் ஒரு நீண்ட சொப்னமென்றே. தேச காலம் என்னும் கட்டுப்பாடுகளில் அடங்கியிருக்கும் காலத்தில்தான் பிரபஞ்சமாகிய தோற்றம் காணப்படுகிறது. இவ்விரண்டும், ஆனால், கற்பனைகளென்று முன்னமே சொல்லப்பட்டன. இவைகள் நீங்கும் வரையில் தான் இக்காட்சிகளும் காணப்படுகின்றன; இவைகளை விட்டுப் பார்த்தால் காட்சிகளும் தோன்றுவதில்லை. இக்காட்சிகள் எக்காலத்தும் காணப்பட்டே வருகின்றன; ஆரம்பமும் இல்லை, அழிவும் இல்லை. எவ்வளவோ பிரம்மா, விஷ்ணு, சிவன் இதில் தோன்றியும் நாசமடைந்துமிருக்கின்றார்கள். தோன்றல், இருத்தல், அழிதல் இவைகளே சிருஷ்டியின் கிரமம். திரும்பித் திரும்பி இவைகள் சதா நடைபெற்றுக்கொண்டே வரும். ஒன்றும் சாசுவதமாக இருப்பதில்லை.

ஆதலால்தான் இவைகள் சத்யமாகாதென்று சொல்லப் படுவது. இந்த அசத்தாகிய தோற்றம் இப்பொழுது தோன்றுவதுபோல்தான் எக்காலத்தும் தோன்றி வரும். இதில் அசம்பாவிதமாக, ஏதாவது புதிய தாக காணலாமென்பதற்கும் இடமில்லை. நியதியின் கிரமம் ஒருபொழுதும் மாறாது. ஆகையால் விபரீத மான நடத்தைக்கோ உலகப் போக்குக்கோ யாதொரு காரணமுமில்லை. இதன்படி உலகம் ஒரு காலம் நாச மடையலாமென்னும் கொள்கைக்கும் இடமில்லை. அப்படியின்றி உலகம் ஒரு சமயம் அழிந்தாலும் நமக்கென்ன நஷ்டம்? இவ்வித மனோநிலையையும் திடத்தையும் நீ அடைவாயாக.

இந்த இந்திர ஜாலமாகிய சம்சாரம் சத்யமா அல்லது அசத்யமா என்பது தாசுரனுடைய வரலாற் றிலிருந்து அறியப்படும்.

### தாசுரன் விருத்தாந்தம்

மகத தேசத்தில் முன்னொரு காலத்தில் சிர லோமா என்ற ஒரு முனிவர் காட்டில் தவம் செய்து வருகையில் பத்தினியை இழந்து தன் குமாரனாகிய தாசுரனென்ற சிறுவனைத் தானே கொஞ்ச காலம் பாதுகாத்து வந்தார். சில வருஷங்கள் சென்றதும் சிரலோமாவும் காலமானார். இளைஞனான தாசுரன் மிகவும் துக்கித்துப் புலம்பினான். அனாதையான நிலை மையை இச்சிறுவனால் காட்டில் தனித்துத் தாங்க முடியவில்லை. இந்த ஸ்திதியைக் கண்ட அந்தக் காட்டுக்கு அதிபதியாகிய வனதேவதை இளையவன் பேரில் கருணைகொண்டு, அவனுக்குத் தேறுதல் சொல்லும் பொருட்டு அசரீரியாகச் சில வாக்குகளைச்

சொன்னாள். "சிறுவனே! துக்கத்தில் மூழ்கிக் கிடப்பது உனக்குத் தகாது. சூரியன் உதிக்கும் பொழுதே அஸ்தமிப்பது நிச்சயமென்று நாம் எப்படி அறிவோமோ அப்படியேதான் மனிதர்களின் வாழ்க்கையும். இதை அறிந்தும், மேலும் நீ தவத்திலும் ஞானத்திலும் சிறந்த பிராமணன் புத்திரனாக இருந்தும் இவ்வளவு பரிதபிக்கும் நிலைமையிலிருப்பது தகுதியல்ல. ஆகையால் நீ உன் முன்னேற்றத்தைக் குறித்து பிரயத்தனம் செய்" என்று சொல்லி நிறுத்தினாள்.

இதைக் கேட்டதும் தாசுரன் சற்று சிந்தையில் ஆழ்ந்து சொற்ப நேரத்திற்கெல்லாம் ஒரு முடிவுக்கு வந்தான். இந்த முடிவின் பிரகாரம், மிகவும் அசுத்தமான பூமியில் வாசம் செய்துகொண்டு நித்யகர்மங்களைச் செய்வது சரியல்லவென்று அவனுக்குத் தோன்றிற்று. ஆகையால் அந்தக் காட்டை அலங்கரித்து வந்த ஒரு பெரிய மரத்தின்மேல் தவம் செய்வதே சரியென்று தீர்மானித்து அப்படியே செய்யத் தொடங்கினான். இந்தத் தவத்தின் முறைப்படி, நிலத்தில் தீயை மூட்டி ஹோமத்திற்குத் தன் தேகத்தை அறுத்து ஆஹுதி செய்தான். பிராமணனுடைய மாமிசம் தேவர்களுக்கு ஏற்காததால் இந்த ஹோமத்தை நிறுத்த, தேவர்களின் பொருட்டு அக்னிபகவான் தாசுரன்முன் பிரத்யக்ஷமாகி அவனுக்கு வேண்டிய வரனைக் கொடுப்பதாகச் சொல்லி யாகத்தை நிறுத்தும்படி கேட்டுக் கொண்டார். கிடைத்த வரப்பிரசாதத்தால் அக்காட்டில் மேரு பருவதத்தைப் போல் ஒரு பிரம்மாண்டமான மரத்தை உற்பத்தி செய்துகொண்டு இவ்வுலகத்தி

விருப்பதுபோல மர உலகத்திலும் ஏற்பட்ட பறவை சம்சாரங்களிடையில் தாசூரன் தன் தவத்தைத் தொடங்கினன். வெகு காலம் இப்படித் தவம் செய்தும் ஒரு பலனும் கிட்டாமலிருப்பதைக் கண்டான். இதற்குக் காரணமென்னவென்று தீர்க்கமாக ஆலோசனை செய்தபிறகு, கேவலம் கர்மங்களைச் செய்வதாலும், தவம், யாகம், யக்ஞம் இவைகளாலும் ஞானம் சித்திக்காதென்ற திர்மானத்தை யடைந்தான். சங்கல்பத்தை ஒழித்தால்தான் ஞானம் ஏற்படுமென்ற முடிவையும் அடைந்தான். இதன் பிறகு இம்மார்க்கத்தில் பிரயத்தனங்களைச் செய்தான். இதன் பலனாக, கொஞ்சம் கொஞ்சமாக அக்ஞானம் நீங்கி கடைசியாக பூர்ண ஞானத்தையும் அடைந்தான்.

ஒரு நாள் அங்கே அருகில் வசித்து வந்த ஒரு அப்சரஸ் தாசூரனிடம் வந்து வணங்கி, தான் அனாதையாக அக்காட்டில் காலத்தைச் செலுத்திவருவதாகவும் ஆகையால் தன்னை ஆதரவு செய்யும்பொருட்டு முனிவர் தன்னுடன் கூடி வாழ வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டாள். இப்படி இருவரும் சேருவதால் முனிவருடைய ஞானத்தையும் தன் அழகையும் கூடிய புத்திரன் உதித்து அதனால் உலகத்திற்கு நன்மை ஏற்படுமென்றாள். இதைக் கேட்ட தாசூரன், சம்சார வாழ்க்கை தனக்குத் தேவையில்லை யென்றும் ஆனால் அவளுக்குத் தேவையானது காப்பாற்றத்தகுந்த ஒரு புத்திரன் தானே யென்றும் அவ்வாறே ஒரு வரனைக் கொடுத்து அனுப்பினார். அப்சரஸ் இவ்வரனைப் பெற்றுக்கொண்டு தன் இருப்பிடம் சென்று கொஞ்ச காலத்திற்கெல்லாம் ஒரு புத்திரனை அடைந்தாள். பன்னிரண்டு வருஷகாலம் புத்திரனை வளர்த்து, பிறகு

அவன் கல்வி பயிலும்பொருட்டு, புத்திரனை அழைத்துக்கொண்டு மீண்டும் முனிவரிடம் சென்றாள். முனிவர் இவள் வேண்டுகோளுக்கிணங்கி சிறுவனுக்கு ஞானோபதேசம் செய்ய ஏற்றுக்கொண்டார். ஆனால் சிறுவனைத் தன் வசம் ஒப்புவித்து அவள் தன் இருப்பிடம் செல்லவேண்டுமென்று ஆக்ஞாபித்தார். வாக்களித்தபடி அப்சரஸின் புத்திரனுக்குத் தெரியவேண்டியவைகளையெல்லாம் போதித்து, பிறகு ஞானத்தையும் உபதேசித்தார். இந்த ஞானோபதேசம் இங்கு சொல்லப்படும்.

ஜகத்தோற்றம் மனோமாத்ரம்

தாசுரன் : ஜகத்தென்று வழங்கப்பட்டு நம்மால் அனுபவிக்கப்படுவதாகத் தோன்றுவது எல்லாம் சங்கல்பத்தில்தானே தவிர, வாஸ்தவமாக அவ்விதச் சத்தியம் ஒன்றுமில்லை. சங்கல்பமாக மனதில் தோன்றுவதை வெளியில் ஜகத்தாக உணருகிறோம். சங்கல்பமின்றி இருக்கையில் வெளித் தோற்றங்களுக்கும் யாதொரு உருவமில்லை. இருக்கை யென்னும் தன்மையும் கிடையாது. அல்லது உருவம் இருப்பதாகக் கொண்டாலும் அவ்வுருவத்தில் காணும் மாறுபாடுகள் சங்கல்பத்தில் இருக்கின்றனவே தவிர வஸ்துக்களில் கிடையாது. ஏனெனில் இவ் வஸ்துக்கள் அவைகளிலிருக்கும் நிலைமையிலேதான் இருக்க முடியும். ஆனால் அவைகள் அளிக்கும் தோற்றங்களோ மாறுபாடுகளை அடைந்தவைகளாக இருப்பதால், இம்மாறுபாடுகள் மனோ விகாரங்களென்றே யாகும். இவைகளே சங்கல்பம் எனப்படும். ஆகவே பிரபஞ்சத்தின் விஸ்தரிப்புக்குக் காரணமாயுள்ள மனோ பாவங்கள் மனத்திலேயே உதித்து, வெளிப்

பதார்த்தங்களைக் கருவிகளாகக் கொண்டு, இவைகள் மனதால் அனுபவிக்கப்பட்டு, இவ்வனுபவங்களே பிரபஞ்சமெனும் தோற்றமாகின்றன. ஆகையால், சங்கல்பம் அல்லது பாவனை தான் பிரபஞ்சம், சம்சாரம்.

மோக்ஷத்தைக் குறித்த முயற்சியாவது என்ன ?

ஆகவே முக்தியையடைய சங்கல்பத்தை ஒழிக்க வேண்டும். இதை ஒழிக்க ஆராய்ச்சியும் முயற்சியும் தான் பிரதானம். முயற்சியாவது பிரபஞ்சம் சத்ய மல்ல வென்ற அறிவு மனதில் வேரூன்றும்படி சதா யத்தனிப்பதே. இது அநித்யம், எக்காலத்திலும் இருக்கவில்லை, அது இருப்பதெல்லாம் நம் மனதில் தான். மனம் அடங்கினால் பிரபஞ்சமும் மனதில் நாச மடைகின்றது, இவ்விதம் ஒவ்வொரு விஷயத்தை யும் ஆராய்ச்சி செய்து, அதன் இல்லாமையை உணர்ந்துவந்தால் பிரபஞ்சத்தின் சுய சொரூபம் காணப்படும்.

இப்படியன்றி, பிரபஞ்சம் சத்யமென்று நினைத் தாலும் அது ஆத்மாவைத் தவிர்த்து வேறல்லவென்ற அறிவு ஏற்படவேண்டும். சகலமும் ஆத்மாவாக இருப் பின் இரண்டென்னும் தன்மைக்கு இடமேது? ஆதலால் இவ்விதமும் மனதில் சங்கல்ப விகல்பங்கள் ஏற்படாமலிருக்கும். பிறகு மனது ஆத்ம சொரூ பத்தை அடையும்.

இந்த பாவனையையும் தள்ளி, பிரபஞ்சம் சத்து மில்லை, அசத்துமில்லை என்பதை ஆச்ரயிப்பது எல்லாவற்றிலும் மேலான தத்துவம். இம் மூன்றில் எந்த மார்க்கத்தைக் கைக்கொண்டாலும் முடிவில் சம திருஷ்டி ஏற்படும். இந்த சம திருஷ்டியே ஆத்ம

உணர்ச்சி யென்பது. ஆகையால், ஞானத்திற்குச் சாரமாய் நிற்பது; முதலில் பிரபஞ்சம் ஒரு மனோமோகமென்பது; (2) அல்லது, பிரபஞ்சமே பிரம்மம் (ஆத்மா) என்ற பாவனை (3) அதுவுமில்லாவிட்டால், பிரபஞ்சம் சத்துமல்ல அசத்துமல்ல என்ற பாவனை இதையே வேறுவிதமாகச் சொல்வோமாகில் (1) நான் எதற்கும் கர்த்தாவில்லை யென்றும், நானே சகலத்திற்கும் கர்த்தாவென்றும், நான் கர்த்தாவுமல்ல அகர்த்தாவுமல்ல வென்றும் மூவாறுகப் பொருள் படும்.

இது படிப்படியாகத்தான் அடையப்படும். பிரபஞ்சம் முழுதும் வேண்டும் வேண்டாமென்ற இரு பாவனைகளைக் கொண்டே சம்சாரச் சுழலில் சிக்கிக் கொண்டு தவிக்கின்றது. இவ்விரண்டைக் கடந்தவர்கள் மிகவும் சொல்பமே. எவ்விதப் பதவியில் இருந்த போதிலும், மூன்று லோகங்களுக்கும் அதிபதியாயிருந்தாலும், வேண்டும் வேண்டாம் என்பவைகளைத் தியாகம் செய்யாமலிருக்கும் வரையில் யாவரும் சம்சாரத்திலிருந்து விடுதலை அடைய முடியாது. இவர்கள் ஒரு ஞானிக்குத் திரணமாத்திரம்.

ஸ்திதிப் பிரகரணம் முற்றிற்று.

# 5

## உபசமப் பிரகரணம்

### (சாந்தி அடையும் முறைகள்)

வால்மீகி

ராமனின் ஆலோசனை

வசிஷ்டர் இவ்வாறு சொல்லி முடித்ததும், அங்கே வந்திருந்த மகாசபை கலைவதற்கு அறிக்கை கொடுக்குமாறு ஆசனத்தை விட்டு எழுந்தார். சபையோர்களும் உடனே எழுந்து ஒவ்வொருவராக ஆசாரியரை வணங்கி விடைபெற்றுக்கொண்டு தத்தம் தினசரி காரியங்களைத் தொடரச் சென்றனர். வசிஷ்டரும் விசுவாமித்திரருடன் தம் ஆசிரமத்தை நாடிச் சென்றார். தசரத புத்திரர்களும் இன்னும் இதர பெரியோர்களும் முனிவர்களைப் பின்தொடர்ந்து வழிகாட்டி ஆசிரமத்தில் விட்டுவிட்டு ஆசீர்வாதம் பெற்றுக் கொண்டு வீடு திரும்பினார்கள்.

ராமலக்ஷ்மண சகோதரர்கள் மேற்கொண்ட கர்மானுஷ்டானங்களைச் செய்து முடித்துக்கொண்டு, போஜனம் செய்து, நித்ராகாலமென்று வழங்கிவரும் வேளையில் படுக்கைக்குச் சென்றார்கள். ராமன் அன்று இராப்பொழுதெல்லாம் உட்கார்ந்தவண்ணம் வசிஷ்டரின் வாக்குகளை ஞாபகம் செய்துகொண்டு அவைகளைப்பற்றி ஆலோசித்துக் கொண்டிருந்தான்.

யோசிக்க யோசிக்க சந்தேகங்கள் பெருகின. வெகு நேரத்திற்குப் பின், கொஞ்சங் கொஞ்சமாக புத்தி தெளிவுபட்டு ஒரு முடிவும் தென்பட்டது.

மனதை அசையாவண்ணம் செய்துகொள்வதே அவசியமென்று புலப்பட்டது. ஆனால் இதை எப்படி அடைவது? மனத்தின் சஞ்சலத்தையோ சொல்லிவிட முடியாது. இதை ஒரு விஷயத்திலும் ஈடுபடாமல் நிலை நிறுத்துவது பிரம்மப் பிரயத்தின மல்லவா? ஆயினும் சாந்தி அடைவதின் பொருட்டு இவ்வாறு பயிற்சி செய்வதை விட்டால், சம்சாரச் சுழலினின்று தப்புவது எப்படி?

இரவை இவ்விதம் கழித்து, அதிகாலையிலேயே எழுந்து கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு பரிவாரங்களுடன் முனிவரின் ஆசிரமத்துக்குச் சென்று இரு மகரிஷிகளையும் ரதத்தில் அமரச் செய்து சபா மண்டபத்திற்குத் திரும்பினார்கள். தசரதன் முனிவர்களைப் பணிந்து நல்வரவு கூறி, வசிஷ்டருடைய மகா வாக்யங்களைப் புகழ்ந்தான். பிறகு எல்லோருமாக ஆசனத்தில் அமர்ந்தார்கள். மகா சபையும் தினம்போல் கூடியிருந்தது. வசிஷ்டரின் முகத்தையே அனைவரும் உற்று நோக்கிய வண்ணம் இருந்தார்கள். நிசப்தமான சமயம் பார்த்து ராமனை நோக்கி வசிஷ்டர் தான் நேற்று உரைத்தவைகளை ஆலோசித்தாயா வென்று கேட்டார், இரவெல்லாம் அவர் வாக்குகளையே ஸ்மரித்து அவைகளின் கருத்தை ஆராய்ந்து சேகரித்துக் கொண்டதாகவும் ராமன் சொன்னான்.

வசிஷ்டர் மிகவும் சந்தோஷித்து, ராமனின் குணாதிசயங்களை மெச்சித் தான் சொல்லி வரும் ஞானோபதேசத்திற்கு அவனே சரியான பாத்திரமென்றும், ஆகையால் முயற்சியில் ஈடுபட்டு மனதைச் சீர்திருத்தம் செய்துகொண்டு, தகப்பனாருக்குப் பின்

ராஜ்யபாரத்தை ஏற்றுக்கொண்டு ஒழுக்கத்துடனும் நீதியுடனும் பிரஜைகளைப் பரிபாலித்து நிகரற்றவனாக விளங்க வேண்டுமென்றும் போதித்தார். பிறகு சபையோர்களை நோக்கி, தான் இப்பொழுது உபசமப் பிரகரணத்தை ஆரம்பிப்பதாகச் சொன்னார்.

சம்சார பாரம் மனதை யொட்டியது

வசிஷ்டர்:—இந்த சம்சாரம் என்னும் அனுபவத்தை அடைவது எது? நம் தேகமோ வெறும் ஜடப்பொருள். அதற்கு உணர்ச்சி யென்பது கிடையாது. ஆகையால் சம்சாரத்தை அது அனுபவிக்க முடியாது. பிறகு ஆத்மா அனுபவிக்கிறதா என்றால் அது சர்வ சுத்தமாயும் நிர்மலமாயும், பரிபூர்ணமாயும் உள்ளதானதால், ஒருவித அழுக்கும் அதில் ஒட்டாது. ஆகாயமானது மேகத்தாலோ அல்லது தூசி, துப்பு களாலோ அசுத்தமாகிறதா? தண்ணீரிலேயே உற்பத்தியாகி அதிலே இருக்கும் தாமரை அத்துடன் கலக்கின்றதா? தங்கம் எவ்வளவு அசுத்தத்திலிருந்தாலும் அத்துடன் இரண்டறக் கலக்கின்றதா? அதே மாதிரி அனாத்மாவாகிய தேகத்தோடு ஆத்மா கலக்குமா? அது எப்பொழுதும் தனிப்பட்டது. ஆகவே இந்த சம்சாரமானது தேகம் – ஆத்மா இவ்விரண்டிற்கும் இடையே தோன்றிய மனதைத்தான் பாதிக்கும். அதாவது அக்ஞானத்தை அக்ஞானம் பாதித்தால் யாருக்கு நஷ்டம்? நமக்கு ஏன் இதனால் சந்தோஷமோ, வருத்தமோ? மகாஜனங்களே, நாம் ஒவ்வொருவரும் ஆத்மா என்று நீங்கள் அறிவீர்களாக. இவ்விஷயமாக நான் எவ்வளவு கையெடுத்துக் கதறியும் ஏன் நீங்கள் இதை ஏற்றுக்கொள்வதில்லை?

## சீக்கிரம் விடுதலை அடைவதற்கு வேண்டிய குணவிசேஷம்

தாமஸம், ராஜஸம், சாத்வீகம் என்ற மூவித குணங்களால் வகுக்கப்பட்ட ஜன சமுதாயங்களில், முதல் இரு வகுப்பில் சேர்ந்தவர்கள் சம்சாரச் சுழலி லிருந்து எக்காலும் கரை ஏறமாட்டார்கள், அதா வது தங்களைச் சீர்திருத்தம் செய்துகொள்ளும் வரை யில். ராஜஸ சாத்வீகத்தை யுடையவர்களோ, அதா வது இங்கே இருக்கும் சில மகரிஷிகளும், ராமன் முத லியவர்களைப் போன்றவர்களும், ஞானத்தை அடை வதில் ஊக்கமாய், பெரியோர்களின் சேர்க்கையை அடைந்து, சாஸ்திரங்களையும் நன்கு ஆராய்ச்சி செய்து வெகு சீக்கிரமே விடுதலைக்குப் பாத்திர மாவார்கள். இவ்வினத்தோர் பார்த்த மாத்திரம் அறியப்படுவார்கள். அதாவது தங்களுடைய விசேஷ குணங்களால். சுத்த சாத்வீகத்தை அடைந்தவர்கள் எக்காலத்திலும் வெகு சொல்பமே. இவர்கள் பக்குவ மடைந்திருப்பதால் வெகு சீக்கிரம் மோக்ஷமடைந்து விடுவார்கள். ஒரே ஜன்மத்தில் கூட. இவ்விஷயமாய் ஒரு விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன்.

## ஜனகர் விருத்தாந்தம்

மிக மேன்மை பொருந்தியும் அழகு வாய்ந்தும் இருந்த விதர்ப்பதேசம், ஒரு காலம் ஜனகரென்று வழங்கிவந்த மகாராஜனால் அரசாட்சி செய்யப்பட்டு வந்தது. இவ்வரசன் அழகிலும் குணத்திலும், பராக்ர மத்திலும் நிகரற்றவனாகி எல்லோராலும் பூஜிக்கப் பட்டு வந்தான். சாஸ்திரங்களை நன்கு ஆராய்ச்சி செய்தும், உதார குணத்தைப் பெற்றும், யாசிக்க

வந்தவர்களுக்கு இல்லையென்று சொல்லாமலும், குடி மக்களை மிக அன்போடும் ஆதரவோடும் பாது காத்து வந்தான்.

இப்படி இருக்க, வசந்த காலத்தில் ஒரு நாள் தன் பரிவாரங்களோடு அரண்மனையை விட்டு வெளிக்கிளம்பி உத்யான வனத்திற்குச் சென்றான். அங்கே வந்ததும், பரிவாரங்களைப் பின்னே தங்க விட்டு தனிமையாய் வனத்தில் உட்சென்றான். கண்முன் தோன்றின சௌந்தர்யங்களையும், ஏராள மாகப் புஷ்பித்திருந்த பூவின் மணத்தையும் அனு பவித்தவாறு உல்லாசமாக வனத்தில் சென்று கொண்டிருக்கையில், திடீரென பேச்சுக் குரல் கேட்க, அவ்விடமே நின்று கவனிக்கலானான். யாரோ சித்த வித்யாதரர்களென்று அறிந்துகொண்டு, இருப் பிடத்திலிருந்தே அவர்களின் வாக்குகளைக் கவனித்தான். பேசினவர்கள் பலர்; ஒவ்வொருவரும் ஒரு சித்தாந்தத்தை வெளியிட்டனர்:—

சித்தர்களின் சம்பாஷணை

1. பார்க்கிறவன் - பார்வை, இரண்டின் சேர்க்கை யால் ஏற்படும் ஆனந்த சொரூபமாயும் சலனமற்றதாயு முள்ள அறிவையே ஆத்மாவாகக் கருதி அதை நாம் உபாசிக்கிறோம்.

2. பார்க்கிறவன் பொருளில் பார்வை என்று வழங்கும் லயத்தை அடையுமுன் இருக்கும் ஸ்திதி யையே ஆத்மாவாகக் கருதி அதை நாம் உபாஸிக் கிறோம்.

3. பார்ப்பவனுக்கும் பொருளுக்கும் இடையே உள்ளதும், உண்டு - இல்லை இவ்விரண்டிற்கும்

இடையில் உள்ளதும் அறியப்படுவதற்கெல்லாம் அறிவாகவும் இருக்கும் ஆத்மாவை நாம் உபாசிக்கிறோம்.

4. எது ஒன்று எல்லாவற்றையும் வியாபித்திருக்கின்றதோ, எல்லாமுமே எதனால் நிலைநிற்கின்றனவோ, எதன் பொருட்டு எல்லாமும் இருக்கின்றனவோ அதையே ஆத்மாவாக நாம் உபாசிக்கிறோம்.

5. 'அஹம்' என்னும் பதத்தில் கடையெழுத்தின்றி ஏற்படும் உச்சரிப்பு, முடிவின்மையை விளக்குகிறது; மேலும் இது சதா தன்னையே சுட்டிக் காட்டுகிறது. இச்சொரூபமே ஆத்மா என்று நாம் உபாசிக்கிறோம்.

6. தன்னுள்ளே பிரகாசிக்கும் ஆத்மாவை விட்டு விட்டு வெளியிலிருக்கும் தெய்வத்தை நாடுகிறவர்கள் கையிலிருக்கும் கௌஸ்துபத்தை விட்டு வெளியிலிருக்கும் ரத்தினத்தை நாடுபவர்போல் ஆவார்கள்.

7. எல்லா ஆசைகளையும் விட்டதன் பலனாக ஆத்ம ஞானம் ஏற்படும். ஆத்ம ஞானம் ஏற்பட்டால் எல்லா ஆசைகளும் ஒருங்கெனவே விடப்படும்.

8. எல்லாப் பொருள்களும் உலக வியவகாரங்களும் கடைசியாகத் துன்பத்தில்தான் முடிவு பெறுகின்றன. இதை அறியாதவர் மனிதர்கள்லல, கழுதைகளே.

9. எல்லாத் துக்கங்களுக்கும் காரணம் இந்திரியங்களாதலால், இவ்விஷப்பாம்புகளைத் தலையெடுக்கும் பொழுதெல்லாம், இந்திரன் வஜ்ராயுதத்தால், பறந்த

மலைகளை அடித்து ஒரே ஸ்தானத்தில் நிலை நிறுத்தினதுபோல, அடித்து அடக்கவேண்டும்.

10. மனது உபசமத்தை அடைந்து தன் சுய நிலையில் இருந்துகொண்டு சாந்தத்தையும் சம நோக்கத்தையும் அடைந்து நிற்கும் ஸ்திதியே உன்னதமான பதவியென்று சொல்லப்படும்.

ஜனகனின் மனக்கலக்கமும் தீர்க்காலோசனையும்

இந்த மகா வாக்கியங்களை ஜனகன் கேட்டதும், உத்யான வனத்தில் போகும் உத்தேசத்தை நிறுத்தி (ஏனெனில் வித்யாதரர்கள் மனிதரைக் கண்ட க்ஷணம் அவ்விடத்தை விட்டு அகன்று விடுவார்களென்ற பயத்தால்) பிறகு தன் பரிவாரங்கள் இருக்குமிடம் திரும்பி இவர்களுடன் அரண்மனை போய்ச்சேர்ந்தான். மறு தினம் வீட்டைவிட்டுத் தனிமையாகவே வெளிக்கிளம்பி அருகிலிருந்த ஒரு பர்வதத்தின் சிகரத்தை அடைந்து, அங்கே வெகு நேரம் ஆலோசனையில் அமர்ந்தான். வித்யாதரர்கள் சொன்ன வாக்கியங்கள் ஒவ்வொன்றையும் ஞாபகப் படுத்திக்கொண்டு அவைகளின் கருத்தையும் தான் இதுவரையில் நடத்திய வாழ்நாளையும் ஆராய்ந்து பார்த்தான். இவ் வாழ்நாள்களும் தான் அடைந்த போகங்கள், ஐசுவரியமெல்லாம் மிகவும் அல்பமாகத் தோன்றின. இந்த பிரம்மாண்டமான பிரபஞ்சத்தில் தன்னுடைய தேகம் ஒரு திரணமாத்திரம். ஆயுள் காலத்தைக் கவனித்தால், அதுவும் அப்படியே. இந்த சொல்ப காலமும் பால்யப் பருவத்தாலும், முதுமையினாலும் வெகுவாய்க் குறைந்துவிடுகிறது. மீதிய காலத்தில் இன்ப துன்பங்களால் பிடிக்கப்பட்டு,

அடைந்த சம்பத்து. ஐசுவரியங்கள் எல்லாம் பிற்காலத்தில் கனவுபோல் காணப்படுகின்றன. எதுவும் நீடித்த சுகத்தைக் கொடுக்கத் தகுந்ததல்ல, இந்திரன், பிரம்மா விஷ்ணு, சிவன், எல்லோருங்கூட காலனுக்கு இரையாகின்றார்கள். பிறகு நம்முடைய அற்ப காலத்து ஜீவிதத்தில் என்ன பற்றுதல்? இதுவரையில் காலம் வீணாகக் கழிக்கப்பட்டது. இனிமேலாவது ஞானத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தான்.

இப்படி ஆழ்ந்த சிந்தனையிலிருந்ததால் காலம் கழிந்ததைக் கவனிக்கவில்லை. ஆகையால் சிப்பந்திகளில் ஒருவன் யஜமானனைத் தேடி வந்து, தினசரி காரியங்களுக்குக் குந்தகமேற்பட்டதாகவும், அரசனைப் பார்க்கவந்த பெரியோர்கள், சிற்றரசர்கள் எல்லோரும் காத்திருப்பதாகவும், ராஜன் தன் கர்மங்களைக் கைவிட்டால் பிரஜைகள் அதிகத் துன்பப் படுவார்களென்றும் அறிக்கை கொடுத்தபொழுதுதான் கால உணர்ச்சி ஏற்பட்டது. இவ்வார்த்தைகளைக் கேட்டதும் மறுபடியும் சிந்திக்கலானான். கர்மங்கள் யாவும் துன்பத்திலே முடிகின்றன, ஆகையால் ஏன் இவைகளைக் கைக்கொள்ள வேண்டும்? ஆனால் இவைகளைத் தியாகம் செய்வதால் அடையப்படுவது என்ன? கர்மங்கள் இந்திரியங்களால் செய்யப்படுகின்றன. ஆகையால் மனதில் ஒட்டாமல் கர்மங்களைச் செய்தால் ஒரு ஆபத்துமில்லை. ஆகவே மனதைச் சாந்தி செய்து கொண்டு ஒன்றிலும் பற்றுதலில்லாமல் கர்மங்களைச் செய்வதே சரியான முறை. இந்த முடிவுக்கு வந்தான் ஜனகன். உடனே சேவகனுடன் வீடு திரும்பித் தன் நித்ய கர்மங்களையும், ராஜ காரியங்களையும் தினம்

போல், ஆனல் இச்சையோ த்வேஷமோ இல்லாமல், நடத்திவந்தான். அன்று முதல் ஜீவன் முக்தனாகவே விளங்கி வந்தான் ஜனகன்.

### முக்திக்கும் தேவை முயற்சியே

யதேச்சையாகவும் வெகு சீக்கிரமாகவும் முக்தன் ஆவதற்கு இதுவே உதாரணம். இதைக் கவனிக்கும் பொழுது சொந்த முயற்சியாலும் விவேகத்தாலுந் தான் ஜனகனல் ஜீவன்முக்த ஸ்திதி அடையப்பட்டதென்பதை நாம் உணர்வோம். இதர சகாயத்தால் அடையப்படவில்லை. ஏற்கனவே, அதாவது முன் ஜன்மத்தில், செய்யப்பட்ட பிரயத்தனங்களோடு, இப் பொழுது செய்யப்படும் யத்தனங்கள் கூடி, பலனைத் திடீரென, அதாவது தெய்வாதீனமென்று சொல்லும் படி, கொடுக்கின்றன. வாஸ்தவத்தில் இங்கே தெய்வ சகாயம் ஒன்றுமில்லை. மேலும் இம் முக்தியானது சாஸ்திரங்களாலோ, குருவினலோ அல்லது பூஜை, யக்ஞம், யாகாதிகளால்கூட அடையப்படாது. தன் சொந்த விசாரணையாலும் விவேகத்தாலுந்தான் அடையப்படும்.

இப்படி அடிக்கடி ஒவ்வொரு விஷயத்தையும் தீவிர விசாரணை செய்வதால் புத்தி வெகு நுட்பமாய்ப் பிறகு எக்காரியத்தையுங் கவலையின்றி நடத்துந் திறமையை அடைகிறது. அதனலேதான் புத்திமான் எவ்வளவு கஷ்டநிலையையும் திரணமாகக் கருதுகிறுன். புத்தியற்றவர்களோ அல்ப விஷயங்களைக் கண்டும் மலைக்கிருர்கள். மதம் பிடித்த யானையைக்கூட வெல் லும் சிங்கம், வெகு சுலபமாகவே தந்திரமுள்ள நரியால் நாசத்தை அடைகிறது. ஆகையால் யுக்தியுடன்

புத்தியை உபயோகித்தால் பிரபஞ்சத்தில் எதுதான் அடையப்படமாட்டாது? சொர்க்கம், பாதாளங்கூட இஷ்டப்பட்டால் அடையப்படும். பிறகு இந்த சம்சாரக் கடலைத் தாண்டுவது என்ன சிரமம்?

ஆகையால், புத்தியைச் சீர்திருத்தி வெகு நுட்பமாயிருக்கச் செய்யப் பிரயத்தனத்தால்தான் முடியும். ஆகாயத்தில் எவ்வளவு தூசி பறந்தாலும், அது எப்படி நிர்மலமாகவே இருக்கின்றதோ அதேமாதிரி நம் புத்தியையும் எவ்வித நிலைமையிலும் களங்கமற்று வைத்திருப்பது அவசியம். பூமியை எவ்வளவுக்கு எவ்வளவு உழுது சீர்திருத்தி வைக்கிறோமோ அதற்குத் தகுந்தபடி பலனை நாம் அனுபவிக்கிறோம். அப்படியே புத்தியையும் பக்குவம் செய்துவைத்தால் அதற்கேற்ற பலனைக் காண்போம். புத்தியின் தெளிவால் வஸ்துக்களிலும் விஷயங்களிலும் 'நான்' என்னும் நினைவும் ஐக்கியமும் நீங்கும். அதாவது அகங்காரமும் பந்தமும் ஏற்படாமலிருக்கும். இப்படியே பழகி வந்தால் தகுந்த காலத்தில் எல்லாம் தியாகம் செய்யப்பட்டு, மனமென்பது நிர்மலமான ஆகாயத்தைப் போலுள்ள 'சித்'தாக விளங்கும். இந்த ஸ்திதியில் எல்லாம் சம நோக்கத்துடன் பார்க்கப்படும். நான், பதார்த்தம் என்ற தோற்றங்கள் அற்று ஜீவன் சுத்த அறிவு மயமாய் இருக்கும்.

### பந்தத்திற்குக் காரணம் இச்சை

பந்தம்,சம்சாரம் என்பவைகள் மனது எவற்றைக் கருதிச் செல்லுகிறதோ அவைகளால் ஏற்படுகின்றன ஆகையால் வேண்டும், வேண்டாம் என்னும் நிலைதான் பந்தங்களுக்குக் காரணமாயிருப்பதால் இவைகளை

முதலில் தியாகம் செய்யப்பட வேண்டும். இவ்விரண்டும் இரண்டுவிதக் குரங்குகளாக இருந்துகொண்டு நம்மைச் சதா சஞ்சல நிலையில் வைத்துச் சாந்தியின்றிச் செய்கின்றன. இவைகளுக்கு இடங் கொடுக்காமலிருக்க சதா விசாரணை செய்வதால்தான் முடியும். அப்படிச் செய்து வந்தால் சம்சாரமாகிய விருக்ஷத்திற்கு வேர் அறுபட்டது போலாகும். இதுவே மகா வைராக்கியம் எனப்படும்.

### மனமே பிராணன். அதுவே ஆத்மா

இம் மனதென்பது வாஸ்தவத்தில் ஆத்மாவைத் தவிர்த்து வேறல்ல. ஸ்பந்தம் அல்லது பிராணன் ஆத்மாவுடன் சேருகையில், அதாவது ஆத்மா ஸ்பந்திக்கையில், மனதென்ற தோற்றம் ஏற்படுகிறது. இப்பிராணன் அல்லது ஸ்பந்த சக்தி ஜடசொருபம்; ஆகையால் மனதும் அவ்வண்ணமாகின்றது. இந்த ஸ்பந்தந்தான் கலனை, அல்லது சங்கல்பம் எனப்படும். சங்கல்பமாவது அசைவு; இவ்வசைவே பிராணன் எனப்படுவதும். உதாரணமாக வெகு தூரத்திலிருக்கும் ஒரு பொருளை நாம் தியானிக்கும்பொழுது, அப்பொருள் தோற்றத்தில் ஏற்படுவது பிராணனால். இதைத்தான் மனமென்று சொல்லுகிறோம். ஆத்மா இங்கும் அங்கும் சாக்ஷியாயிருப்பதால் இவ்விரண்டு இடத்திற்கும் நடுவில் பிராண ஸ்பந்தம் ஏற்பட்டு தோற்றமுண்டாகிறது.

### பிராணாயாமம் என்பது என்ன?

மேற் சொல்லப்பட்ட பிராணனை அடக்கும் நிமித்தம், பிராணாயாமமென்ற நியமம் யோகமார்க்

கத்தை அனுசரிப்பவர்களால் ஏற்படுத்தப்பட்டது. இதனால் பிராணனை அடக்குவதாகப் பொருள் படுத்த வேண்டுமே தவிர பிராணவாயுவை யென்றல்ல. அதாவது சஞ்சலத்தையே தொழிலாகக் கொண்ட மனதை அசைவின்றிச் செய்வதே பிராணாயாமம்: மூச்சை அடைப்பதல்ல. இது விபரீத அர்த்தமென்பதற்குச் சந்தேகமில்லை. இப் பிராணாயாமம் அப்யசிப்பதற்கு, ஆசைகளை ஒழிப்பதும் பழக்க வழக்கங்களை (Habits) ஒழிப்பதும், வைராக்யமும் தேவை. இவைகளை அனுசரித்து அப்யசித்து வந்தால் மனது அடங்குவதுடன் பிராண வாயுவின் கதியும் ஒழுங்குபடும்.

### மனம் ஜடமோ, அஜடமோ?

மனமானது, தான் சித்தினுடைய சொரூபமென்பதை மறந்து, சங்கல்ப வசத்தால் வெளி நோக்கம் அடைந்து, தன்னால் கற்பிக்கப்பட்ட வஸ்துவைத் தானென்பதாக உணர்ந்து அதிலேயே ஐக்கியமாகின்றது. ஆதலால், இவ்வித ஜட சம்பந்தத்தால் மனமும் ஜடமென்று கருதப்படலாம், அதாவது இந்நிலையிலிருக்கும் வரையில். தன் சுய சொரூபத்தை மறந்திருக்கையில் இது சத்தியமெப்படியாகும்? ஆகவே அது மித்யையே. ஆயினும் சித் சக்தியைக் கூடியிருப்பதால் தான் கருதுவதையெல்லாம் அடையவும் செய்கிறது. ஆனால் ஒரு பொம்மை எவ்வளவு சாதுர்யமாகச் செய்யப்பட்டாலும், அது நடனம் செய்யுமா? அல்லது சித்திரத்தில் வரையப்பட்ட நிழலில் நாம் சிரமம் தீர்த்துக் கொள்ளலாகுமா? அப்படி, மனம் சுத்த ஜடமாக இருப்பின், தான் கோரியவைகளை எல்லாம் அடைய

லாகுமா? அது எக்காலத்திலும் சித் சக்தியைக் கூடியே இருப்பதால் அஜடமென்றும் சொல்லத் தகும். ஜடப்பொருள்களில் ஈடுபடாமல் சித்தையே ஸ்மரித்தால் சுத்த சித்தாகிறது; இல்லையேல் ஜடமாய் விஸ்தரிக்கின்றது.

### ஆராய்ச்சிக்குப் பாத்திரம் யார்?

இங்கே சொல்லப்பட்ட உதாரமான ஆராய்ச்சிகளெல்லாம் மூடர்கள் பொருட்டாவது, சம்சாரத்தில் பற்றுதல் உடையவர்கள் பொருட்டாவது பேசப்படவில்லை. யார் வைராக்கியத்தை அடைந்து விடுதலையடைய மார்க்கம் தெரியாமல் இருக்கின்றார்களோ அவர்களே இவ்வாராய்ச்சிகளைக் கேட்கத் தகுந்தவர்கள். மூர்க்கரிடத்து இவ்வித ஆராய்ச்சி வியர்த்தமே.

### உலகத்தின் போக்கு:

இந்த மனத்தைப்பற்றி இன்னும் ஆராய்ச்சி செய்வோம். எதை நாம் மனமாகப் பாவிக்கிறோம்? அறிவு என்பது ஆத்மாவிடத்தில் இருக்கிறது. பிராணன் ஆத்மத்தில் ஸ்பந்திக்க, அறிவு ஏற்படுகிறது. தேகம் தன் ஸ்வதர்மத்தைச் செய்துவருகிறது. பிறகு மனத்துக்கு இடமேது? ஆகவே இது மித்யையே. மேலும் பிராணன், தேகம் இரண்டும் ஆத்மாவின் அனுக்கிரஹத்தால் தங்கள் செயல்களைச் செய்து வருகின்றன. ஜகத் முழுதும் ஆத்மாவினால்தான் நிலைநிற்கின்றது. ஆகையால் இதை அடைவதில் தான் நம் பிரயத்தனங்கள் இருக்கவேண்டும்.

ஜகத்தில் சதா எவ்வளவோ விசித்திரமான செயல்கள் நடைபெற்று வருகின்றன. சதா சிருஷ்டி

யும் அழிவும் ஏற்பட்டுக்கொண்டே இருக்கின்றன. இவை தண்ணீரிலும், ஆகாயத்திலும், மண்ணிலும், பிராணிகள் உடலிலும் நடைபெறுகின்றன. மனித வர்க்கங்களில் எவ்வளவோ வித்தியாசங்களும் வேறுபாடுகளும் இருக்கின்றன. அநேகமாய் எல்லோரும் மூடராயும் மூர்க்கராயுந்தான் இருக்கிறார்கள். ஆகையாலேதான் ஆசைகளிலும் ஆபத்துகளிலும் சுழன்று பல ஜன்மங்களெடுத்து நாசமடைகிறார்கள். இவைகளையெல்லாம் கவனிப்பதால் பலனென்ன? இவர்களைக் கைதூக்கிவிட யாரால் முடியும்? ஏனெனில் அவரவர்கள் முயற்சியின்றிப் பிறரால் யாதும் செய்ய முடியாது. பார்க்கப்போனால் உலகத்தில் அநேக ஜந்துக்களுக்கு நாசம் ஏற்படுவது பிற ஜந்துக்களுக்கு இரையாவதாலோ அல்லது வேறு பிராணிகளின் துவேஷத்தாலோதான். பெரிய மீன்கள் சிறிய மீன்களைப் புசித்து ஜீவிக்கின்றன. நம் தேகத்திலும் ஆடைகளிலுமுள்ள பேன் மூட்டைப் பூச்சியால் புசிக்கப்படுகின்றது. மூட்டைப் பூச்சி சிலந்தியாலும், சிலந்தி வேறொன்றாலும் நாசமடைகின்றன. தவளை பாம்பாலும், பாம்பு கீரிப்பிள்ளையாலும், கீரிப்பிள்ளை பூனையாலும், பூனை நாயாலும், நாய் கரடியாலும், கரடி புலியாலும், புலி சிங்கத்தாலும், சிங்கம் யாளியினாலும் நாசமாகின்றன. இந்த யாளியோ மேகத்தில் இடியைக் கேட்டவுடன் உயிரை இழக்கின்றது. இதெல்லாம் இப்படியிருக்க மகாவிஷ்ணுவே மனிதனாகப்பிறந்து இந்த சம்சார வலையில் சிக்கிக்கொண்டு பிறகு மோக்ஷத்தை அடைய உபாயத்தைத் தேடுகிறார். ஆகையால் உலகத்தின் போக்கைப் பார்த்து அதை மாறுபடுத்துவதிலோ

சிர் திருத்துவதிலோ சிக்கிக்கொண்டால் அதிலிருந்து மீளுவது அசாத்யம். உலகத்தின் போக்கு தானுகவே நடக்கும்.

### சாந்தம்

ஆகையால் நீ உன் மனதை அடக்கிச் சாந்த நிலையை அடைய முயலுவாயாக. எவ்விதமென்ருல், ருசிக்கப்படும் பொருளுக்கும் ருசிப்பவனுக்கும் இடையேயுள்ள ருசியென்னும் சத்தியத்தில் மனதை நிலைநிறுத்தி, அதாவது அறிகிறவனுக்கும் அறியப்படும் பொருளுக்கும் இடையே நின்று இவ்விரண்டிற்குமுள்ள சம்பந்தத்தைத் தெரியப்படுத்தும் அறிவில் ஸ்திரமாய் மனதை நிறுத்துவதால், சாந்த நிலை ஏற்படும் என்று சொல்லி நிறுத்திஞர் வசிஷ்டர்.

### அகங்காரம் ஒழிந்தால் தேகத்திற்கு நாசமா?

**வால்மீகி:** பிறகு வசிஷ்டர் பேராசையால் ஏற்படும் துக்கங்களை ராமனுக்கு எடுத்துச்சொல்லி அதன் சொரூபத்தையும் விரித்துரைத்தார். இந்த பேராசைக்குக் காரணம் அகங்காரமே. ஆகையால் அதை அடியோடு ஒழிக்க வெண்டுமென்ருர். அதற்கு ராமன், அகங்காரத்தால்தான் இந்த தேகம் நிலைத்திருக்கும் பொழுது, அதை எவ்விதம் நாசம் செய்வது? அப்படிச் செய்வதால் தேகம் நாசம் அடையாதா? என்று கேட்டான்.

அதற்கு வசிஷ்டர் அவ்விதமாவதில்லை யென்றும், தேகத்தின் நாசம் காலக்கிரமத்தில் ஏற்படுமே தவிர, அகங்காரம் ஒழிவதால் உண்டாவதில்லை என்றும் சொன்ஞர். தேகமின்றி ஞானப்பதவியை அடைய முடியாது. இவ்வித ஞான நிலையில் சாந்தமும் சம

திருஷ்டியுமே கூடிய ஜீவன் தேகத்தில் பரிணமிக்கும். ஜனகரைப் போன்ற மகான்கள் இந்நிலையில்தான் இருந்து வருகிறார்கள். இந்நிலையிலிருக்கையில் வாசனை முற்றிலும் தீர்ந்தபிறகு விதேக முக்தி ஸ்திதி ஏற்படும் என்று வசிஷ்டர் சொன்னார்.

மனிதப் பிரயத்தனம் ஜீவன்முக்தியடையும் பொருட்டே
செய்யப்பட வேண்டியது; இதற்கு மார்க்கங்கள் யாவை?

வால்மீகி: மறுதினம் சபை கூடியதும் வசிஷ்டர் மேலே உபதேசத்தை தொடங்கினார்.

வசிஷ்டர்: விதேக முக்தி ஸ்திதியையும், அதற்கும் மேலான பிரம்ம பதவியையும் நாம் கவனிக்கவேண்டிய அவசியமில்லை. தேகத்திலுல் ஏற்படும் மேன்மையான ஜீவன் முக்த ஸ்திதியே நம் குறிக்கு உள்ளடங்கியது. இதுவே நம் யத்தனத்தால் அடையப்பட வேண்டியதும்.

இந்தப் பதவியை அடைய மேற் சொல்லப்பட்ட பல மார்க்கங்களில் ஏதாவதொன்றை அனுசரித்து அதையே விடாமுயற்சியுடன் பின்பற்றி வருதல் அவசியம். 'நான்', 'பிரபஞ்சம்' இவைகளைப் பற்றி ஆராய்ச்சி செய்தால் நான்கு விதமான அறிவில் ஏதாவதொன்று எல்லோருக்குமே சகஜமாக ஏற்படும். அவைகளாவன:—

(1) "நான், என்னுடைய தாய் தகப்பனுடைய புத்திரன்" என்ற பாவனை. இதுவே பந்தத்திற்கு மூலாதாரம். மோக்ஷ சாதனத்திற்கு இந்த நோக்கம் பயன்படாது.

(2) "நான் எல்லா சூக்ஷ்மத்திற்கும் அதிசூக்ஷ்மமாயுள்ள சொரூபி" இந்த நோக்கம் மோக்ஷ சாதனத்திற்குத் தகுந்ததே.

(3) "நான் ஆத்மா; எல்லாமுமே ஆத்மா" என்று உணர்தலும் மோக்ஷத்திற்கு உபாயமாகும்.

(4) "நான், ஜகத் எல்லாம் சூன்யம்" என்ற நோக்கமும் மோக்ஷ சாதனமாகும்.

முதலில் சொல்லப்பட்ட ஒரு நோக்கந்தான் சம்சாரச் சுழலில் சிக்கிவைக்கும் மூடமான நோக்கம். மோக்ஷத்திற்கு உபாயமான இதர மூன்றுவித நோக்கங்களில், நாம் உபாசித்து வருவது சர்வமும் ஆத்மா வென்பதே. இது ஒன்றே சத்யமானதும் நித்யமானதும். இரண்டு என்ற நோக்கத்தை மனதில் தியாகம் செய்து, ஆனால் கர்மங்களைச் செய்வதில் இந்த துவந்துவ பாவத்தைக் கைவிடாமலிருப்பதுதான் ஞானிகளால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இரண்டென்னும் தன்மையின்றிக் கர்மம் ஏற்படமுடியாது. ஆகையால் நீ இவ்விதம் ஜீவன்முக்தனாக இருந்து கொண்டு, உலக வியவகாரங்களையும் ராஜ்ய பரிபாலனத்தையும் செய்து வருவாயாக. கர்மங்களைத் தியாகம் செய்வது உசிதமில்லை; அப்படிச் செய்வதும் முடியாது. அதிலுள்ள வாசனைதான் தள்ளப்பட வேண்டும். தாய், தகப்பன், பந்துக்கள், மித்திரர்கள் என்ற பாவனைகளெல்லாம், உலக வியவகாரத்தின் பொருட்டு நியமிக்கப்பட்ட விதிகளே தவிர, இவைகளில் உண்மை ஏதுமில்லை.

### புண்யன் பாவனன் கதை

இவ்விஷயங்களைத் தெளிவாகக் காட்டும் பூர்வீகக் கதையொன்று உண்டு; அதைச் சொல்லுகிறேன் கேள்:—

முன்னொரு காலத்தில் மகேந்திர பர்வதச் சார்பில், ஒரு திவ்வியமான வனத்தின் மத்தியில், ஒரு முனி

சிரேஷ்டர், தன் மனைவியுடனும், பிரகஸ்பதியின் புத்திரனான மகா மேதாவியான கசனைப்போன்ற இரு குழந்தைகளுடனும் கூடி வசித்து வந்தார். ஒரு குழந்தை புண்யனென்றும், மற்றொரு குழந்தை பாவனனென்றும் பெயரிடப்பட்டிருந்தன. இக் குழந்தைகள் காலாகாலத்தில் தகப்பனிடம் கற்றுக் கொள்ள வேண்டியவைகளைக் கற்றுக்கொண்டும், அறியவேண்டியவைகளை அறிந்தும் நல்ல யௌவன பருவத்தை யடைந்தார்கள். ஆனால் இவ்விருவர் களுக்குள் உள்ள வித்யாசம் என்னவென்றால் மூத்தவன் அறிவில் தேர்ந்தும், இளையவன் அக்ஞானத்தால் கொஞ்சம் மூடுபட்டும் இருந்ததே.

இப்படி இருந்துவரும் காலத்தில், ஞானியா யிருந்த தகப்பன், தன் ஆயுள்காலம் முடிந்ததென்று அறிந்துகொண்டு, பிள்ளைகளுக்கு வேண்டிய போதனைகளைச் செய்து, அனுக்கிரகித்து விடுதலை யடைந்தான். இதன் பிறகு, தாயும் கணவனுக்குப் பிறகு தான் வாழ்வது வியர்த்தமென்று எண்ணி, தான் செய்யவேண்டிய கர்மங்களைச் செய்துவிட்டு, கணவனால் கற்பிக்கப்பட்ட யோக உபாயங்களைக் கொண்டு அவளும் சாந்த பதவியை அடைந்தாள்.

தாய், தகப்பன் இருவரையும் ஏககாலத்தில் இழந்த பாலர்கள் திக்கற்றவர்களாக நின்றார்கள். சில நேரம் கழிந்தபிறகு, மூத்தவன் தன் விவேகத்தால் மனதை ஆறுதல் செய்துகொண்டு, செய்யவேண் டிய கர்மங்களைச் செய்யத் தொடங்கினான். இளைய வனோ துக்க சாகரத்தில் மூழ்கினவனாக அழுது புரண்டு செய்யவேண்டிய கர்மங்களைச் செய்யாமலு மிருந்தான். இவன் இப்படியிருக்க, புண்யன் கர்மாதி

களை ஒழுக்கம் தவருமல் சில தினங்களில் முடித்து, பிறகு தன் சகோதரனைக் கூப்பிட்டு அவனுக்கு விவேகத்தை உபதேசித்தான்.

புண்யன்: சகோதரனே! நீ இவ்விதம் துக்கப்படுவதில் பயனென்ன? அக்ஞானமே உன் துக்கத்திற்குக் காரணம். நீ உன்னைப்பற்றிச் சரியாக விசாரணை செய்யாததாலேயே இவ்விதம் துக்கத்திற்குப் பாத்திரமானுய். யோசித்துப் பார்த்தால் நீ உன் தாய் தகப்பனுர் பொருட்டு வருத்தப்படுவது புத்தியின்மை யென்று அறிவாய். நீ வருத்தப்படவேண்டியது உன் நிமித்தமே தவிர அவர்கள் நிமித்தமல்ல. ஏனெனில் அவர்கள் தங்கள் சுயநிலையாகிய ஆத்மாவை யடைந்தார்கள்; நீ இன்னும் சுக துக்கங்களுக்கு பாத்திரமாக ஜீவித்திருக்கிருய். ஆகையால் அவர்கள் நற்கதி அடைந்தார்களென்று நீ சந்தோஷித்திருக்க வேண்டும்.

பிறகு நீ எடுத்திருப்பது இந்த ஒரு ஜன்மந்தானு? இதற்குமுன் எவ்வளவோ ஜன்மங்கள் எடுத்து, யாராரோ உன் தாய் தகப்பனுராக இருந்திருக்க, அவர்கள் பொருட்டெல்லாம் யாதொரு விசனமுமின்றியிருந்து, இப்பிறவிக்குக் காரணமான தாய்தகப்பனுரைப் பற்றி மாத்திரம் துக்கப்படுவதில் கிரமம் என்ன? இவ்விஷயத்தால் நானென்பதும், நீயென்பதும், பந்துக்கள் என்பதும் அக்ஞானமென்று அறியவில்லையா? ஆத்மா ஒன்றே சத்யமாய் இருக்க, இந்த பேதங்களுக்கெல்லாம் ஆதாரமேது? யாராக இருப்பினும் அவன் ஆத்மாவைத் தவிர்த்து வேருக இருக்க முடியாது. ஆகையால் நீ நான் எல்லாம் ஓரே ஆத்மாவைத்தான் சுட்டிக்காட்டும்.

இவ்வாறு சரியான மார்க்கத்தில் யுக்தியுடன் நீ விசாரணை செய்துவருவாயாகில், ஞானம் உதித்து சாந்தியை அடைவாய்".

வசிஷ்டர்: இந்த உபதேசத்தை பாவனன் மனதில் வாங்கிக்கொண்டு தானாகவே திரும்பித் திரும்பி விசாரணை செய்யத் தொடங்கினான். சில காலத்தில்தமயனைப் போல் பாவனனும் புண்ணியனாகி, பிறகு இருவரும் வெகு காலத்திற்குப் பின் மோக்ஷத்தை அடைந்தார்கள்.

ராமா! இதைத் தவிர்த்து இன்னொரு விருத்தாந்தமும் உண்டு. அதாவது பலி சக்கிரவர்த்தியைப் பற்றியது. அவன் கடைப்பிடித்த மார்க்கத்தை அனுசரித்தாலும் மோக்ஷத்திற்கு உபாயமாகும்.

### பலி சக்கிரவர்த்தியின் கதை

வசிஷ்டர்: வெகு காலங்களுக்கு முன், விரோசனனென்று வழங்கப்பட்டு மகா மேதாவியாயும் ஞானியாயுமிருந்த அசுரத்தலைவனுக்கு பலியென்று சொல்லப்பட்ட புத்திரனொருவன் இருந்தான். தகப்பனைப் போலவே மகா பராக்கிரமசாலியாயும், ஜப தப மகிமைகளையும் அடைந்து இவைகளால் பிரம்மா, விஷ்ணு, சிவனாகிய மும் மூர்த்திகளின் வரப் பிரசாதங்களையும் அடைந்தவனாக இருந்தபடியால் திரிலோகங்களையும் ஜயித்து தன் அரசாட்சிக்கு உட்படுத்திக்கொண்டான். இவ்வித நிகரற்ற பதவியிலிருந்தும், பக்தியைக் கைவிடாமலிருந்தான். ஆகையால் வெகு காலம் மூன்று லோகங்களும் இவன் அரசாட்சிக்கே உட்பட்டு இருந்தன.

நல்லதும்கூட காலக் கிரமத்தில் சலிப்பைத்தான் கொடுக்கும். அதன்படியே பலியானவன் ஒரு நாள்

தன் வாழ்க்கையைப்பற்றிச் சிந்திக்கலாகி, இன்னும் எவ்வளவு காலம் செய்ததையே செய்தும், அனுபவித்தவைகளையே திரும்பித் திரும்பி அனுபவித்தும் காலம் கழிப்பது, என்று எண்ணினான். இதற்கும் ஒரு முடிவு வேண்டாமா வென்று தோன்றிற்று. ஆகையால் உடனே தன் தகப்பன் இருப்பிடம் சென்று, தன் மனக்கலக்கத்தைத் தெரிவித்து, இன்னும் மேலான பதவி ஏதாவது அடையத்தக்கதுண்டா என்று கேட்டான்.

விரோசனன்: நீ அரசாட்சி புரியும் மூன்று லோகங்களைப்போல் இன்னும் அநேக பிரம்மாண்டங்களைத் தாங்கி வரும் அரசன் ஒருவனிருக்கிறான். அவனை ஒருவனாலும் அறிய முடியாது. அவனைக் காண அவனுடைய மந்திரியின் தயவே தேவை. இந்த மந்திரி மகா பராக்கிரமசாலி. அவனே எல்லா உலகத்தையும் எல்லாத் தேவர்கள், அசுரர்கள், மனிதர்கள், பிராணி வர்க்கங்கள் அனைத்தையும், தன் இஷ்டம் போல், ஆனால் அரசனுடைய பார்வையில், ஆட்சி செய்து வருகிறான். ஒவ்வொருவரும் அனுபவிக்கும் சுக துக்கங்களெல்லாம் அவனாலே ஏற்படுகின்றன. ஆகையால் இவனையே நீ முதலில் அணுகி ஜயம் பெற வேண்டும். இவனை ஜயித்தால் எல்லாப் பிரபஞ்சங்களையும் ஜயித்தது போலாகும். இவனை ஜயித்த பிறகு தான் ராஜனுடைய தரிசனம் கிடைக்கும். இவனை வெல்ல அஸ்திர சஸ்திரங்களாலாவது அல்லது வேறு எவ்வித பலத்தாலாவது ஆகாது. இவன் உதவியைக் கொண்டு அரசனுடைய தரிசனம் ஒரு க்ஷணமாவது அகப்பட்டால் இவன் வெல்லப்படுவான். அரசனுடைய கருணையின்றி இவன் வசீகரப்படமாட்டான்.

இம் மந்திரியை வெல்லப் பௌருஷமும் யுக்தியும் தான் வேண்டும். இவைகளைக்கொண்டு விடாமுயற்சி யுடன் அப்யசித்து வந்தால் இவன் வசமாவான். இவனைத்தான் மனமென்று சொல்வது. ராஜா வென்று சொல்லப்பட்டது ஆத்மாவைத் தவிர்த்து வேறில்லை.

இந்த ஆத்மாவை அடைய மகா வைராக்கியமே தேவை. பதார்த்தங்களிலும் விஷயங்களிலும் இச்சை அடியோடு ஒழிந்தால், மனம் நாசமடைந்து ஆத்ம லாபம் சித்திக்கும். ஆகவே சொந்த முயற்சி யால்தான் இது அடையப்படலாமே தவிர, குருவி னாலோ அல்லது தெய்வ சகாயத்தாலோ அடையப்பட மாட்டாது. தெய்வமென்பதை நம்பி முயற்சியை விட்டால் எதுவும் கிட்டாது. இந்த தெய்வமென்பது மானிடர்களால் கற்பிக்கப்பட்டதே. கிரியைகளின் பலன் எதிர்பாராத காலத்தில் அடையப்படும் பொழுது தெய்வச் செயலென்று சொல்லப்படுகிறது. ஆகையால் நீ ஆத்மாவில் உன் பூரண நோக்கத்தையும் செலுத்தி, தீவிர முயற்சியை மேற்கொண்டு ஆராய்ச்சிசெய்து வருவாயாக.

பலியின் மனக்குழப்பம்

**வசிஷ்டர்:** இதைக் கேட்டதும் பலிக்குத் தான் இவ்வளவு காலத்தை வீணாய்க் கழித்ததாகத் தோன்றிற்று. 'திரிலோகங்களையும் ஜயித்து தேவர்களை யெல்லாம் பகைத்துக்கொண்டதின் பலன் அற்ப ஐசுவரியமும் பெண் போகங்களையும் அடைந்ததே. எவ்வளவு ஐசுவரியமிருந்தும் என்ன பயன்? ஸ்திரீ போகங்கூட திரும்பித் திரும்பி ஒரே மாதிரிதான் அனுபவிக்கத்தக்கது. எல்லாம் பித்துப் பிடித்தவன்

செயல் போல் தோன்றுகின்றனவே ஒழிய, ஒரு விவேகியின் செயலாக இல்லை. இப்பொழுது நான் விவேகி யானேன். இனி நான் ஆத்ம தரிசனத்தில் ஊக்கமுள்ளவனாகி அதை எவ்விதமும் அடைந்தே தீருவேன். இனி என்னுடைய மோகங்களெல்லாம் ஒழிந்தன. ஆயினும் தன் குல குருவாகிய சுக்ராசாரியரையும் கண்டு அவருடைய அனுக்கிரகத்தைப் பெறலாம்' என்று சற்று அவரை ஸ்மரிக்கலானான். உடனே சதா நிஷ்டையிலிருக்கும் சுக்ராசாரியருக்கு தன் சிஷ்யனுடைய வேண்டுகோள் மனதிலுதித்து, அதேக்ஷணம் அவனிருக்குமிடம் அடைந்தார். உடனே பலி அவரை வணங்கி உபசரித்து, தன்னுடைய தற்சமயத்து மனோநிலையைத் தெரிவித்துப் பிறகு இந்த 'நான்', 'பிரபஞ்சம்', 'ஆத்மா' இவைகளைப் பற்றித் தெளிவாகச் சொல்லும்படி வேண்டிக் கொண்டான்.

சுக்ராசாரியர்: நான் இப்பொழுது வேறு விஷயமாகச் சீக்கிரம் செல்லவேண்டி இருப்பதால், உன் கேள்விகளுக்கு வெகு சுருக்கமாகப் பதில் சொல்லத் தான் நேரமிருக்கின்றது. சொல்லப்போகும் தத்துவத்தைப் புரிந்துகொள்ள நீ பக்குவமாயிருந்தால், இவ்வார்த்தைகளே போதுமானது. பக்குவமாக இல்லாவிட்டால் எவ்வளவு சொன்னாலும் உன் புத்திக்குத் தெளிவுபடாது. ஆகையால் சொல்வதைக் கவனமாகக் கேள். "நான், நீ, இந்த ஜகத் எல்லாம் சுத்த சித்தைத் தவிர்த்து வேறல்ல. சித் சேதனத்தில் ஈடுபடுகையில், நீ, நான் என்ற தோற்றங்கள் ஏற்படுகின்றன. இவைகளே பந்தத்திற்குக் காரணம். சித் அசேதனமாக இருந்தால், தோற்றங்கள்

அழிவடைகின்றன. இதுவே மோக்ஷமென்பது. சேதனமாய் நிற்கும் அகண்டப் பிரபஞ்சம் முழுவதிலும் சித்தானது ஊடுருவி நிற்கின்றதென்பதுதான் சகல சாஸ்திரங்களின் சித்தாந்தமும். இவ்வளவேதான் இவ்விஷயமாக முடிவாகச் சொல்லக் கூடியது. இனி நான் அவசரமாக சப்தரிஷிகளின் சங்கம் போக வேண்டி இருப்பதால் விடை பெற்றுக் கொள்ளுகிறேன்."

வசிஷ்டர்: இவ்வாறு சொல்லிவிட்டுச் சுக்ராசாரியார் மறைந்தார். பலியானவன் இவ்வார்த்தைகளை மனதில் வாங்கிக்கொண்டு உடனே ஆலோசனையில் அமர்ந்தான். மேலும் மேலும் விசாரணை செய்ததன் பலனாக, முனிவர் சொன்ன மொழிகளின் பொருள் விளங்கியது. எல்லாம் சித்தின் ஒளி யென்றே அனுபவமாகத் தோன்றிற்று. சித் பிரகாசமின்றி சந்திர சூரியர்களின் ஒளியைக்கூட உணரமுடியாது. இந்த ஜகத்தும் நிலை நிற்க முடியாது. "ஆகையால் நானும் இந்த சித்தே. நானே இந்த பிரம்மாண்டமாகவும் பரமாணுவாகவும் இருக்கிறேன். 'நான்' இல்லாமல் இடம், காலம், பொருள் என்பவைகள் ஏது?" இவ்வாறான எண்ணங்களில் மனது ஒருமுகப்பட்டு, இருந்த இடத்திலேயே சமாதி நிலையை அடைந்தான் பலி.

மகாராஜாவை வெகு நேரம் காணாத காரியஸ்தர்கள், மந்திரிமாரெல்லாம் பலவிடங்களில் தேடிக் கடைசியில் இருக்குமிடத்தைக் கண்டுபிடித்து, அவன் இருக்கும் நிலையைப் பார்த்து வியப்படைந்தார்கள். அரசனுக்கு என்ன நேர்ந்ததோ என்று தெரியாமல், அதைத் தெரிந்துகொள்ள குலகுருவையே நாட

வேண்டும் என்று அவர்கள் நினைக்கலானார்கள். நினைத்தமாத்திரம் சுக்ராசாரியரின் உருவம் அங்கு தோன்றிற்று. காரியதரிசிகளின் வியப்பின் காரணத்தை உணர்ந்து, பலி இருக்கும் நிலைமையையும் ஒரு க்ஷண நேரம் தியானத்தால் அறிந்துகொண்டு, பரிவாரங்களுக்கு ஆறுதல் சொன்னார். பலியானவன் தற்சமயம் பகவான் பதவியை அடைந்து சமாதியில் இருப்பதாகவும், கொஞ்ச காலத்தில் இது தானாகவே கலைந்து பழைய ஸ்தானத்திற்கு வருவானென்றும் சொன்னார். அதுவரையில் மந்திரிமார்களை ராஜகாரியத்தைக் கவனிக்கும்படி சொல்லிவிட்டுப் போயினர்.

### பலி ஞானமடைதல்

ஆயிரம் தேவ வருஷ காலம் பலியானவன் சமாதியிலிருந்து, பிறகு கண் விழித்ததும் தன் பரிவாரங்கள் எதிரிலிருப்பதைக் கண்டான். இவ்வளவு சீக்கிரம் இவர்கள் திரும்பி வந்ததைக் கண்டு வியப்படைந்தான். ஏனெனில் தான் ஒரு க்ஷண நேரந்தான் நிம்மதியுடன் இருந்ததாகத் தோன்றிற்று. அதனுள் சம்சாரம் முன் வந்ததே என்று மனம் சலித்தான். பிறகு சற்று ஆலோசனை செய்ததில், தனக்கு மோக்ஷத்தைப்பற்றிய ஆவல்தான் எதற்கு? ஏன் சம்சாரத்தைப்பற்றி வெறுப்புக் கொள்ளவேண்டும்? எதுவும் தனக்கு அபேக்ஷையில்லை, வேண்டாமென்பதும் இல்லை. யதேச்சையாக வந்ததை அனுபவிக்க வேண்டியதே தனக்கு முறை என்ற முடிவுக்கு வந்தான். பிறகு தன் பரிவாரங்களுடன் கலந்து ராஜ்ய விஷயங்களை முன் போலவே கவனிக்கத் தொடர்ந்தான். ஆனால் அவைகளில் யாதொரு பலனையும் கருதவில்லை.

இதன் பிறகு ஒருநாள் தன் ஐசுவரியங்களையெல்லாம் தர்மம் செய்யத் தீர்மானித்து, அதன்பொருட்டு ஒரு யாகத்தை மேற்கொண்டு, மூன்று லோகத்திலும் தகுந்தவர்களையெல்லாம் வரவழைத்து ஏராளமாகத் தானம் செய்தான். முனிவர்களும் தேவர்களும்கூட அழைக்கப்பட்டிருந்ததால் நாராயணனும் வந்திருந்தார்.

அப்பொழுது தேவலோகம் இந்திரனுடைய அரசாட்சிக்கு உட்படவேண்டிய கிரமத்தை நாராயணன் அறிந்து,மேலும் இந்திரன் அதன்மேல் கண்ணுயிருப்பதையும் உணர்ந்து தவிர பலியானவன் ஞானத்தைப் பரிபூர்ணமாக அடைந்து ராஜ்யத்தில் யாதொரு இச்சையும் இல்லாமலிருப்பதால், கிரமத்தைப் பூர்த்தி செய்விக்க இதுவே நல்ல சமயமென்றும் அறிந்துகொண்டார். ஆகையால் ஒரு சூழ்ச்சியினால் தானம் வாங்கும் முறையைக்கொண்டு பலியைப் பாதாளத்தில் தள்ளிவிட்டார். அப்படித் தள்ளப்பட்டும் பலியானவன் அதைப்பற்றி ஒரு சிந்தனையுமின்றி எப்பொழுதும்போல் சம நோக்கத்தில் இருந்துகொண்டு பாதாளத்தில் சர்வ சுகியாய் இருந்துவந்தான். ஆனால் சில காலம் கழித்து அவன் மீண்டும் இந்திரனுடைய பதவியை அடைய நேரிடும்.

ஆகையால் ராமா! நீயும் இந்த பலி சக்ரவர்த்தியைப்போல் பூர்ணப் பிரயத்தனத்துடன் இந்த சாந்த நிலையை அடைய முயற்சி செய்வாயாக. மற்றபடி நீ பக்குவமடைந்திருப்பதை உன் வாக்கின் நடையிலிருந்தே அறிவேன். நீ வெகு சீக்கிரம் ஜீவன்முக்தன் ஆவாய். ஆகையால் அதைரியத்தை விட்டு, லோக விஷயங்களில் வெறுப்பின்றி மனதை நிர்மலமாக

வைத்துக்கொண்டு உன் கடமைகளைச் செய்துவருவா யாக.

### பிரஹ்லாதன் கதை

வசிஷ்டர்: சத்வ குணத்தைப் பூரணமாக அடைந் தவர்கள் வெகு சீக்கிரம் மோக்ஷத்தை அடைவார்கள். இதை விளக்க இன்னொரு விருத்தாந்தமும் உண்டு. அதைச் சொல்லுகிறேன் கேள்.

ஒரு காலத்தில் வெகு பராக்கிரமும் தபோமகிமை யும் கொண்ட இரண்யகசிபு என்ற அசுரத் தலைவ னொருவன் இருந்தான். தன் தபோ சக்தியினாலும், அடைந்திருந்த வரப்பிரசாதங்களினாலும் மூன்று லோகங்களையும் ஜயித்து, தேவலோகத்தின் ஐசுவரி யங்களைக் கைப்பற்றித் தன் வசமாக்கிக்கொண்டு, மேலும் தேவர்களைத் தன் அரசாங்கத்தில் பணிவிடை செய்ய வற்புறுத்தி, அப்சர ஸ்திரீகளைத் தன் அந்தப் புரத்தில் சைரந்திரிகளாகவும் அமைத்து எல்லோரை யும் இம்சித்து அட்டகாசம் செய்து கொண்டிருந்தான். இத்துடன் புத்திர சம்பத்தும் மனம் குளிர ஏற்பட்டி ருந்தது. கடைசிப் புத்திரனை பிரஹ்லாதன் தகப்ப னைப் போலவே மகா தீரனாக இருந்தான். ஆனால் குணம் தகப்பனைப் போலில்லாமலும், மேலும் மிக அறிவாளியாகவும் பிரஹ்லாதன் விளங்கிவந்தான். இவைகளால் இரண்யகசிபுவுக்கு மதம் உச்சிக்கு ஏறி விட்டது.

### இரண்யகசிபுவின் வதம்

தலைவன் எவ்வளவு பராக்கிரமமுடையனாயினும், அவனுடைய அக்கிரமங்களையும் அநீதிகளையும் பிரஜைகள் எவ்வளவு காலந்தான் பொறுப்பார்கள்?

பொறுமைக்கும் ஓர் அளவுண்டு, பொதுமக்களிடத்து. ஆகையால் தேவர்கள், துன்பத்தைப் பொறுக்க முடியாமல் பகவான் நாராயணனிடம் முறையிட, அவர் உடனே நரசிம்மாவதாரமெடுத்து, கண் பார்வையாலேயே அசுரர்களைப் பொசுக்கி உடனே அந்தர்த்தியானமானுர். இரண்யகசிபுவும் எரிபட்டான். பிறகு தேவர்கள் தங்கள் ராஜ்யத்தை மீண்டும அடைந்து பழைய நிலைமையில் இருந்தார்கள். அசுரர்களிலோ அநேகமாய் எல்லோரும் மாண்டார்கள். பட்டணங்களெல்லாம் திக்கு இரையாயின. இவ்வழிவுக்குத் தப்பின பாகங்களுக்கும், அசுரப் பிரஜைகளுக்கும் தலைவனுகை பிரஹ்லாதன் ஒருவனே பகவான் கோபத்திற்கு இரையாகாமல் இருந்தான்.

### பிரஹ்லாதனின் மன வருத்தம்

நடந்த சம்பவங்களைக் குறித்துப் பிரஹலாதன் மிகவும் துக்கித்தான். "மகா சூரர்களான அசுரர்களெல்லாம் க்ஷணநேரத்தில் நசித்தார்களே! நம் சக்தியெல்லாம் இவ்வளவுதானு? நம்மிடம் பணிவிடை செய்து வந்த தேவர்கள் இப்பொழுது நமக்கு எஜமான ஸ்தானத்தை வகிக்கிருர்கள்! நம் ஸ்திரீகளுக்கு தேவலோகத்தில் பணிவிடை செய்ய நேர்ந்தது! நமக்கும் எவ்வளவு கேவலமான நிலைமை ஏற்பட்டது! இந்த தேவர்கள், தங்களால் செய்யமுடியாத காரியங்களை நாராயணனிடம் முறையிட்டுக்கொண்டு சாதித்துக் கொள்ளுகிருர்கள். அசுரர்களோ தங்கள் பராக்ரமத்தால் தலைதூக்கி வரும்பொழுதெல்லாம், திரும்பித் திரும்பி நாசத்திற்கு ஆளாகிருர்கள். இந்த நாராயணனுக்கு ஏன் இவ்வளவு பக்ஷபாதம்?

### பிரஹ்லாதனின் தீர்மானம்

இந்த நாராயணனுடைய சக்தியைத்தான் என்னவென்று சொல்வது! நாம் எவ்வளவு பராக்ரமத்தை அடைந்தபோதிலும் அவன் பார்வையைக்கூட எதிர்க்க முடியாமல் போகிறதே! இனி நாம் தலைதூக்க என்ன செய்வது? இவனை வசம் செய்துகொள்வதே சரியான யோசனை. இவனை எவ்விதம் வசம் செய்வது? அவனாகவே நான் ஆகவேண்டும். இதுவே சரியான முறையென்று தீர்மானித்துக்கொண்டான்.

உடனே, அதே மாதிரி சங்கல்பம் உடையவனாய் தியானத்தில் அமர்ந்தான். படிப்படியாக விஷ்ணுவின் ஒவ்வொரு அங்கத்தையும் சங்கல்பித்துக்கொண்டு, அப்படியே தானுமிருப்பதாகப் பாவித்துக்கொண்டு, பிறகு அவனுடைய முழு சொரூபத்தையும் தானடைக்தான். இந்தப் பாவனையில் ஸ்திரமாக நின்று, அப்படியே சமாதியை அடைந்தான்.

### அசுரர்கள் விஷ்ணு பக்தர்களானது

இப்படித் தலைவன் விஷ்ணு பக்தனானதைப் பார்த்து இதர அசுரர்களெல்லோரும்கூட அவ்விதமே ஆனார்கள். இச்செய்தி தேவலோகத்திற்குத் தெரிய வந்து, தேவர்கள் "இதென்ன அதிசயம்! என்ன விபரீதத்திற்கோ அசுரர்களின் விஷ்ணுபக்தி! இவர்களும் நாராயணனால் ரக்ஷிக்கப்பட்டால் நம்முடைய கதி என்ன" என்று யோசித்தார்கள். ஆகையால் உடனே விஷ்ணுவை நாடி, இப்படி அசம்பாவிதமான விஷயம் நேரிட்டிருப்பதாகவும் இதனால் தங்கள் இனத்தார்களுக்கு என்ன விபரீதம் நேரிடுமோ என்றும் தேவர்கள் முறையிட்டுக் கொண்டார்கள். இதைக் கேட்ட விஷ்ணுவானவர் ஒரு நொடிப்பொழுதில் தியானத்

தால் விஷயத்தை நன்கு உணர்ந்து தேவர்களை நோக்கி, நல்லோர் தீங்கைச் செய்ய மேற்கொண்டால் தகாதே ஒழிய, கெட்டவர் நல்லவராக மாறினால் ஒரு தீங்கும் விளையாதென்று ஆறுதல் சொல்லி அனுப்பிவிட்டுத் தானும் அந்தர்த்தியானமானார்.

### பிரஹ்லாதனுக்கு விஷ்ணு தரிசனம் கொடுத்தது

பிரஹ்லாதன் சிலகாலம் கழித்து சமாதியிலிருந்து கண்ணை விழித்ததும், விஷ்ணுவானவர் எதிரில் நிற்பதைக் கண்டான். பிரஹ்லாதனுடைய தபஸையும் பக்தியையும் மெச்சி தான் இவைகளால் மிக சந்தோஷம் அடைந்ததாகச் சொல்லி அவன் என்ன வரங்களை எதிர்பார்க்கிறானென்றும் கேட்டார். பிரஹ்லாதன் விஷ்ணுவை மிகச் சிரத்தையுடனும் பக்தியுடனும் நேரில் பூஜை செய்து பிறகு தனக்கு என்ன தேவையென்பதைத் தான் அறியவில்லை யென்றான். இதைக் கேட்ட விஷ்ணு மிகவும் சந்தோஷித்து சர்வ சாந்தமும் அமைதியும் கொண்ட ஆத்மாவை அவன் அடையக் கடவதென்று அனுக்கிரகம் செய்து மறைந்தார்.

### பிரஹ்லாதன் ஞானியானது

இதன் பிறகு, விஷ்ணுவின் அனுக்கிரகத்தின் பிரசாதமாக ஆத்ம சிந்தனையில் ஈடுபட்டு, 'நான் யார்' என்னும் விசாரணையில் முழு மனதையும் செலுத்தினான். படிப்படியாக தேகமோ, கர்மேந்திரியங்களோ, ஞானேந்திரியங்களோ, அல்லது மனதோ ஒன்றும் 'நானாக' இருக்க முடியாது என்ற தீர்மானத்திற்கு வந்தான். எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்யும் சித்தே ஆத்மா; இதன்றி யாதொரு வஸ்துவும் நிலைநிற்காதென்றும், இதுவே பிரபஞ்சமென்

னும் தோற்றத்தை அளித்துக்கொண்டு, தான் நிஷ்களங்கமாகவும் எப்பொழுதும் பூரணமாகவும் இருக்கின்றது, என்றும் தீர்மானத்தை அடைந்தான்.

நான் இப்பொழுது ஆத்மாவாக எவ்விடத்திலும் இருக்கிறேன். நானில்லாமல் வஸ்துவேது, இடமேது? இந்நிலை எவ்வளவு பரமானந்தமாயிருக்கிறது! எவ்வளவு காலமாக ஒரு சிறிய பிரதேசத்தை மகத்தாக நினைத்தும், அல்ப சுகங்களைக் கருதியும் காலத்தை வீணாகக் கழித்தேன். என் முன்னோர்களும்கூட எவ்வளவு மூடர்களாக இருந்தார்கள்? ஒரு சிறிய ராஜ்யத்தின் பொருட்டுத் தேவர்களைப் பகைத்துக்கொண்டு, அடையவேண்டிய பரமமான நிலையை மறந்து, தங்கள் நாசத்தைத் தேடிக்கொண்டார்கள். நம் குல குருவாகிய சுக்ராசாரியர்கூட நம் இனத்தாருக்கு கடைத்தேறும் வழியைக் காட்டாமலிருந்துவிட்டார். இவர்களைக் கைதூக்கிவிட ஒரு பிரயத்தனமும் செய்யவில்லையே. ஏன் எல்லா அசுரர்களும் இந்தப் பரமானந்தத்தை அடையக்கூடாது?

இந்த ஆத்மாவை எவ்வாறு வர்ணிப்பது, எவ்வாறு அறிவது? வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாமல், ஆயினும் சர்வ வியாபியாயிருக்கும் ஆத்மா சர்வ மௌனத்தால்தான் சுட்டிக் காட்டப்படும். வஸ்து ஜாலங்களின் உள்ளும் புறமும் ஆத்மாவே; சூரிய சந்திரர்களும் ஆத்மாவே. மூன்று காலத்தையும் சமமாக்கித் தான் ஏகமாய் நின்று இருப்பினும், அதைப் பூர்ணமென்றுதான் சொல்லத்தகும். பாவம் - அபாவமென்ற இரண்டு தன்மையாகவும் இருந்தும், ஒன்றை ஒழிப்பதால் மற்றொன்று ஏற்படுவதின் பொருட்டு

சமமென்றும் சொல்லப்படும். பிறகு வெகு சூக்ஷ்மமாயும் எவ்விதத்திலும் புலப்படாமலிருப்பதாலும் சூன்யமென்றும் சொல்லத்தகும். வார்த்தைகளின் குறைப்பாட்டால் இப்பதவி மோக்ஷமென்று சொல்லப்படுகிறது.

அசுர ராஜ்யம் க்ஷீணித்தல்

இவ்வித ஆராய்ச்சியையே மேற்கொண்டவனாய்ப் பிரஹ்லாதன் சமாதியை அடைந்தான். வெகு காலம் சமாதியில் இருந்தபடியால் அசுர சாம்ராஜ்யம் அரசனுடைய மேற்பார்வையின்றி வெகு கேவலமான ஸ்திதியை அடைந்தது. ஜனங்கள் நீதி நெறியினின்று நழுவினார்கள். சிநேகிதர், சுற்றத்தார் என்னும் முறைகள் மறைபட்டன. ஏழைகளும், பலஹீனர்களும் ஐசுவரியம் பெற்றவர்களுக்கு அடிமையானார்கள். களவு, கொலை, ஒருவன் மனைவியை இதரர் அபகரித்தல் இவ்வித துன்மார்க்க முறைகள் அதிகரித்தன. சுருக்கமாக, அசுர ராஜ்யம் நிர்மூலமடையும் ஸ்திதியிலிருந்தது.

பிரஹ்லாதன் மீண்டும் ராஜ்யபாரம் செலுத்தல்

இவ்வித நிலையில், விஷ்ணுவானவர் பால் கடலில் கிரமப்படி ஆறுமாதகால நித்திரையிலிருந்து கண் விழித்தார். உடனே தன்னை ஆதாரமாகக்கொண்ட பிரபஞ்சம் எப்படி நடைபெற்று வருகிறதென்று கவனிக்கலானார். முதலில் தேவர்களை ஸ்மரித்து அவர்களுடைய க்ஷேமத்தையும், தேவேந்திரன் தன்னுடைய பதவியில் ஸ்திரமாயும் சந்தோஷமாயும் இருப்பதையும் அறிந்துகொண்டார். பிறகு பூலோகமும் சரிவர நடந்துவருவதை அறிந்தார். கடைசியாக பாதாளத்தைக் கவனிக்கும்பொழுது அது முற்றிலும்

சீர்கெட் டிருப்பதையும், அதற்குக் காரணம் தலைவ னில்லா திருப்பதென்றும் உணர்ந்தார். அசுரர் கள் இவ்வாறு நாசமடைவது சரியல்லவென்று எண்ணினர். ஏனெனில் அதனால் தேவர்களும், செயல்கள் குன்றி, முன்னேற்றத்திற்கு வசதியின்றி, நாசமடைவார்கள். அது பிரபஞ்சத்தின் அழிவுக்குக் காரணமாகும். பிறகு தானும் யாதொரு கர்மமில்லா மல் ஆத்ம நிஷ்டையில் இருக்கவேண்டியதே. இப்படி அழிவைத் தேடுவது தனக்கும் உரிமையல்ல; அதற்கு ஈசுவரனிருக்கிறான். தனக்கு விதிக்கப்பட்ட தர்மம் பிரபஞ்சத்தைப் பரிபாலிப்பதே. ஆகையால் அசுரர்கள் நாசமாகாமல் அவர்களுக்குத் தகுந்த தலைவனை நியமிப்பதே சரி. இந்த ஸ்தானத்தை வகிக்க பிரஹலாதனுக்கு யார் ஈடாகும்? அவனால் தேவர்களுக்கும் யாதொரு தீங்கும் நேரிடாது. ஆகை யால் இவனை நிஷ்டையிலிருந்து எழுப்பி ராஜ்ய பாரத்தை ஏற்றுக்கொள்ளச் செய்யவேண்டுமெனத் தீர்மானித்துக்கொண்டார்.

உடனே பால்கடலிலிருந்து எழுந்து, தன் ஆயுதங் களைத் தரித்து, லக்ஷ்மி சகிதமாய் கருடவாகனத்தின் மீதேறி பிரஹ்லாதன் இருக்குமிடம் நோக்கிச் சென் றார். இருப்பிடம் அடைந்ததும், பிரஹ்லாதனை விழிக்கச் செய்வதற்கு தன் சங்கினால் உலகமெங்கும் எதிரொலிக்கும்படி ஊதினார். விஷ்ணுவின் பிராண தொனியாக இருந்தபடியால் பிரஹ்லாதனின் சமாதி கலைக்கப்பட்டு, பிறகு கொஞ்சம் கொஞ்சமாய் உலக ஸ்மரணை ஏற்பட்டு, தேகமும் அசைவுற்று அவன் கண்ணை விழித்துக்கொண்டான். பிறகு உலகப் பிரக்ஞை முற்றிலும் ஏற்படும்படி பிரஹ்லாதனை

நோக்கி, "மகாத்மா பிரஹ்லாதா" என்று அழைத்தார். அவ்வாக்கின் சக்தியால் அவன் தேகம் அசைவுண்டு, மனமும் உலக விஷயங்களில் இயங்கும்படியான தன்மையை அடைந்தது. அச்சமயம் பார்த்து பிரஹ்லாதனுக்கு விஷ்ணு பின்வருமாறு உபதேசித்தார்.

விஷ்ணு: பிரஹ்லாதா! நீ பரிபூர்ண ஞானியாகி விட்டாய்; ஆத்ம தத்துவத்தை நன்கு உணர்ந்தாய். ஆதலால் உனக்கு வேண்டும், வேண்டாமென்றதே கிடையாது. நோக்கம் இப்படி இருக்க, எப்பொழுதும் சமாதியிலே நீ உட்கார்ந்து தேகத்தை நாசம் செய்துகொள்வதின் பயன் என்ன? ஏனெனில், வாஸ்தவத்தில் சமாதி நிலைக்கும் மரணத்திற்கும் வித்யாசம் இல்லை. நான் நியதியின் போக்கை அறிந்தவன். இந் நியதியின் பிரகாரம் உன் தேகம் கல்ப கால பரியந்தம் அழியாமல் நின்றே தீரவேண்டும் (அதாவது தேகத்தை மறுபடியும் மறுபடியும் எடுத்துக்கொள்ளும் தன்மை). பிரம்மா, ருத்ரன், நான் எல்லோரும் அழிவு அடையும் காலத்தில்தான் உன் தேகத்திற்கும் நாசமேற்படும். ஆகையால் இப்பொழுது பலாத்காரமாக நீ தேகத்தை விட்டிருக்கும் நிலையை அடையக் கருதுவது சரியல்ல ஞானிகளுக்கு வேண்டாமென்ற நோக்கமும் தகாதல்லவா?

ஜீவிதத்திற்கும் மரணத்திற்குமுள்ள பேதம்

ஜீவிதமென்பது இப்பொழுது தரிக்கப்பட்ட உடல்மேலுள்ள ஆசையைக் குறிப்பது; மரணமென்பது இந்த தேகத்தின் நாசத்திற்குப் பிறகு ஏற்படும் தேகத்தின் மேலுள்ள ஆசையைக் குறிப்பிடுவது. உனக்கு இவ்விரண்டுவித ஆசைகளிலும் நோக்கம்

கிடையாது. நீயே சர்வ வியாபியான ஆத்மாவாக இருப்பதால், ஒரு இடம் விட்டு மற்றொரு இடம் போவதற்கும் போகாமலிருப்பதற்கும் கிரமம் ஏது? தேகமிருந்தும் அதன்மேல் நோக்கமில்லாததால் தேக மில்லாத தன்மையை உடையவனாக இருக்கிறாய்.

வாழ்க்கையைத் துறப்பது ஞானிகளுக்கு முறையல்ல

மேலும் உன்னைப்போல மகா புருஷர்கள் உலகத் தில் வாழ்க்கையை நடத்திவந்தால் ஜனங்களுக்கு க்ஷேமம் உண்டாகும். ஏனெனில் ஜனங்களும் நீதி முறைகளைப் பின்பற்றி சம்சார வாழ்க்கையில் இன்பத்தை அடைவார்கள். உலகத்திற்கே திலகம் போல் விளங்கும் உன்னைப் போன்ற சத் புருஷர்கள் உலகத்தைத் தியாகம் செய்தால், ஜனங்களுக்கு நற் கதியை போதிப்பது யார்? நல்லோர்களும் ஞானிகளும் உலகத்தைத் துறந்தால், அறிவில்லாதவர்களும் துஷ்டர்களுமே அதன் போக்கைக் கவனிக்க நேரிடும். அப்பொழுது உலகத்தின் நடை எவ்வாறிருக்கும்?

ஆகையால் சதா சமாதியிலிருக்கும் நோக்கத்தை நீ விட்டுவிடு. நியதியின் போக்கை அனுசரித்து தேகம் தானாகவே நாசமடையட்டும். உன் பிரயத்தன மெல்லாம் மனம் ஒருமுகப்பட்டிருப்பதில் இருக்க வேண்டும். இச்சை, துவேஷம், வேண்டும், வேண்டாம் என்ற துவந்த்வ பாவங்களை மாத்திரம் விட்டு விட்டு, யதேச்சையாக வந்தவைகளை மன வேறுபாடில்லாமல் அனுபவித்தும், வராதவைகளைப் பற்றிக் கவலையின்றியிருப்பதுமே உன்னைப்போன்ற ஞானிகளுக்குத் தகுந்த முறை. கர்மத்தில் துவந்த்வ பாவமும், மனதில் அபாவமும்தான் சமநிலை யென்றும்,

புறநோக்கம் அற்ற ஜீவன் முக்த ஸ்திதி யென்றும் கருதப்படும்.

வசிஷ்டர்: இம்மொழிகளைக் கேட்டதும் பிரஹ்லாதன் தான் ஒருவித நோக்கமும் இல்லாதிருப்பதால் பகவான் இஷ்டப்படி செய்யலாம் என்று சொன்னான். பிறகு பகவானே பிரஹ்லாதனைச் சிம்மாசனத்தில் அமரச்செய்து, தேவர், வித்யாதரர், முனிவர்கள் முன்பு மகுடாபிஷேகம் செய்து வைத்தார். பிறகு அசுரர்களையும் ஆசிர்வதித்து, நாராயணன் திரும்பிச் சென்றார்.

இந்தப் பிரஹ்லாதனுடைய வரலாற்றை யார் கேள்வியுற்று அதில் போதிக்கப்பட்ட ஒழுக்கங்களையும் தத்துவத்தையும் ஆராய்ச்சி செய்து அவ்விதம் அனுசரித்து வருகிறார்களோ அவன் மோக்ஷத்தை அடைவதில் சந்தேகமில்லை.

ராமன்: பிரஹ்லாதன் தேகம் மனம் இரண்டின் ஸ்மரணையையும் விட்டு ஆத்ம சிந்தனையிலே இருக்க, எவ்விதம் விஷ்ணுத் தொனியினால் சமாதியிலிருந்து எழுப்பப்பட்டான்?

வசிஷ்டர்: தேகத்தைத் தரித்திருக்கும் வரையில், நியதிக்குட்பட்ட தேக ஸ்மரணைக்கு அடிக்கடி வராமலிருக்க முடியாது. ஆகையால் சமாதியையே நோக்கி இருந்தாலும், திரும்பித் திரும்பி தேக உணர்ச்சிகளுக்கு உட்பட்டு உலக விஷயங்களுக்கு விழித்தே தீர வேண்டும். பஞ்ச பூதங்களாலே ஏற்பட்டிருக்கும் தேகம் அப்பூத உணர்ச்சிகளுக்கு உட்படாமல் எப்படி இருக்க முடியும்?

மேலும் பிரஹ்லாதன் விஷ்ணுவையே ஆத்மாவாகக் கருதி அந்த ஸ்மரணையில் சமாதியிலிருந்ததால்

விஷ்ணுவானவர் நினைத்த தருணம் சமாதியிலிருந்து அவன் வெளி நோக்கத்தை அடைந்தான்.

பிரஹ்லாதன் முக்தியடைந்தது தன் பிரயத்தனத்தால்

ராமன்: முக்தியை அடைய சொந்த முயற்சியே தேவையென்று முன்னமே சொல்லப்பட்டது. ஆனால் பிரஹ்லாதன் விஷ்ணுவின் அனுக்கிரகத்தால் முக்தி அடைந்தது எவ்விதம்?

வசிஷ்டர்: இங்கே விஷ்ணுவின் அனுக்கிரகம் ஏது? தன் சொந்தப் பிரயத்தனத்தாலும் ஆராய்ச்சியாலுந்தான் ஆத்மத்தை அறிந்தான். மேலும் இங்கே விஷ்ணுவென்று சொல்லப்பட்டது ஆத்மாவே. வியவகாரத்தின் பொருட்டு ஒரு நாமம் கொடுக்கப்பட்டது. பிரயத்தனத்திற்குப் பிறகு, பலனாக சித்தி அடையப்பட்டதே தவிர, முயற்சிக்கு முன், வரனாக ஒன்றும் கிடைக்கவில்லையே!

ஆத்மா ஆத்மாவினால்தான் காணப்படும். வேறெவ்விதத்தாலும் காணப்படாது. இதற்குப் பௌருஷமும் ஆராய்ச்சியும்தான் உதவும். ஜனங்களால் வழங்கப்பட்ட தெய்வமென்ற சொரூபத்தால் முடியாது. குருவின் மூலமும் அதை அடைய முடியாது. அப்படி அடைவதாக இருந்தால், குருவினுடைய ஆடு மாடெல்லாம் மோக்ஷத்தை அடையலாமே! எனவே, இது பிறரால் கொடுக்கப்படுவதன்று.

இவ்விஷயத்தில் இதர உபாயங்களாகிய பூஜை முதலியனவும் பயன்படா. ஆராய்ச்சி செய்யத் தகுதியற்றவர்களுக்கே பூஜை விதிக்கப்பட்டது; விவேகிகளுக்கு இது தகுந்த மார்க்கமல்ல. பூஜை பக்தியுடன் செய்யப்பட்டால் அதனால் மனம் சுத்தியாகலாம். ஆனால் ஆத்மலாபம் அடைவதென்பதைக் கனவிலும்

எண்ணவேண்டாம். எந்த மார்க்கத்தை அனுசரித்தாலும் கடைசியில் இந்திரியங்களையும் மனதையும் அடக்கி ஆத்மாவைக் காணும் பிரயத்தனத்தில் பௌருஷத்தை உபயோகித்தால்தான் ஆத்ம தரிசனம் சித்திக்கும். விஷ்ணுப் பூஜையில் காலங்கழிப்பதைவிட நேராக மனதை வசம் செய்வதில் தீவிர முயற்சியைச் செய்வதே உசிதம். மூடர்களுக்கு விதித்த மார்க்கமாகிய பூஜையை விவேகிகள் ஏன் மேற்கொள்ளவேண்டும்?

காதியின் வரலாறு

வசிஷ்டர்: ஆகவே சித்தத்தை ஒடுக்கி மாயையாகிற பிரபஞ்சத்தில் அகப்பட்டுக் கொள்ளாவண்ணம் பிரயத்தனம் செய்து வருவதே நமக்கு உரிய மார்க்கம். இந்தப் பிரபஞ்சமாகிற மாயை எவ்வளவு விஸ்தாரமானது என்பதை விளக்க ஒரு சிறு கதை சொல்லுகிறேன், கேள்.

கோசலமென்ற தேசத்தில் முன்னொரு காலத்தில் காதியென்ற ஒரு பிராமணனிருந்தான். அவன் சாஸ்திரங்களை நன்றாக ஆராய்ந்தவனாயும் அதனால் வாழ்நாளைச் சிறப்பாய்ச் செலுத்துபவனாகவும் இருந்தான். திடீரென ஒரு நாள் அவன் நகர வாழ்க்கையை வெறுத்து, காட்டில் போய்த் தவம் செய்யத் தீர்மானித்து, உடனே புறப்பட்டு விந்தியாரண்யத்தில் காடும் நதியும் சேர்ந்த ஸ்தலமொன்றை அடைந்து அங்கே சில காலங் கழித்தான்.

பிறகு ஒரு நாள் பெருந் தவமொன்றைத் தொடங்கக் கருதி, ஆற்றிலிறங்கி ஜலத்தில் நின்றவாறு தவம் செய்தான். எட்டு மாதம் கழிந்த பிறகு,

தேகமும் சற்று மாறுதலடைவதாக இருக்கும் சமயம் விஷ்ணுவின் தரிசனம் கிடைத்தது.

தவத்தால் தான் மிக சந்தோஷ மடைந்ததாகவும். அவனுக்கு வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள் ளலாமென்றும் விஷ்ணு சொன்னார். இச்சைகளையெல் லாம் துறந்த காதி, தான் பிரபஞ்சமாகிய மாயையை முற்றிலும் அறிய இஷ்டப்படுவதாகச் சொன்னான். அவ்விதமே அறிந்து பிறகு ஞானத்தையும் அடையக் கடவதென்று அனுக்கிரகித்து விஷ்ணு மறைந்தார்.

காதியின் மனத்தோற்றம்

சில நாட்கள் கழிந்ததும் விஷ்ணுவின் ஆசீர்வாதம் நடைபெறவில்லை யென்ற சிந்தனையுடன், நீராடும் பொருட்டு ஆற்றிலிறங்கி ஜலத்தில் மூழ்குகையில் அவனுக்கு ஒரு விசித்திரமான காட்சி மனக்கண்ணில் புலப்பட்டது. அதாவது ;

தான் சவமாய்க் கிடப்பதாகவும், தன் பந்துக் களும் சிநேகிதர்களும் அழுது புரண்டு துக்கத்தில் மூழ்கிப் கிடப்பதாகவும் இருந்தது. பிறகு தான் ஒரு சக்கிலிப் பெண் வயிற்றில் ஆண் சிசுவாய்ப் பிறந்து, காலக் கிரமத்தில் யௌவன மடைந்து, ஒரு வேட னாக இருந்து அக்காட்டுப் பிரதேசத்தில் மகா தீர னென்று வழங்கி வந்தான். பிறகு தன் இனத்திலே ஒரு பெண்ணை மணந்து, பல குழந்தைகளையும் அடைந்து, வயதும் அதிகரித்து உடல் ஒடுங்க லாயிற்று. இனிக் காட்டுவாசம் சரியல்ல என்று அடுத்த கிராமத்தில் ஒரு குடிசையில் வசித்து வந் தான். நல்ல முதிர்ந்த வயது அடைந்த காலத்தில் மனைவி, குழந்தைகள், சுற்றத்தார் எல்லோரையும் வெகு சீக்கிரத்தில் ஒவ்வொருவராக இழந்தான்.

விதியின் கொடுமையைக் கண்டு வருந்தி அவ்விடத்தை விட்டு அகலுவதே மேலென்ற எண்ணத்துடன் கால் சென்றமட்டும் போனான். வெகுநாள் பிரயாணத்திற்குப் பிறகு கிராட மண்டலமென்னும் ஓர் அழகிய பட்டணத்தை அடைந்தான். அந்நகரத்தில் உள்ளே போகையில் ஓர் அரண்மனை வாசலைக் கண்டு, அநேக ஜனங்கள் கூடி இருப்பதையும் பார்த்தான். இக்கூட்டத்திற்கு காரணமென்னவென்று விசாரிக்க, அவ்வூர் அரசன் சந்ததி இல்லாமல் இறந்ததாகவும், தேச வழக்கப்படி யானையிடம் மாலைகொடுத்துப் புதிய அரசனை நியமிக்க வேண்டி இருப்பதாகவும் கேள்விப்பட்டான். அதற்கேற்றபடி ஒரு யானை மாலையுடன் தயாராக இருப்பதையும் கண்டான். இந்த யானையைச் சற்று உற்றுப்பார்த்த வண்ணம் நிற்கையில், திடீரென மாலை இவன் கழுத்தில் விழுந்தது. மேலும் தும்பிக்கையால் பிடிபட்டு யானை முதுகின்மேல் உட்கார வைக்கப்பட்டான். உடனே அந்த ஜனங்கள் கரகோஷத்துடன் அவனை ராஜாவாக அங்கீகரித்து சிம்மாசனத்தில் அமர்த்திப் பட்டாபிஷேகம் செய்தனர்.

இப்படி 8 வருஷ காலம் காவலனென்ற நாமத்துடன், ராஜ்ய பரிபாலனம் செய்த பிறகு, ஒருநாள் தன் அரண்மனை வாசற்புறம் கால் நடையாகப் போய்க் கொண்டிருக்கையில் ஒரு சக்கிலியன் எதிரில் வந்து, "ஓ, கடஞ்ஜா! என் சுற்றத்தானே, நீ இங்குதான் இருக்கிறாயா, ராஜாங்கத்தில் வேலை செய்கிறாயா?" என்று கேட்டான். அதற்கு அவன் ஒன்றும் பதில் சொல்லாதவனாய் மனக்கலக்கத்தோடு அரண்மனைக்குத் திரும்பினான். அரண்மனைவாசிகள் சிலர் இதைக்

கவனித்து விட்டதால், மந்திரிகள், இதர கனவான்கள் எல்லோருக்கும் இச் செய்தி தெரியவந்தது. இவ்வளவு காலம் தாங்கள் ஒரு சண்டாளனை ராஜாவாக அடைந்ததைப்பற்றி மிக விசனித்து, இந்தப் பாபத்தைத் தொலைக்க அக்னிப்பிரவேசம் செய்தால்தான் திருமென்று தீர்மானித்து, அவ்வாறே எல்லோரும் அக்னிக்கு இரையானார்கள். ராஜா இந்த விபரீதச் செயலைக் கண்டு மிகவும் வருந்திப் பொது ஜனங்கள் அழிந்த பிறகு தான் மாத்திரம் ஜீவிப்பதில் என்ன பயனென்று தானும் அக்னிகுண்டத்தில் வீழ்ந்தான்.

### காதியின் விழிப்பு

அதே க்ஷணம் தண்ணீரில் அமர்ந்த காதியானவன் பூர்வ பிரக்ஞையை அடைந்தான். கண் விழித்ததும் கொஞ்ச நேரம் புத்தி ஸ்வாதீன மில்லாதவன்போல் இருந்தான். கள் குடித்தவன் போதை தெளிந்ததும் இருப்பதுபோல, அல்லது மயக்கத்திலிருந்து தெளிந்து எழுந்தவன்போல இருந்தான். தன்னைச் சுற்றிப் பார்த்துப் பழைய ஞாபகம் முற்றிலும் வந்த பிறகு, தான் கண்டது கனவென்று தீர்மானித்துக்கொண்டான். ஆனால் வெகு சொல்ப நேரத்தில் எவ்வளவு நீண்ட காலத்து அனுபவம் ஏற்பட்டதென்பதை நினைக்க வெகு ஆச்சரியமாக இருந்தது. இது ஜகத்தின் மாயையென்று அறிந்துகொண்டு, விவேகமும் அடைந்து காலம் கழித்துவந்தான்.

### காதி தன் மனத் தோற்றத்தை இதர மனிதனிடமிருந்து கேள்விப்படுவது

சில தினங்களுக்குப் பிறகு பிராமணன் ஒருவன் அதிதியாக இவனை நாடி வந்தான். அவனுக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்து, போஜனமிட்டுப் பல

விஷயங்களைப்பற்றி அவனுடன் பேசிப் பொழுதைக் கழித்தான். இரவில் இருவரும் படுத்தபடியே பேசிக் கொண்டிருக்கையில் காதி யதேச்சையாக அதிதியை நோக்கி ஏன் அவனுடைய தேகம் மிகவும் க்ஷீணித்திருக்கிறதென்று கேட்டான். அதற்குப் பிராமணன், தான் பிராயச்சித்தம் செய்துகொள்ளும் பொருட்டு பிரயாகை போயிருந்ததாகவும், அங்கே இரண்டு பக்ஷம் சாந்திராயண விரதம் இருந்ததாகவும், அதனால் உடம்பு மெலிந்ததென்றும் சொன்னான். இந்த விரதங்களை ஏற்றுக்கொண்டதன் காரணம், தான் ஒருமாத காலம் கிராட தேசத்தில் வாசம் செய்துவந்த பொழுது, அத்தேசத்தரசன், எட்டு வருஷ காலம் அரசாட்சி செய்துவந்த பின்னர், சண்டாள வம்சத்தைச் சேர்ந்தவனாக ஜனங்களுக்குத் தெரியவந்து, எல்லோரும் அதனால் ஏற்பட்ட பாபத்தைத் தொலைக்க அக்னிகுண்டம் பிரவேசித்தார்கள்; அரசனும் அவ்வாறே செய்தான். ஆகையால் தானும் பிராயச்சித்தம் செய்துகொள்ள நேரிட்டதென்று அந்தப் பிராமணன் சொன்னான்.

### காதியின் மனக்கலக்கம்

காதிக்கு உண்டான ஆச்சரியம் சொல்லிமுடியாது. தன் மனதில் தோன்றியது வெறும் காட்சியா அல்லது நடந்த சம்பவத்தின் பிரதிபிம்பமா என்பது விளங்கவில்லை. ஆகையால் மறுதினம், அதிதி விடைபெற்றுச் சென்றபின், தன் மனதில் தோன்றிய பிரதேசங்களை நேரே கண்டு பரிசோதிப்பதாக, வெளிக்கிளம்பினான். சில நாட்களில் கிராட தேசத்தை அடைந்து அங்கு பல ஜனங்களைக் கண்டு விசாரித்தான். சக்கிலியாகிய வேடன் வசித்து வந்த இடங்களை

விசாரித்து அங்குபோய்ச் சோதித்தான். பிறகு கிராட தேசத்தின் எல்லைப் பிரதேசங்களுக்குச் சென்று அங்கும் விசாரித்தான். கனவுத் தோற்றத்தில் ஏற்பட்ட சம்பவங்களெல்லாம் வாஸ்தவமாக நடைபெற்றதாக எல்லோராலும் ருசுப்படுத்தப்பட்டது. இவைகள் நடந்து பன்னிரண்டு வருஷமானதாகவும் அறிந்து கொண்டான். காதிக்கு மனக்கலக்கம் அதிகரித்ததே தவிர, குறையவில்லை. மாயையின் விஸ்தரிப்பும் விசித்திரமும் எவ்வளவு அளவுகடந்ததென்று எண்ணினான். ஆயினும் இதன் மூலத்தை அறிய ஆவல் கொண்டவனாய், ஏகாந்தமான ஓர் இடத்தை அடைந்து விஷ்ணுவைக் குறித்துத் தியானித்தான்.

### விஷ்ணு தரிசனம்

சில நேரத்தில் விஷ்ணு பிரத்யக்ஷமாகி, காதியை நோக்கி, மாயையின் விளையாட்டை வேண்டிய அளவு அனுபவித்தும் மறுபடியும் எதைக் குறித்து நிஷ்டை யென்று கேட்டார். பகவானை நமஸ்கரித்து, தான் மாயையைப்பற்றித் தெரிந்து கொண்டும், மனத் தோற்றத்திற்கும் பிரத்யக்ஷமான அனுபவத்திற்கும் சம்பந்தம் புரியவில்லை யென்று சொன்னான். அதற்கு பகவான் அளித்த பதில் வருமாறு:—

விஷ்ணு:—பிரபஞ்சம் முழுதும் சித்தில் சூக்ஷ்மமாக அடங்கி இருக்கிறது, மரத்தின் கிளை, இலை, பூ எல்லாம் வித்தில் அடங்கி இருப்பதுபோல. சித்தில் அடங்கி இராதது வெளியிலும் தோன்ற முடியாது. ஆகையால் பிரபஞ்சத்தில் நடைபெறுவதெல்லாம் சித்தில் அடங்கி இருக்க, இந்த அற்ப விஷயம் மனதில் பிரதிபலித்ததில் ஆச்சரியம் என்ன? மேலும் சித்தில் காண்பது ஒரு தோற்றம் தானே! அதுவே வெளி

யிலும் காணப்படும்பொழுது, இதை வாஸ்தவமென்று எப்படிச் சொல்லலாம். ஆகையால் அதுவும் பொய்யே. மேலும் நீ கிராட தேசம் அடைந்து அங்கே விசாரித்ததும், பார்த்ததும் நிஜமன்று. நீ அங்குச் செல்லவே இல்லை. போகும் மார்க்கத்தில் நடையின் களைப்பால் அயர்ந்து தூங்கும்பொழுது கண்ட கனவே எல்லாம். மனதின் தீவிரத்தால் இக்கனவை வாஸ்தவமென எண்ணலானாய். ஆகையால் நீ கண்டதெல்லாம் தோற்றங்களே.

வசிஷ்டர்: இவ்வாறு சொல்லி முடித்து, விஷ்ணு மறைந்துவிட்டார். காதிக்கு மனக்கலக்கம் கொஞ்சமேனும் குறையவில்லை. சில நாள் ஆராய்ச்சி செய்து பார்த்தான். குழப்பம் மேலிட்டது. ஆகையால் மறுபடியும் விஷ்ணுவைக் குறித்துத் தபஸ் செய்தான். பகவான் மறுபடியும் பிரத்யக்ஷமாகி மீண்டும் என்ன சந்தேகமென்று கேட்டார். "உங்களைப்போல மகான்களால் மனத்திற்கு சாந்தி ஏற்படுவதை விட்டு, சந்தேகங்கள் அதிகரிப்பது சரியல்ல. நீங்கள் சொன்னதில் ஒன்றுக்கொன்று பொருத்தமே இல்லை. கிராட தேசத்தில் நடந்த சம்பவங்கள் பல வருஷங்களுக்கு முன்; இவைகள் என் தோற்றத்தில் பிரதிபலித்தது சில மாதங்களுக்கு முன். நான் கண்டது கனவு; அங்கே நடந்தது பிரத்யக்ஷம். எனக்கும் இவைகளுக்கும் சம்பந்தமென்ன?" என்று சொல்லித் தன் மனக்கலக்கத்தை நீக்கும்படி வேண்டிக்கொண்டான்.

### மனத்தின் சொரூபம்

விஷ்ணு: மனம் என்பது எல்லாப் பிராணிகளையும் வியாபித்து நிற்கும் ஒரே சக்தி. இது ஒவ்வொருவருக்கும் வெவ்வேறு காட்சியைக் கொடுக்கவும், பல

பேருக்கு ஒரே காட்சியைக் கொடுக்கவும் சக்தியைக் கொண்டது. ஆதலால்தான் சக்கிலியனுக்கும் கிராட தேச வாசிகளுக்கும் உனக்கும் ஒரே தோற்றம் மனதில் உதித்தது. ஆனால் அது உன்னிடத்தில் தோற்றமாக நின்றுவிட்டது; அவர்களிடமோ அனுபவமாக நடைபெற்றது.

இன்னொரு விஷயமும் கவனிக்கத் தக்கது. செடி கொடிகளெல்லாம் கால வித்யாசங்களை அனுசரித்து எப்படி வளர்ச்சி அடைகின்றனவோ அதேமாதிரி மானிடர்களும் வியவகாரத்தின் பொருட்டு காலமென்பதை நிமித்தமாகச் செய்து கொண்டார்கள். இக்காலம் மனத்தால் சங்கல்பித்துக் கொள்ளப் பட்டது. பிறகு மனத் தோற்றங்களை இக்காலத்துடன் சேர்த்துப் பார்க்கும்பொழுது காணும் காட்சிகளில் கால வித்தியாசம் காணப்படுகிறது. ஆகவே, மனதில் காட்சியாகக் காணப் படுபவைகளும், வெளியில் பிரத்யக்ஷமாக நடைபெறுபவைகளும், சர்வ வியாபியான மனதில் எப்பொழுதும் இருந்தே வருகின்றன. அவரவர் மனதில் இக்காட்சிகள் பிரதிபலிக்கும் பொழுது, கால வித்தியாசத்துடன் கூடிய அனுபவங்களாக அவர்கள் உணருகிறார்கள், கடஞ்சனென்ற சக்கிலியன் இருந்தது வாஸ்தவம். அவன் கிராட தேசத்திற்கு அரசனானதும் வாஸ்தவமே. இதை நீயும் அறிந்தவனாக இருந்தாய். இந்தத் தோற்றந்தான் பல வருஷங்களுக்குப் பின் உன் மனதில் தோன்றிற்று. இப்படி வாஸ்தவமாக நடைபெற்ற விஷயங்கள்தான் யதேச்சையாக சிலர் மனதில் தோற்றமாக பல வருஷ களுக்குப் பின்னும் ஏற்படலாம். முற்றிலும் மறக்கப் பட்டவைகள்கூட இவ்விதம் காணப்படலாம்.

இப்பொழுது உனக்கு மோகம் நீங்கி இருக்கும். இனி மாயையின் விசாரணையை ஒழித்து ஆத்மாவைக் குறித்து விசாரித்து மோக்ஷத்தை அடைவாயாக என்று அனுக்கிரகித்து விஷ்ணு மறைந்தார்.

வசிஷ்டர்: இதன் பிறகு காதியானவன் மாயை விசாரணையை ஒழித்து 10 வருஷ காலம் ஆத்ம விசாரணையில் ஈடுபட்டுக் கடைசியில் முக்தியடைந்தான்.

மாயையின் மோகம் இவ்வளவு ஆடம்பரத்துடன் கூடி, பலமாகவும் விஸ்தாரமாகவும் இருந்துவருகிறது. இது ஆத்மாவின் வாசனையைக் கூடியே இருப்பதால் எல்லா ஜனங்களையும் தன் வசமாக்கிக் கொள்ளுகிறது. இந்த மோகத்திலிருந்து தப்பினவர்கள் மிகவும் சொல்பமே. ஆகவே ஆத்மாவை அடையும் நோக்கத்தை வைத்துக்கொண்டுதான் மாயையை விலக்கிக் கொள்ளவேண்டும்.

உத்தாலகன் கதை

வால்மீகி: இந்த ஆத்மாவை அடைய உத்தாலகனைப் போல, பஞ்ச பூதங்களின் தத்துவத்தை அறிந்து கொண்டு, தேகம், பிரபஞ்சமாகிய பஞ்ச பூத விசேஷங்கள் மேலுள்ள ஆசையை ஒழிப்பது தகுந்த மார்க்கமாகும் என்று வசிஷ்டர் சொல்ல, ராமன் உத்தாலகன் எவ்விதம் ஆத்மாவை அடைந்தான் என்று கேட்டான்.

வசிஷ்டர்: கந்தமாதனம் என்னும் மலைப்பிரதேசத்தில், ஜலம், பூச்செடிகள், மரங்கள், சௌகரியம் கூடிய ஒரு பாகத்தில் உத்தாலகனென்ற பிராமணன் ஒருவன் ஏகாங்கியாக வசித்துவந்தான். நித்யகர்மங்களை ஒழுக்கத்துடன் செய்தும், சாஸ்திரங்களைப் படித்தும்,

கடினமான தபஸுகளைச் செய்தும் வந்ததால், அவனுக்கு விவேகம் ஏற்பட்டு அதனால் பின்வரும் எண்ணங்கள் மனதில் உதித்தன. "மனிதர்கள் படும் துயரங்களுக்குக் காரணம் எண்ணங்கள். இவ்வெண்ணங்கள் சங்கல்பத்தால் விருத்தியாகின்றன. நான் எப்பொழுது இவைகளை அடியோடு ஒழித்து நிராசையுடனும் சித்த விருத்தியின்றியும் இருப்பேன்? எப்பொழுது நான் பிரபஞ்சத்தை முற்றிலும் விட்டொழித்து ஏகாங்கியாக ஆத்மத்தில் சாந்தியடைவேன்?" இவ்வித எண்ணங்களைத் தொடர்ந்து, மனதை அடக்குவதில் பிரயத்தனத்தைச் செய்ய வேண்டுமென்ற தீர்மானத்தை யடைந்தான். உடனே பத்மாசனத்தில் அமர்ந்து ஆத்ம ஸ்மரணை செய்ய ஆரம்பித்தான்.

### இந்திரியங்களால் ஏற்பட்ட தடை - இதை ஒழித்தல்

கண்ணை மூடியதுதான் தாமதம், மனம் சஞ்சலமடைய ஆரம்பித்தது. நானாவித விஷயங்களைத் தொடர்ந்து ஓடிற்று. அடக்கப் பிரயத்தனம் செய்ததில் இன்னும் அதிக சஞ்சலமடைந்தது. இதன் காரணமென்ன வென்று யோசித்தான். மனதிற்கு விஷயங்கள் பஞ்ச இந்திரியங்களால் ஏற்படுகின்றன. இவ்விஷயங்களில் விருத்தி ஏற்படுவது இந்திரிய சுகங்கள் மேலுள்ள ஆசையே. இவ்வாசைகளை ஒழித்தால்தான், மனது வற்றும். இப்படித் தோன்றவே, மனதை நோக்கித் தனக்குத் தானே சொல்லிக்கொண்டான்: "ஏன் உனக்கு இந்த விஷய சுகங்களில் ஆசை? இவைகளால் உண்டாகும் தீங்கை நீ அறியவில்லைபோலும். சத்தத்தைக் கேட்டு மான் தன் உயிரை இழக்கிறது. ஆண் யானை ஸ்பரிசத்தால்

தன் சுதந்தரத்தை இழக்கிறது; விளக்குப் பூச்சி நேத்திரத்தாலும், மீன் ருசியினாலும், தேனீயானது வாசனையாலும் உயிரை மாய்த்துக் கொள்ளுகின்றன. இவைகளுக்கெல்லாம் ஒரு இந்திரியந்தான் நாசத்திற்குக் காரணமாயிருக்கின்றது. உன்னை ஐந்து இந்திரியங்கள் சேர்ந்து நாசம் செய்து வருகின்றன. இதை அறியாமல் நீ திண்டாடுகிறாய். உனக்குக் கொஞ்சமும் விவேகமில்லை. இனி இதை அறிந்து இவ்வாசைகளை அடியோடு ஒழித்துச் சாந்தியடைவாய்.''

பிறகு தன் தேகத்தைப்பற்றி யோசித்தான். எந்தப் பரமாணுவிலும் 'நான்' என்பது இருப்பதாகத் தெரியவில்லை. எதுவும் தனிமையாக ஆத்மாவென்று உணரப்படவுமில்லை. இவ்வாறு வெகு நேரம் ஆராய்ச்சி செய்தபின் ஆத்மா சர்வ வியாபி, சுயம் பிரகாசம் பெற்றது, பகுக்கப் படாதது, சிரஞ்சீவி, சாந்தம் என்று உணர்ந்தான். 'நான்' என்பதை அறியாதவர்களே சம்சாரத்தில் சிக்கிக் கொண்டு திண்டாடுகிறார்கள். தேகத்தையும் மனதையும் "நானென்று பாவிப்பதன் பலனே இந்த அக்ஞானம். ரத்தம், மாமிசம், தோல், ரோமம், எலும்பு, நரம்புகளாகிய ஜடப் பொருள்களுக்கு உணர்ச்சியென்பது கிடையாது. அப்படி இருந்தால் சவத்திற்கும் உணர்ச்சி இருக்கவேண்டும். கண்ணினால் மூக்கிற்கு ஏதாவது சகாயமுண்டோ! அல்லது காது மூக்கிற்கு சந்தோஷத்தைக் கொடுக்குமோ? இவ்விந்திரியங்களும் தவிர, தோல், ரத்தம் ஆகிய தேக பாகங்களும் மனதின் ஏவலைச் செய்து வஸ்துக்களிடமிருந்து இன்பம் பெறும் பொருட்டே மனதால்

தேடிக்கொள்ளப்பட்டன. தன் இச்சைகளைப் பூர்த்தி செய்துகொள்ளும் வரையில் மனம் இவ்வுடலை ஆதரித்து வருகிறது. பிரயோஜனமின்றிப் போன பின், உடனே இக்கூட்டை விட்டுப் புதிய கூட்டைத் தேடிக்கொள்ளுகிறது.

### மனமும் ஜடமே

பிறகு மனதைப்பற்றி ஆராய்வோமாகில், அது ஒரு இந்திரியத்திற்கும் புலப்படுவதில்லை. அதன் இருக்கை இந்திரியங்களின் செயல்களால்தான் உணரப்படுகிறது. தேடினால் காணோம். தேடாமலிருக்கையில் அது எல்லாவற்றையும் செய்துவருகிறது. ஆகவே அது ஒரு சொரூபத்தைக் கொண்ட வஸ்துவோ அல்லது தத்துவமோ இல்லை. ஜடத்தன்மையால்தான் அது உணரப்படுகிறதாகையால், அதுவும் ஜடமென்றுதான் கருதப்படும். ஆகையால் அழிவிற்கு உட்பட்டதே. ஆக, தேகமாவது, மனமாவது 'நான்' ஆகாது. இவ்விரண்டும் சேர்ந்துதான் இந்த சம்ஸார மோகத்தை விருத்தி செய்துகொண்டு இருக்கின்றன. ஜன்மம் - மரணம்தான் இவைகளின் முக்கிய அம்சம். ஜன்மத்தின் முடிவு மரணம், மரணத்தின் முடிவு ஜன்மம். ஒன்றில்லாமல் மற்றொன்றில்லை. தேகமும் மனமும் கூட அவ்விதமே.

### பிறகு 'நான்' என்பது எது?

ஆகையால் 'நான்' என்பது எப்பொழுதும் எந்த நிலையிலும் எக்காலத்தும் ஒவ்வொரு உணர்ச்சியிலும் உணர்வோனாகவும் சாக்ஷியாகவும் இருக்கும் அறிவே. இதுவே நித்ய சத்யம். இதுவே 'நான்'. இதுவே பிரம்மம். ஒவ்வொரு பொருளும் பிரம்மமே. ஆகவே

எல்லாம் நானாக இருக்கிறேன். இந்த சத்யத்தையே ஆசிரயத்திருப்பேன்.

'ஓம்' என்பதைத் த்யானிக்கும் முறை

இந்தத் தீர்மானத்துடன், பத்மாசனத்தில் இருந்தபடி, கண்களைப் பாதி மூடிக்கொண்டு தியானம் செய்தான். பிறகு மூன்றரை மாத்திரையில் அடங்கிய பிரணவத்தை உரக்க உச்சரித்தான். முதல் இரண்டு மாத்திரையில் அடங்கிய 'அ'கார 'உ'காரங்களைச் சேர்ந்த 'ஓ' என்னும் சப்தத்தை உரக்க உச்சரிக்கும் பொழுது, உடல் முழுதும் அத்தொனியைப் பிரதிபலிக்கும்படி செய்து, உள்ளடங்கிய மனதை வெளி ஆகாசத்தில் கலக்கும்படி பாவனை செய்துகொண்டான். இதுவே பிராணுயாம முறையில் ரேசகமென்பது. இதனுல் மனம் உள்ளும் வெளியும் ஒன்றாக நின்று சர்வவியாபியான உணர்ச்சியை அடையும். இந்நிலையில் தேகத்திற்கு, வாயுவுடன் கூடிநிற்பதைத் தவிர்த்து, வேறு உணர்ச்சி கிடையாது. பிறகு தொடர்ந்து அடுத்த மாத்திரையில் அதே சப்தத்தின் முடிவை சமமாக உச்சரித்து மனதை ஒரு நிலையில் நிற்கச் செய்தான். இதுவே கும்பகமெனப்படுவது. அப்பொழுது மனம் நிர்மலமாய் யாதொரு விஷய பாவமுமில்லாமல் இருந்தது. கடைசியில் பூரகம் செய்ய வெளி ஆகாசமான மனதை உள்ளே இழுக்கும் பாவத்துடன் கூடி 'ம' காரத்தை உச்சரித்தான். மனம் ஒரு சஞ்சலமுமின்றி நிலைநின்றது. சாந்தியும் ஏற்பட்டது. சற்று நேரத்திற்கெல்லாம் மனம் கலைந்ததும் திரும்பித் திரும்பி மேலே சொல்லியபடி பிராணுயாமத்தைச் செய்தான். ஹடயோகமுறைப்படி பிராணுயாமத்தைச்

செய்யவில்லை. ஏனெனில் அதனால் சிற்சில சித்திகள் ஏற்படலாமே தவிர, சாந்தி உண்டாகாது.

உத்தாலகன் முக்தியடைந்தது

இப்படிப் பிராணாயாமம் அடிக்கடி செய்தும், பூர்வ வாசனையின் காரணத்தால், மனம் சஞ்சலித்து பல விஷயங்களைப் பின்தொடர்ந்த வண்ணம் இருந்தது. இப்படி நேரும்போதெல்லாம் எண்ணங்களை உதறித் தள்ளினான். காலக் கிரமத்தில் மனதின் தீவிரம் அடங்கியது. இன்னும் சில காலத்தில் எல்லா எண்ணங்களும் ஒருங்கனவே ஒழிந்தன. அப்பொழுது தான் சாசுவத சாந்தி ஏற்பட்டதாக இருந்தான். அதன் பிறகு ஒரு பிரகாசத்தை உணர்ந்தான். இதைத் தள்ளியதும் தூக்கம் மேலிட்டது. இதுவும் தள்ளப் பட்டபொழுது அக்ஞானமான இருளால் சூழப்பட்டான். அதையும் ஒழித்தான். இவ்விதமான தோற்றங்கள் ஏற்பட்டதன் காரணம், இந்த அபிப்பிராயங்கள் வெகு காலம் மனதில் ஊறி இருந்ததே. இவைகளெல்லாம் தள்ளப்பட்ட பிறகு சாசுவதமானதும், களங்கமற்றதுமான சாந்த நிலையை உத்தாலகன் அடைந்தான். இப்படி ஏற்பட்ட ஸ்திதியை வெகு காலம் திரும்பித் திரும்பி அப்யசித்து வந்த பிறகு கவலையற்று இருக்கலானான். மறுபடியும் அக்ஞானத்தில் சிக்கிக்கொள்வோமென்ற பயம் இருக்கவில்லை.

இந்த நிலையில் இவனைத் தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், வித்யாதரர்கள் எல்லோரும் அணுகிப் பூஜித்தார்கள். இவனைச் சொர்க்கத்திற்கும் அழைத்தார்கள். அதன்பொருட்டு அவர்கள் சொன்னதாவது: "சர்வப் பிரயத்தனங்கள், தானம், தர்மம் எல்லாம் காமத்தை அடையும்பொருட்டே செய்யப்படுகின்றன.

இக்காமங்களை அடைய சொர்க்கமே சிறந்த ஸ்தலம்; கல்ப காலம் வரையில் இவைகள் அனுபவிக்கப்படலாம்.'' இவைகளைத் திரணமேனும் உத்தாலகன் மதிக்காமல் வந்தவர்களை மரியாதையுடன் விடைகொடுத்தனுப்பினன். பிறகு சில காலம் தேசம் தேசமாக, காடு மலை, வனாந்திரம் என்றும் கவனியாமல் சுற்றித் திரிந்தான். ஏனெனில் தேகமிருக்கும் பரியந்தம் இந்திரியங்களுக்குத் தொழில் கொடுத்தே தீரவேண்டும். தங்குமிடத்தில் மனதை அடக்கி இச்சைகளின்றிச் செய்ய வேண்டிய கர்மங்களைச் செய்துவந்தான்.

உத்தாலகன் விதேக முக்தியை அடைதல்

வசிஷ்டர் :— இப்படி வெகு காலம் கழிந்த பிறகு தேகத்திலிருந்து விடுதலையடையும் தருணம் அறிந்து, உத்தாலகன் ஒரு தனிமையான ஸ்தலத்தை அடைந்து பத்மாசனத்தில் உட்கார்ந்தான். அவன் அக்காலத்தில் இருந்த நிலைமை சித்-சாமான்ய மெனப்படும்; அதாவது சித்தானது இயங்கும் தன்மை முற்றிலுமின்றி சுத்த சித்தாக எங்கும் பிரகாசிக்கும் தன்மையில் இருந்தது. அதாவது அதற்கு இயற்கையாகிய சம ஸ்திதியை அடைந்திருந்தது. இதுவே சத்வ-சாமான்ய ஸ்திதி யென்றும் சொல்லப்படும். இருக்கையென்ற ஒரு தன்மையை மாத்திரம் கொண்ட ஸ்திதி. இது ஜீவன் முக்தர்களுக்கு மாத்திரமே ஏற்படும். பிரம்மா, விஷ்ணு, சிவன், நாரதர், நான் எல்லோரும் இந்த ஸ்திதியில் இருப்பவர்களே. உள்ளும் புறமும் ஆத்மாவைத் தவிர்த்து வேறொரு விஷயபாவனையும் இல்லாமலிருப்பதே. அதாவது அபாவத்தையே பாவித்துவரும் நிலை, அல்லது பாவத்தை அபாவம் செய்வது. பார்வைக்கு வஸ்துவாய் இருப்பவைகளில் எல்லாம் ஆத்மாவை

உணரும் நிலை. தேகம் இருந்தும் இல்லாமல் போலிருப்பது. ஆகையால் இந்தச் சுமையை ஏன் வீணாய்த் தாங்க வேண்டும்? நியதியையும் பூர்வ கர்மாவையும் தழுவி இத்தேகம் அழியும் சமயத்தை உத்தாலகன் அறிந்து அனாயாசமாக பரம ஆகாசமான அறிவுக் கடலில் கலந்தான்.

(மொழி பெயர்த்தவர் குறிப்பு)

### 1 'ஓம்' என்பதைக்குறித்து

இந்த "ஓம்" என்னும் பதம், புராணங்கள், மந்திர சாஸ்திரங்கள், தத்துவ சாஸ்திரங்களில்கூட வெகு விசேஷமாகவும் சக்தியுள்ளதாகவும் அடிக்கடி கூறப்பட்டிருக்கிறது. இதில் நாம் தெளிவாக அறியவேண்டியது ஒரு விஷயம். அதாவது அப்பதத்தில் ஒரு விசேஷமுமில்லை என்று. ஆனால் நம் முன்னோராகிய ரிஷிகளும் ஞானிகளும், பிரபஞ்சத்தின் உற்பத்தி, நடை, அழிவு, அதாவது இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் மூன்றையும் ஒருமிக்க ஒரே பதத்தால் வியவகாரத்தில் சுட்டிக்காட்டும்படி உபயோகித்து வந்தார்கள். எல்லாப் பெரியோர்களாலும் இப்பதம் மேற்சொன்ன அர்த்தபாவத்துடன் உபயோகிக்கப்பட்டு வந்ததால், அது நம்மாலும் வெகு பக்தியுடன் கருதப்பட வேண்டியது. மூன்று காலத்திலும் அழியாமல் நிற்கும் ஆத்மாவைச் சுட்டிக் காட்டுவதாலேயே அதற்கு அவ்வளவு மகிமை.

### 2 சொர்க்கத்தில் காமம் பூர்த்தியாவது

சொர்க்கத்தில் காமத்தைப் பரிபூர்ணமாக அனுபவிக்கும் பொருட்டு உத்தாலகன் அழைக்கப்பட்டானென்று மேலே சொல்லப்பட்டது. இங்கு வார்த்தைகளின் சாதாரண அர்த்தபாவத்தை எடுத்துக்கொள்வது

தவறு. அவற்றின் விசேஷ அர்த்தத்தைக் கவனிக்க வேண்டும். மனம் புருஷனாகவும், தேகம் ஸ்திரீயாகவும் பாவிக்கப்பட்டு, பெரியோர்களால் அடிக்கடி சொல்லப்பட்டுள்ளது. பிருகதாரண்யக உபநிஷத்திலும் இதைக் காணலாம். இந்த பாவனையைக் கொண்டுதான் அர்த்தநாரீசுவர தெய்வம் ஜனங்களால் கொண்டாடப்படுகிறது. மனம்-தேகம் சேர்ந்த மானிட சொரூபத்தையே இது விளக்குகிறது.

இதன்படி, நாம் செய்யும் தர்மார்த்தங்களின் கருத்து மோக்ஷத்தில் காமத்தை அடையும்பொருட்டே, அதாவது மனமாகிய புருஷன் தேகமாகிய ஸ்திரீயை அடையும்பொருட்டே. சொர்க்கபோகங்களின் முடிவு மீண்டும் மானிட ஜன்மமெடுப்பதென்பது எல்லோரும் அறிந்த விஷயம். உழைத்ததற்குக் கூலி அகப்பட்டபிறகு மறுபடி உழைப்பை நாட வேண்டியதே கிரமம். ஆகையால் கர்மாக்களின் பலன் ஜன்மமே.

### ஜீவன் முக்தர் இருவிதம்

ராமன்: ஜீவன் முக்தர்களாய் இருப்பவர் இருவர்களில், ஒருவர் வியவகாரங்களை நிஷ்காமமாக நடத்தியும், மற்றொருவர் உலகத்தைத் துறந்து தனிமையாகவே காலத்தைப் போக்குபவராயுமிருந்தால், எவர் மேலானவர்?

வசிஷ்டர்; அவ்விருவர்களும் ஜீவன் முக்தர்களாக இருப்பின், இருவரும் சமமே. இப்பதவி மனோ நிலையைக் குறித்துச் சொல்லப்படுகிறதே தவிர, இந்திரியங்களாலும் தேகத்தாலும் செய்யப்படும் கர்மங்களைக் குறித்தல்ல. இவ்விருவரிடத்தும் கர்மங்களில் மனம் ஈடுபடாமலிருப்பதால் இருவரும் சமமே.

காட்டில் தனிவாசம் செய்து, தேகாதி கர்மங்களையும் விட்டு, ஆனால் மனம் சர்வசதா வியவகரித்துக்கொண்டிருந்தால் இதைவிட அக்ஞானம் ஏதுமில்லை. இப்படியின்றி, நகரவாசம் செய்து சம்சாரத்தை நடத்தி எல்லாக் கர்மங்களையும் செய்து, ஆனால் மனத்தில் யாதொரு சங்கல்பமோ இச்சையோ இல்லாமலிருந்தால், அவனைக் காட்டிலும் புண்ணியவான் யார்?

இந்த மனித சங்கல்பங்களுக்கு, பூர்வ வாசனையே காரணம். இவ்வாசனைகளால் ஏற்படும் கர்ம ஏவல்களைக் கண்டித்து மனத்தின் சஞ்சலத்தைக் குறைப்படுத்திய வண்ணம் இருப்பதே முறை. வாசனையால் ஏற்படும் கர்மங்களுக்கும் தற்சமயம் செய்யப்படும் கர்மங்களுக்கும் அகங்காரமே மூலகாரணம். ஆகையால் இதை ஒழித்தால் எல்லாம் ஒழியும்.

### ஆத்மாவை அறிய அகந்தை தேவை

இந்த அகந்தையும், தவிர வஸ்துக்களின் தன்மைகள், பேதங்கள், தேசம், காலம் எல்லாம் ஏற்படுவது சித்தின் தன்மையாகிய உணர்ச்சியால். பிறகு இந்த ஜகத் முழுதும் ஆத்மாவைத் தவிர்த்து வேறல்ல என்று ஏற்கனவே சொல்லப்பட்டது. ஆகவே இந்த ஆத்மாவாகிய பொருள்களிடத்து அவைகளின் தன்மைகளை உணருதல் என்று ஏற்படும்பொழுது, உணர்ச்சி - உணருகிறவன் என்ற பேரும் காணப்படுகிறது. உதாரணமாக மிளகில் இருக்கும் காரம், உப்பில் இருக்கும் உப்புத்தன்மை, கரும்பில் இருக்கும் இனிப்பு, கல், மலை இவைகளின் கெட்டித்தன்மை, ஆகாசத்தின் சூன்யத்தன்மை - எல்லாம் உணரப்படுவது சித்தின் இயக்கத்தாலே. இத் தன்மைக

ளெல்லாம் வஸ்துக்களில் அடங்கியிருந்தும், இவை களை உணர தனிப் புருஷன் தேவை. உணர்கிறவன் இல்லையேல் உணர்ச்சிகள் எவ்வாறு அறியப்படும்? இவைகளை ஆராய்ச்சி செய்தால், உணர்கிறவன், உணர்ச்சி, உணரப்படுவது மூன்றும் ஆத்மாவென்று விளங்கும். ஆகையால் இந்த ஆத்மா தன்னை உணர வேண்டுமென்றால் ஒதுங்கி நின்று வேறு புருஷனாக இருந்தால்தான் முடியும். இதுதான் ஜகத்தில் நடை பெறுவதும். தனிமையாகவே இருக்கும் நிலையில் உணர்ச்சி ஏற்பட நியாயமில்லை. இம்முறையில்தான் அகங்காரம் ஏற்படுகிறது.

இந்த அகங்காரம் ஆத்ம தரிசனம் கிட்டும்வரை யில் நீங்காது. 'நான்' என்னும் பாவம் இருக்கும் பரியந்தம் தான் ஆத்மாவை அடையும் யத்தனமும் இருக்கக்கூடும். ஆகவே ஆத்மத்தில் இரண்டறக் கலக்கும் வரையில் இந்த அகங்காரம் அழியாமலே தான் நிற்கும். இவ்வாறான அகங்காரம் ஆத்மாவைத் தவிர்த்து எப்படி வேறாகக் கருதப்படும்? எதுவாகி லும், எவ்விதமாய்ப் பாவிக்கப்படினும் அவ்விதமாய்க் காணும்படி செய்துகொடுப்பது இந்த எல்லாமுமாய் இருக்கும் ஆத்மாவே. ஆத்மா ஒன்றுதான் சர்வமாயும் சாசுவதமாயும் இருப்பது.

சுரகுவின் வரலாறு

வசிஷ்டர்: மேலே சொன்ன விஷயத்தைத் தழுவி ஒரு இதிகாசம் உண்டு. அதனால் கேவலம் ஆத்ம விசாரணையாலேயே சாந்தம் ஏற்படுமென்பது விளங்குவதால், அதைக் கேட்பதனால் உனக்கு மனம் தெளிவடையும்.

இமோத்கிரி மலைப் பிரதேசத்தைச் சேர்ந்த, எங்கும் பனிக்கட்டியால் மூடப்பட்ட, கைலாச கிரியின் அடிவாரத்தில் கிரதேசமென்று ஒரு பிரதேசம் வழங்கப்பட்டுவந்தது. இந்தத் தேசத்து ஜனங்கள் பெரும்பாலும் ஏமஜடர் என்ற வேடர்களே. இவர்களை அரசாண்டு வந்த சுரகு என்ற வேந்தன் குபேர பட்டணத்திற்கு ஈடாகும்படி, பலவித திரவியங்களைச் சேகரித்தும், மகா பராக்ரமசாலியாயும், காவியத்தில் சுக்ராசாரியரைப் போலவும், உதாரகுணம் பொருந்தியும் இருந்து ஜனங்களைச் சிறப்புடன் பரிபாலித்து வந்தான். செய்ய வேண்டிய கர்மங்களை மனம் கலங்காமலும் தைரியமாகவும் செய்துவந்தான். வெகு காலம் சாந்த மனதுடன் அரசாட்சி செய்துவந்த பிறகு, இந்த நல் வாழ்க்கையில் சற்றுச் சலிப்பை அடைந்தான். சில சமயம் குற்றம் செய்தவர்களைத் தண்டனை செய்யும் பொழுது, தன்னால் இவர்கள் ஏன் கஷ்டங்களுக்கு ஆளாகவேண்டுமென்று தண்டனையைக் குறைத்தான். பணத் தேவையினால்தான் அநேகக் குற்றங்கள் செய்யப் படுகின்றன என்று சிலருக்குப் பணத்தையும் கொடுத்தான். பிறகு குற்றங்களுக்கு தண்டனை விதிக்காமலிருப்பது தவறென்றும், அதனால் இதர ஜனங்களுக்குத் தீங்கு ஏற்படுமென்றும் எண்ணலானான். இவ்வாறான மனோ சஞ்சலத்தை அடைந்திருக்கையில் ஒருநாள், மாண்டவ்யர் என்ற மகரிஷி யதேச்சையாக இவன் இருப்பிடம் வந்துசேர்ந்தார்.

அவரைக் கண்டதும் மனம் களித்து, தன் சந்தேகங்களைத் தீர்க்கவே வந்தாரென்று நினைத்து வெகுவாக உபசரித்துப் பிறகு தன் சந்தேகங்களை நிவர்த்தி

செய்துகொள்ளும் பொருட்டு சில கேள்விகளைக் கேட்டான்.

சுரகு : *முனீசுவரரே! தாங்கள் சத்தியத்தை அறிந்து சாந்த நிலை பெற்றவராக இருக்கிறீர். நானோ செங்கோல் செலுத்தும் முறைப்படி அனுக்ரக, நிக்ரகங்களால் அநேக ஜனங்களைத் துன்பங்களுக்கு உட்படுத்துகிறேன். தரும நெறியாய் அரசாட்சி செய்யாவிடின் ஜனங்களும் சீர்கெட்டுப் போவார்கள். இவ்விதச் சந்தேகங்களால் என் மனம் துன்பப்படுகின்றது. மனிதருக்கு சந்தேகத்தைவிடக் கொடிய துன்பம் ஏது? ஆகையால் இவைகளைத் தாங்களே தீர்த்து, என் மனம் சாந்தி அடையச் செய்வீராக.*

மாண்டவ்யரின் உபதேசம்

மாண்டவ்யர் :— *அரசே! நீ கோருவதை அடைய உன் பிரயத்தனத்தால்தான் முடியும். அதை என்னாலாவது வேறெவராலாவது நீ அடையும்படி செய்ய இயலாது. நீ தேடும் சாந்தம் உன்னிடத்திலேயே உளது. அது நீயாகவே இருக்கிறாய். ஆகையால் இதை அடைய உன் ஆராய்ச்சியே தேவை. இவ்வாராய்ச்சியாவது "நான் யார்", "இந்த ஜகத்தாவது என்ன", "எனக்கும் இதற்கும் என்ன சம்பந்தம்", இவைகளைப் பற்றித் தீர்க்கமாக ஆலோசனை செய்துவருவாயாகில், ஞானம் தானாகவே சித்திக்கும். இடைவிடா ஆராய்ச்சியாலே ஞானம் உண்டாவதென்பது அனுபவத்தில் தெரிந்த விஷயம். இவ்விசாரணையால் ஜகத் முழுதும் உணர்ச்சிகளைத் தவிர்த்து வேறல்ல என்ற நிச்சயம் ஏற்படும். இந்த உணர்ச்சிகளால் ஏற்பட்ட ஜகத் விடப்பட்டால்,*

மிஞ்சுவது ஆத்மாவே. ஆகையால் திருச்ய விஷயங் களெல்லாம் உன்னால் விடப்பட்டால் நீயே ஞான மயமாக இருப்பாய்.''

சுரகுவின் ஆராய்ச்சி

இவ்வாறு சொல்லிவிட்டு முனிவர் விடை பெற்றுச் சென்றார். சுரகு ஒரு க்ஷண நேரமும் தாமதிக்காமல் இருந்தபடியே யோசிக்கத் தொடங் கினான். "மேரு பர்வதத்தைச் சிந்திப்பின் அது நானுமல்ல, நான் அதுவுமல்ல; இது பிரத்யக்ஷ மாகவும் சந்தேகமில்லாமலும் தெரிந்த விஷயம். பிறகு நான் அரசாட்சி செய்து வரும் இந்தப் பிரதேசம், நான் அதுவும் அல்ல, அது நானும் அல்ல. இது என்னுடைய ராஜ்யமாக எப்படி நேர்ந்தது? கேவலம் ஒரு கட்டுப்பாட்டால் நான் ராஜாவாகக் கொண்டாடப் படுகிறேன். இந்தப் பதவியை இப்பொழுதே துறந்தேனாகில் ஒருவனும் என்னை ராஜாவாக மதிக்க மாட்டான். ஆகவே பிரபஞ்சத்தில் அடங்கிய வஸ்துவோ விஷயமோ நான் இல்லை. பிறகு இத்தேகம் கேவலம் ஜடப்பொருள். மனமும் அவ்வண்ணமே கருதப்பட வேண்டி இருக் கிறது. ஏனெனில் இது ஜடப் பொருள்களிலேயே எப்பவும் சிக்கிக் கொண்டிருப்பதால், புத்தி, ஜீவன் என்று சொல்லப்படுகிறவைகளும் இவ்விதமே. பரம திருஷ்டியில் இவைகளும் அறிவுக்குப் பாத்திர மாகின்றன. ஆகையால் மிஞ்சினதாகிய நிர்மலமான பரிபூரண அறிவே என் ஸ்வரூபமாகும். பிரம்மா, விஷ்ணு, ருத்ராதிகள், யமன், இந்த ஜகத் எல்லாம் நூலில் கோர்க்கப்பட்ட மணிகளைப் போல் இந்த ஆத்மாவை அனுசரித்தே நிலைநிற்கின்றன. இதுவே

எங்கும் வியாபித்து, சூக்ஷ்மமாயும் ஸ்தூலமாயும் தோற்றங்களைக் காட்டி, ஆனால் தான் ஒன்றிலும் இயங்காமல், இருக்கின்றது. இதுவே 'நான்' ஆகும். இப்பொழுது என் மனம் தெளிவடைந்தது. இனி இந்த ஸ்திதியையே ஆசிரயித்திருப்பேன்" என்று தீர்மானித்துக்கொண்டான்.

**வசிஷ்டர்:** இந்தத் தத்துவம் அறிந்தபிறகு சுரகு ராஜ்யத்தை வெகுகாலம் மேன்மையாக அரசாட்சி செய்து, குடிமக்களைப் பரிபாலித்து வந்தான். எல்லா வியவகாரங்களையும் செய்தும், ஆனால் மனதில் ஒரு களங்கமுமின்றி, சதா ஆத்ம திருஷ்டியை உடையவனாய், சுகம் - துக்கம், இச்சை - துவேஷம், வேண்டும் - வேண்டாம் என்ற பாவங்களை ஒழித்தவனாய், சமகுணமும் சாந்தமும் கூடி ஜீவிதத்தை நடத்தி வந்தான். அதாவது சதா நித்திரையில் இருப்பவன் போல் வியவகாரங்களை நடத்திவந்தான்.

**ராமன்:** சஞ்சலத்தையே தன்மையாகக் கொண்ட இம் மனத்தினால் சதா ஆத்ம திருஷ்டியை எவ்விதம் அனுசரிப்பது?

**வசிஷ்டர்:** சுரகுவின் விருத்தாந்தத்தில் ஒரு விஷயம் எடுத்துக் காட்ட மறந்தேன். அதை நீ கேட்டால், மனதை வசம் செய்யும் உபாயத்தை அறிவாய்.

### சுரகு - பரிகோ சந்திப்பு

சுரகுவுக்கு இளைய வயதில் சிநேகிதனான பரிகோ என்ற ராஜகுமாரன் பாரசீக தேசத்தை அரசாண்டு வந்தான். ஒரு சமயம் ஒரு கொடிய பஞ்சம் நேரிட்டு அநேக ஜனங்கள் மாண்டார்கள். அரசன் கருணை புரிந்து திரவியங்களை ஏராளமாகச் செலவு செய்தும்

பஞ்சம் குறையவில்லை. இனி, தான் அரசனாக இருந்து பிரயோஜனமில்லை யென்று எண்ணி ராஜ்யத்தைத் துறந்து, வனங்களிலும் காடுகளிலும் தபம் செய்து வந்தான். சில காலம் இப்படித் தபஸிலும் ஆத்ம விசாரணையிலும் வெகு ஊக்கமாகப் பிரயத்தனம் செய்து வந்ததன் பலனாகப், பரிபூரண ஞானத்தை அடைந்தான். இந்த ஸ்திதியில் பல தேசங்களைச் சுற்றிவருகையில் சுரகு இருக்கும் நாட்டை அடைந்து அவனையும் யதேச்சையாகக் கண்டான். இருவரும் ஞானமடைந்து பக்குவ நிலையில் இந்தச் சந்திப்பு நேர்ந்தது. வெகு காலம் கழித்துச் சந்தித்தபடியால் அநேக விஷயங்களைப் பற்றிப் பேச நேர்ந்தது. கடைசியாக, தாங்கள் விவேகம் அடைந்த விஷயத்தைக் குறித்தும் பேசினார்கள். பரிகோ மேலும் சுரகுவை, சமாதி நிலையை அடைந்தானா என்று கேட்டான்.

### சமாதியென்பது என்ன ?

சுரகு: சமாதி என்பது என்ன? மனம் சம நிலையை அடைந்து உள்ளம் சதா குளிர்ந்தவண்ணம் இருப்பதுதானே; அதாவது மனம் என்னும் ஸ்திதி அழிந்து அது ஆத்மாவாக நிற்பதுதானே. இந்நிலையில் எவ்விதமான வியவகாரங்களைச் செய்தாலென்ன? மனம், ஆத்மாவாகிப் பிரபஞ்சமெல்லாம் ஆத்மாவாக உணரப்படும் பொழுது ஆத்மத்தை விட்டு நழுவுவதெப்படி? இந்த ஆத்மாவை உணராத பரியந்தந்தான் பத்மாசனத்தில் அமர்ந்தோ, மூச்சை அடக்கியோ, அல்லது பிரம்மாஞ்சலி செய்தோ மனத்தை அடக்கும் பிரயத்தனங்கள் பொருந்தும். இதைச் சமாதியென்று எப்படிச் சொல்லத்தகும்?

ஆத்மத்தை உணர்ந்தவன் ஒரு க்ஷண நேரங்கூட அனாத்மாவாக இருக்கமுடியாது. காலம் அதனுடைய ஒவ்வொரு அம்சத்தையும் எப்பொழுதும் கூடியே இருப்பது போல, ஆத்ம உணர்ச்சியும் இடைவிடாமல் இருந்தே தீரவேண்டும். வாயுவானது எப்படி எங்கும் வியாபித்திருக்கிறதோ அதேமாதிரி ஞானவானுக்கு ஆத்ம உணர்ச்சிதான் ஒவ்வொரு விஷயத்திலும் தோற்றும். ஆத்மமின்றி வேறொன்றும் அவன் நோக்கத்தில் புலப்படுவதில்லை. ஒரு குணவானிடத்தில் நற்குணந்தான் பிரகாசிக்கும். குணமில்லாத தன்மை எவ்வாறு காணப்படும்? அதேமாதிரி பிரபஞ்சத்தில் 'இருக்கை' என்பதை உணர்ந்த ஞானியின் நோக்கத்தில், 'இருக்கையற்றது' என்ற தன்மை எப்படி ஒரு க்ஷண நேரமாவது புலப்படும்? வாஸ்தவத்தில் இந்த சமாதியைப் பற்றிய கேள்வியே தவறு. எல்லாம் ஆத்மாவாக உணரப்படும் நிலையில் எது எதில் சமாதியடையும்? ஆத்மா ஆத்மாவிலேயே சதா நிலைபெற்று நிற்கிறது. நான் இந்த ஸ்திதியில்தான் இருந்து வருகிறேன்.

வசிஷ்டர்: இவைகளைக் கேட்ட பரிகோ வெகு சந்தோஷித்து சுரகுவைப் புகழ்ந்து பேசினான். பிறகு இருவரும் விடை பெற்றுக்கொண்டு தங்கள் சுய காரியங்களைக் கவனிக்கத் தொடங்கினார்கள்.

பாசன் விலாசன் வரலாறு

ஆத்மாவை அடைய, மனதை மனதாலே வசப்படுத்தி அதை அழிக்கவேண்டும். அப்பொழுதுதான் ஆத்மா பிரகாசிக்கும். இவ்விஷயமாக ஒரு

புராதன இதிகாசம் ஒன்றுண்டு. அதைக் கேட்பாயாக.

முன்னொரு காலத்தில் திரிலோகத்திற்கும் ஒப்பான பிரம்மாண்ட மலைப்பிரதேசம் ஒன்று இருந்தது. தேவலோகம், பூலோகம், பாதாளம் எல்லாம் அதனுள் இப்பிரபஞ்சத்தைப் போலவே அமைக்கப்பட்டும், அந்தந்த லோகத்திற்குத் தகுந்த ஜட அஜட வர்க்கங்கள் நிரம்பியும் இருந்தன.

அதன் பூபாகத்தில், ஓர் அழகிய வனத்தில் அத்திரி மகரிஷியின் ஆசிரமத்தில் இரண்டு பிராமண சிரேஷ்டர்கள் வசித்து வந்தார்கள். இருவரும் மகா பண்டிதர்களாய், எல்லா சாஸ்திரங்களையும் ஆராய்ச்சி செய்து சுக்கிரன், பிரகஸ்பதியைப்போல விளங்கி, அத்தியந்த சிநேகிதர்களாயும் இருந்து வந்தார்கள். ஒவ்வொருவருக்கும் ஒரு புத்திரன் இருந்தான். ஒருவன் பாசனென்றும் மற்றொருவன் விலாசனென்றும் வழங்கப்பட்டு வந்தனர்.

பிள்ளைகள் யௌவனகாலம் அடைந்ததும்; இரு தகப்பன்மார்களும் ஏக காலத்தில் காலமானார்கள். இணைபிரியாச் சிநேகிதர்களாயிருந்த பாலர்கள் தாங்கள் செய்யவேண்டிய கர்மங்களைச் செய்து முடித்து, சில காலம் கூடியே இருந்து பிறகு பிரியலானார்கள். வெகுகாலம் கழிந்து இருவரும் முதுமையடைந்த பிறகு, மறுபடியும் யதேச்சையாகச் சந்திக்க நேரிட்டது. ஒருவரை ஒருவர் கண்டு சந்தோஷித்து, பல விஷயங்களைப்பற்றிப் பேசியபிறகு, விலாசன் பாசனைப் பின்வருமாறு கேட்டான்.

**விலாசன்:** பாசா! உலகத்தில் எனக்கு பந்து நீ ஒருவனே. இவ்வளவு காலம் நீ எங்கே சென்றிருந்

தாய்? உன் மனத் துன்பமெல்லாம் தீர்ந்து நீ பூரண ஞானத்தை அடைந்தாயா?

பாசன்: விலாசா? மனம் ஓய்வடைந்து, அடையப்பட வேண்டியதை அறியும் வரையில் விடுதலை ஏது? ஜனன மரணத்திற்கு உட்பட்டுத் தான் இருக்கவேண்டும். மனதில் தோன்றும் இச்சைகளை ஒழித்து, இரண்டு என்ற பாவம் நீங்கி, ஆத்ம ஞானம் ஏற்படும் வரையில் சுகமேது, சாந்தமேது?

வசிஷ்டர்: இப்படியாகவே ஒருவர்க்கொருவர் பேசியும், பிறகு இருவரும் முக்தியை அடையத் தீர்மானித்துக்கொண்டு, ஆத்ம விசாரணையே செய்து வெகு காலத்திற்குப்பின் ஞானத்தை அடைந்தனர்.

ஞானிகள் வாழ்க்கையை நடத்தும் முறை

விவேகத்தை உடையவர்கள் சம்சாரக் கடலை இப்படிச் சுலபமாகத் தாண்டிவிடுவர். தேகத்தின் மேலுள்ள பற்றுதலை நீக்கி அதன் செயல்களில் ஈடுபட்டுக் கொள்ளாமல் சாக்ஷியாகவே நின்று சமமாய் இருப்பார்கள். ஒரு ரதத்தின் அச்சு உடைந்தால் சாரதி எப்படி பாதிக்கப் படுவதில்லையோ, அப்படியே தேகத்தின்பால் ஏற்பட்ட வியவகாரங்களில் சஞ்சலமில்லாமல் ஸ்திர மனமுடையவர்களாக இருக்கவேண்டும். உலகில் அநேகவிதமான பொருள்கள் இருக்கின்றன. ஒன்றுக்கொன்று யாதொரு சம்பந்தமும் இல்லை. ஒன்று அழிவதால் மற்றவைகளுக்கு ஒரு பாதையுமில்லை. நம் தேகமும் இவ்விதமென்றுதான் கருதப்பட வேண்டும். தேகத்தின் நாசத்தால் சித்துக்கு நாசமேது? ஞானி, அக்ஞானி இருவரும் தேகம் உடையவர்களாய் இருக்கிறார்கள். ஞானியானவன் எல்லாக் கர்மங்களையும் செய்தும்

செய்யாதவனைப்போல இருக்கிறான். அக்ஞானியோ அவைகளால் இன்ப துன்பங்களை அனுபவித்து ஜனன மரணச் சுழலில் சிக்கிக்கொள்கிறான்.

ஜீவிதத்தின்மேலுள்ள ஆசையே துன்பங்களுக்குக் காரணம்

ஆகையால் ஞானிக்கும் அக்ஞானிக்கும் உள்ள வித்தியாசம் தேகத்தின் மேலுள்ள பற்றுதலே. இப் பற்றுதல் இருவகைப்படும். முதலாவது அக்ஞான வசத்தால் கேவலம் ஜீவிதம் செய்வதையே கருதி இருப்பது ஒன்று; இது பந்தத்திற்குக் காரணமாகும். மற்றது பரோபகாரமானது. செடி கொடிகள், மரம் மட்டை யெல்லாம் நிலத்திலிருந்த நீரை எவ் வண்ணமோ பருகி, வெயிலினால் வாட்டப்பட்டும், காற்றினால் அடிபட்டும் வளருகின்றன. இக்கஷ்டங் களை யெல்லாம் சகிப்பது உயிர் வாழ்வதன் பொருட்டே. கிருமிகள், புழுப் பூச்சிகளெல்லாம் பல விதமாகக் கஷ்டப்பட்டு, சந்து பொந்துகளில் வசித்து எப்படியோ உயிர் வாழ்கின்றன. எதன் பொருட்டு இவைகளையெல்லாம் அனுபவிக்க வேண்டும்? ஜீவிதத்தின் மேலுள்ள ஆசையினாலே. கழுதை ஏன் மூட்டை சுமக்க வேண்டும், அடியும் உதையும் படவேண்டும்? தன் ஜீவிதத்தின் மேலுள்ள பற்றுதலாலே. மனிதரும் இவ்வாறே கஷ்டநிஷ்டூரங்க ளுக்குப் பாத்திரமாயும், இவைகளிலிருந்து தப்பித்துக் கொள்ள வகை தெரியாமலும் அவைகளிலேயே சுழன்று நிற்கிறார்கள்.

போற்றத்தக்க பற்றுதல்

இப்படியில்லாமல் ஆத்மத்தை உணர்ந்து தேகத் தின்மேல் ஒருவித ஆசையுமின்றி ஜீவிதத்தை நடத்து கிறவர்கள் மேன்மை பொருந்திய பற்றுதலுடையவ

ராவர்; பஞ்ச பூதங்கள் தத்தம் தன்மைகளில் நிற்பதும், திக்குபாலர்கள் திக்குகளைக் காப்பாற்றி வருவதும், சூரிய சந்திரர்கள் இடைவிடாமல் சஞ்சரித்து வருவதும், இவைகளெல்லாம் பொது நன்மைக்காக இருப்பதால் போற்றத்தக்க பற்றுதல் ஆகும். மகாவிஷ்ணு திருலோகங்களை ஆதரிப்பதும், பிரம்மா திரும்பித் திரும்பி சிருஷ்டியில் ஈடுபடுவதும் பற்றுதலாலேதான். ஆனால் இதுவும் போற்றத்தக்க பற்றுதலே; இப்பற்றுதலுக்குக் காரணம் வாசனையே; இந்த வாசனையால் கட்டுப்பட்டுப் பிரபஞ்சம் சதா நடைபெறுவது என்ன ஆச்சரியம்?

ஆகையால் எவன் பற்றுதலை ஒழித்து, தேக வியவகாரங்களில் ஈடுபட்டுக்கொள்ளாமல் சாக்ஷியாக நின்று சம்சாரத்தை நடத்திவருகிறானோ அவனே ஜீவன்முக்தன் ஆகிறான். இப்படியின்றிப் பற்றுத லுடன் காரியங்களைச் செய்கிறவர்கள் துன்பத்தைத்தான் அனுபவிக்க வேண்டும். இவர்கள் நரகத்திற்கும் திக்கட்டையாவார்கள். சமுத்திரக் கரையிலுள்ள மணலை எண்ணிறனும் எண்ணலாம்; இவர்கள் எடுக்கும் ஜன்மங்களைக் கணக்கிடலாகாது.

### வாசனையை ஒழிப்பது மனதை அழிப்பதாகும்

ஆகையால் வாசனைகளால் ஏற்படும் தூண்டுதல்களை அடக்கி மனதை அசைவற்றிருக்கும்படிச் செய்வதே யுக்தியாகும். அதாவது எப்பொழுதும் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் எல்லாவித எண்ணங்களையும் மனதில் ஒழித்தவனாயிருத்தல். மனதில் யாதொரு சிந்தையும் இருப்பது கூடாது. வஸ்து, விஷயம் இவைகளின் ஸ்மரணையும் நீங்கவேண்டும். மனதைப் புருவமத்தி, நாசி நுனி, பிரம்ம ரந்திரம் இவை

களில் நிலைநிறுத்துவதாகிய தியானமும் விடப்பட வேண்டும். ஆத்மாவென்னும் சிந்தைகூட மனதில் இருக்கக்கூடாது. சுருக்கமாக மனம் சர்வ சூன்யமாய் இருப்பதே முறை. இதை இடைவிடாப் பயிற்சியினால் அடைந்தால், பிறகு ஆத்மா தானாகவே பிரகாசிக்கும். மனம் முற்றிலும் ஒழிந்தால்தான், ஆத்மா உதிக்க இயலும்.

அமாவாசை கிட்டும் பொழுது சந்திர கலை கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து, அமாவாசையன்று சந்திரன் முற்றிலும் மறைந்து சூரியப் பிரகாசத்தில் கலந்துவிடுவதுபோல, மனமும் ஆத்ம ஜோதியில் மறைந்துவிட வேண்டும்.

### துரியாதீத பதவியென்பது

இவ்வித நிலையில் மனதை வைத்திருப்பவன் என்ன கர்மங்களைச் செய்துவரினும், அக்கர்மங்கள் இந்திரியங்களால் செய்யப்பட்டவைகளாகவே கருதப்படும். பார்ப்போருக்குச் செயல்களாகத் தோன்றினும் நிஜமாக அவைகள் இச்சை-பலனென்ற நோக்கமில்லாதவைகளாம். மனம் மேரு பருவதம்போல் அசைவற்றே இருக்கும். லோக வியவகாரங்கள் அனைத்தும் அவனுடைய நிஷ்களங்கமான மனதில் அப்படியே ஒருவித மாறுபாடின்றிப் பிரதிபலிக்கும்; ஏனெனில் மனம் ஆத்மாவாகப் பிரகாசிப்பதால். சதா நித்திரையில் இருப்பவன்போல்தான் இவன் இருப்பான், அதாவது லோக வியவகாரங்களில்; ஆத்ம விஷயத்திலோ அவன் எப்பொழுதும் விழித்தவனாகவே இருப்பான். ஒரு குழந்தை கை கால்களை யாதொரு சிந்தனையுமின்றி உதைத்துக் கொள்ளுகிறது; அவ்வாறேதான் ஜீவன் முக்தன் கர்மங்களைச் செய்வதும். அவன் உள்ளம்

எப்பொழுதும் குளிர்ந்தே இருக்கும். இந்நிலைதான் பெரியோர்களால் துரியத்தைத் தாண்டிய பதவி என்று சொல்லப்படுவது. இப்பதவி, தேகத்தைக் கூடிவாழும் நிலையில்தான் அடையப்பட வேண்டியது. இதற்கு அடுத்த பதவியானது, தேகத்திலிருந்து விடுதலை அடைந்தபிறகு சித்திக்கும். இந்நிலையில் தண்ணீரில் போட்ட உப்பைப்போல் ஜீவன் ஆத்மாவுடன் கலந்துவிடும்.

இப்பதவி ஆனந்தத்தையும் தாண்டி நிற்பது; அதுவே ஆனந்தமயமாய் இருப்பதால், அதற்கு உணர்ச்சி யென்பது எப்படிப் பொருந்தும்? இதுவே அனந்த பதவி என்றும் சொல்லப்படும். இதைப்பற்றி வாயால் சொல்லவோ மனத்தால் உணரவோ சாத்தியமில்லை. அது இவைகளுக்கு எட்டாத நிலை.

### எப்பதவியைக் கோரி நாம் முயற்சி செய்வது?

நாம் செய்யவேண்டிய முயற்சிகளெல்லாம் தேகத்தைக் கூடி அடையும் பதவியைப் பற்றியே; அதாவது ஜீவன்முக்த ஸ்திதி. இதுவே வாழ்க்கையில் இன்பத்தையும் சுகத்தையும் தரும். இப்படி இருப்பதை நீ கருதி உன் கர்மங்களைச் செய்வாயாக. தேகத்தில் அபிமானம் இல்லையென்றால் கர்மங்கள் பற்றுதலின்றித்தான் செய்யப்படும். ஆராய்ந்து பார்த்தால் தேகத்திற்கும் ஆத்மாவுக்கும் என்ன சம்பந்தம்? ஒன்று ஜடம், மற்றது அஜடம். பனிக்கட்டி சுடுகிறதென்றால் பொருந்துமா? நெருப்பில் ஜலம் பெருகுமா? வெளிச்சத்தில் இருட்டைக் காணலாமா? இவைகள் எவ்வளவு அசம்பாவிதமோ அப்படித்தான் தேக – ஆத்மா சம்பந்தமும். ஒன்று

நித்திய சத்தியம், சுயம் பிரகாசமுள்ளது; மற்றது கேவலம் ஜடப்பொருள், இவ்விரண்டும் ஒன்றோடொன்று எப்படிக் கலக்கும்? ஆகையால் பந்தம் - மோக்ஷம் என்பது அறிவின்மை. ஆத்மாவுக்கு பந்தம் இல்லாமல் மோக்ஷ கதி என்பது எவ்விதம் பொருந்தும்?

தேகத்தின் தத்துவம்

தேகம் ஸ்பந்தத் தன்மையால் வளர்ச்சி யடைகிறது. சப்தம், ரூபம், கந்தம் இவைகளை யடைந்து இவைகளால் இயங்கவும் செய்கிறது. இது பஞ்ச பூதங்களைக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது; அழிவடைந்தவுடன் மீண்டும் பஞ்சபூதங்களாக மாறித் தத்தம் இனத்தில் கலந்து நிற்கும். மண்ணால் செய்யப்பட்ட பலவிதச் சாமான்கள் உடைந்த பிறகு மண்ணாகத்தான் இருக்கும். தங்கத்தினால் செய்யப்பட்ட ஆபரணங்கள் எல்லாம் தங்க மயமாய்த்தான் இருக்கும். அதே மாதிரி நம் உடலும் பஞ்ச பூத மயந்தான். ஒரு கல்லிலிருந்து பல பதுமைகள் செய்யப்படுகின்றன. இப் பதுமைகளில் ஒன்றுக்கொன்று என்ன சம்பந்தம்? அதே மாதிரி, பஞ்ச பூதங்களால் செய்யப்பட்ட பல உடல்களில் ஒன்றுக்கொன்று என்ன சம்பந்தம்? தாய், தகப்பன், பந்துக்கள், சிநேகிதர்கள் எல்லாம் நம் பாவனைகளே தவிர, பூத மயமாகிய உடல்களுக்கு இவ்விதச் சம்பந்தம் ஏது? ஆண், பெண் என்பதும் உருவ அமைப்பின் வித்தியாசமே தவிர, அவைகளில் அதிசயமான தத்துவமோ சத்யமோ எங்கிருக்கிறது? இந்த தேகத்திற்கு உற்பத்தியும் அழிவுமே இயல்பு. ஆகையால் இதைப்பற்றி ஓர் உற்சாகமோ கவலையோ அடைவது

புத்தியின்மையே. தேகம் மரணத்தை அடைவது சகஜம். ஆகையால் இதைப்பற்றித் துக்கிப்பது மதியீனம் அல்லவா? எங்கிருந்து வந்தது? மீண்டும் பூர்வ ஸ்திதியைத்தானே அடையவேண்டும், அதாவது ஞானிகளின் உடல். அக்ஞானிக்கோ மறு படியும் வேறு உடல் உண்டாவது திண்ணம். ஆகையால் எவ்விதத்திலும் விசனத்திற்குக் காரணம் கிடையாது. ஆதலால் தேகத்தை, மரம், மட்டை, கல் இவைகளைப்போல் பாவிப்பதே ஞானிகளின் முறை.

### ஆத்மாவின் சொரூபம்

தேகம் இப்படியிருக்க, ஆத்மா எப்படி இருக்கின்றது? ஆத்மா ஆத்மாவாகத்தான் இருக்கும். அது ஒரு மாறுதலையும் அடைய முடியாது. தேகத்துடன் சேர்ந்திருப்பதான பாவனை நம் அக்ஞானத்தால் தான். இவ்விரண்டும் சேருவதற்கு ஒரு நியாயமும் இல்லையென்று நாம் மேலே கூறியுள்ளோம். தேகத்திற்கு ஏற்படும் மாறுதல்களால் ஆத்மாவுக்கு பாதை ஏதுமில்லை. சமுத்திரத்தில் எவ்வளவோ அலைகள் அடுத்தடுத்து ஏற்படுகின்றன, பிறகு அதிலேயே கலந்துவிடுகின்றன. இச் சமுத்திரத்தில் அநேகப் பொருள்கள், திரவியங்கள் எங்கெங்கிருந்தோ கொண்டுவரப்பட்டு, சேகரிக்கப்பட்டுப் பிறகு வேறு பிரதேசங்களில் தள்ளப்படுகின்றன. இப்பொருள்களுக்கும் சமுத்திரத்திற்கும் ஏதேனும் சம்பந்தம் உண்டோ அல்லது அலைகளால்தான் சமுத்திரத்திற்குக் கவலையுண்டோ? இந்த அலைகள் போன்ற கொந்தளிப்புத்தானே இந்த ஜீவன்களும். ஆகையால் வஸ்து மயமான பிரபஞ்சத்தில் நியதியைத்

தழுவி ஏற்படும் செயல்களாலும், மாறுதல்களாலும் சர்வவியாபியாகிய ஆத்மாவுக்குக் கவலையுண்டோ? அது கேவலம் இருக்கையென்ற ஒரு தன்மையை மட்டும் அனுசரித்திருக்கின்றது.

இப்பேர்ப்பட்ட ஆத்மாவாக இருக்கும் ஜீவன், உணர்ச்சி - உணர்வோன் என்ற பேத வசத்தால் ஜகத்தாகிய அனுபவத்தில் ஈடுபட்டுவருகிறது. ஆத்மாதான் ஜகத்தை வியாபித்து உணர்ச்சிக்குப் பொருளாய் இருப்பது என்னும் நோக்கம் எவனிடத்தில் திடப்பட்டு வருகிறதோ, அவன் நோக்கத்தில் அப்பொழுது ஜகத் தோற்றம் அழிந்து ஆத்ம திருஷ்டி ஏற்படும்.

வாஸ்தவத்தில் உணரப்படுவது – உணர்ச்சி - உணர்வோன் மூன்றும் ஒரே சத்யம்தான். அப்படி இல்லாமலிருந்தால் திருஷ்டியே (உணர்ச்சி) ஏற்பட முடியாது. இம் மூன்றையும் வெவ்வேறாகக் கருதுவதுதான் பந்தத்திற்குக் காரணம். ஆத்மா வொன்றைத் தவிர்த்து வேறொரு சத்தியமுமில்லை. ஆகையால் இதையே சதா திடமாக பாவனை செய்தல் அவசியம். 'நான்' நானும் இல்லை, வேறொன்றும் இல்லை, தனிமையும் இல்லை, பலவும் இல்லை, அண்டையி லிருப்பதும் இல்லை. தூரத்திலிருப்பதும் இல்லை, நான் பதார்த்தம் இல்லை, விஷயமும் இல்லை. பஞ்சபூதங்களும் இல்லை, அவைகளைத் தவிர்த்து வேறும் இல்லை என்று அறியப்படும். இந்த பாவனை ஏற்பட்டு நிலை நிற்கு மாகில் அதுவே பரம திருஷ்டியாகும்.

இப்படி அல்லாமல், இரண்டு என்னும் பாவனையை ஒழித்து இருப்பதும் சரியான மார்க்கம்.

மனதை நிர்மலமாக வைத்துக்கொண்டு புலப்படுகிற வைகளெல்லாம் நான், நானே ஆதித்யன், நானே தேவர்கள், மனிதர், அசுரர், நானே பஞ்ச பூதங்கள், சர்வமும் சர்வதா நானே என்ற பாவனையும் — பரம திருஷ்டிக்குக் காரணமாகும். இந்த பாவனை இருவித மாக ஏற்படலாம். அணுவிலும் அணுவாகயிருந்து எல்லாவற்றையும் வியாபித்திருப்பதான பாவனை ஒன்று; எல்லாம் சேர்ந்த மகத்தான 'நான்' என்ற பாவனை இரண்டாவது. இவ்விரண்டு விதமான சத்வ அகங்காரங்களும் கூட, மோக்ஷ சாதனமாகும். மூன்றுவதான 'இது நான்' 'அது நான்' என்று சுட்டிக் காட்டும்படியான (தமோகுணம் படைத்த) அகங் காரமே சம்சாரத்திற்குக் காரணம். இம் மூன்றுவித அகங்காரங்களையும் ஒழித்தும் மிஞ்சியது எதுவோ அதை ஆசிரயித்திருப்பதும் சரியே.

### மோக்ஷம் எது?

எவ்விதம் ஆராய்ச்சி செய்தாலும், கடைசியில் ஒரு தீர்மானத்தைத்தான் அடைய வேண்டும் — அதாவது சத்யம் ஒன்றுதான் என்று. ஆராய்ச்சி செய்யாதவர்கள்தான் இரண்டென்றும் பாவனு தோஷத்தினுல் சம்சாரத்தில் சிக்கிக்கொண்டு பல துன்பங்களை அனுபவிக்கிருர்கள். மேற்சொன்ன ஆத்மத்தை அடைவதே மோக்ஷம் என்பது. வேறு மோக்ஷம் என்று ஒரு ஸ்தலம் இந்த பிரம்மாண்டத்தில் இருப்பதாக எண்ணுவது புத்தியீனம். அவ்வித மோக்ஷமென்பதுமில்லை, நரகமென்பதுமில்லை. மோக்ஷ பதவி என்பது சித் முற்றிலும் சேதனமற்று இருக்கும் தன்மையே.

### ஆத்மா பிரத்யக்ஷப் பிரமாணத்தால் ஸ்தாபிக்கப்பட்டது

இந்த ஆத்மா சர்வவியாபியாக இருப்பது அநுமானத்தாலோ அல்லது வேறு யுக்திப் பிரமாணங்களாலோ ஸ்தாபிக்கப்படவில்லை. சத்தியத்தை அவ்விதம் ஸ்தாபிக்க முடியாது. அவ்விதம் ஸ்தாபிக்கப்பட்டது சத்தியமாகாது. ஆத்மா பிரத்யக்ஷப் பிரமாணத்தால் ஸ்தாபிக்கப்பட்டதே. உதாரணமாக நம் தேகத்தில் ஒரு ஸ்பரிசம் ஏற்படுவதைக் கவனிப்போம். உடனே அந்த உணர்ச்சி ஏற்படுகிறது. இந்த உணர்ச்சியாவது என்ன? இதை ஸ்தூலமென்றோ அல்லது சூக்ஷ்மமென்றோ சொல்லத் தகுமோ! இது ஒரு ஸ்பந்தம் அல்லது அசைவே. எதனுடைய அசைவு? ஆத்மா அல்லது அறிவின் அசைவைத் தவிர வேறல்ல. இதேமாதிரி மற்ற இந்திரியங்களாலும் பூதங்களாலும் ஏற்படும் உணர்ச்சிகள் அறிவின் அசைவே. இவ்வுணர்ச்சிகளாகிய அசைவுகளுக்கு ஒருபுறம் பதார்த்தம் அல்லது விஷயமும், இன்னொருபுறம் ஆத்மா அல்லது அறிவும் இருக்கின்றன. முதல் சொல்லப்பட்ட நுனியை வாஸ்தவமாகக் கருதினோமானால் அது பந்தத்திற்குக் காரணமாகின்றது. இரண்டாவது நுனியை அநுசரித்தால் ஞானம் ஏற்படும். ஆகையால் ஆத்மா ஒவ்வொரு க்ஷணமும், எங்கும் வியாபித்து நிற்கும் பிரத்யக்ஷ சத்தியம். அணுவிலும் அணுவாகிய காலமாவது தேசமாவது, அதன் வியாபகமின்றி இப் பிரபஞ்சத்தில் இருக்க முடியாது.

### ஆத்மாவின் அநுபவம் யாருக்கு ஏற்படும்?

இந்த ஆத்மாவின் அநுபவம் பஞ்ச பூதங்களைக் கொண்ட மனதிற்குத்தான் ஏற்பட முடியும். ஜடப்

பொருள்களாகிய கல், மண் முதலியவைகளாவது, செடி கொடி வர்க்கங்களாவது, அல்லது சஞ்சரிக்கத் திறமை வாய்ந்த மிருகங்களாவது ஆத்ம அனுபவத்தை அடைய இயலாது. ஏனெனில் இவைகளுக்கெல்லாம் பஞ்ச பூதங்களின் அமைப்பு வேண்டிய அளவு இல்லாததாலும், மேலும் மனன சக்தியின்றி இருப்பதாலும் ஆத்ம உணர்ச்சி எக்காலத்திலும் ஏற்பட முடியாது. மனித தேகத்தில் மாத்திரந்தான் இவ்வாறு உணர்ச்சிகள் சரிவரப் பொருந்தி இருக்கின்றன. ஆகையால் மானிட வர்க்கம் ஒன்றினால்தான் ஆத்ம சத்தியம் உணரப்படும்.

இவ்விநோதமான அமைப்பு ஏற்பட்டதன் காரணம் ஆத்மத்தை உணரும்பொருட்டே. ஆகையால் நம் தேகத்தை இச்சத்தியத்தை உணர்வதன் பொருட்டு உபயோகித்தல் வேண்டுமே தவிர, தேகத்தையே போஷித்து அதன் செயல்களில் ஈடுபட்டுக் கொள்ளுவதன் பொருட்டு அல்ல.

ஆத்ம உணர்ச்சியை அடைய சர்வத் தியாகியாயிருந்து மனதை நிர்மூலம் செய்யவேண்டும். மனம் சஞ்லமற்று இருந்தால், அதாவது மனனம் செய்யும் தன்மை, முற்றிலும் அற்று இருந்தால், அப்பொழுது அது ஆத்மாவாகப் பிரகாசிக்கும். குடத்தில் வைத்த விளக்கைப்போல ஒளி மயமாக இருக்கும். மௌன பதவி என்று சொல்லப்படுவதும் இதுவே. கை கால்களை அசையாமல் வைத்து, வாயை மூடியிருப்பது மௌனம் ஆகாது. சரியான மௌனத்திற்கு இவை தேவையில்லை. ஒன்றிலும் ஈடுபடாமல் ஆத்மத் தியானத்தில் இருப்பதே மௌனமாகும்.

### சர்வத்தியாகியின் ஸ்திதி

மேற் சொல்லியபடி மனம் அசைவற்று நிற்கும் பொருட்டு, இச்சைகளை யெல்லாம் முற்றிலும் ஒழித்து சர்வத்தியாகியாக இருத்தல்வேண்டும். மோக்ஷத்தை அடையும் இச்சையும் இருக்கலாகாது. ஏனெனில் இதுவே மனதின் அசைவிற்குக் காரண மாகிப் பிறகு வெகுப் பிரபலமாகப் பெருகும். இதுவே சர்வத்தியாகம் எனப்படும்.

இப்படி இச்சையின்றி இருப்பவனின் ஆனந்தத்திற்கும் மனக் குளிர்ச்சிக்கும் உலகத்தில் ஈடு ஏது? சந்திரனைக் கோர்த்துக் கழுத்தில் மாலையாகக் கட்டிக்கொண்டாலும் இக் குளிர்ச்சிக்கு ஈடாகுமா? திரிலோகத்திற்கு அதிபதியாயினும் இவன் சந்தோஷத்திற்கு ஒப்பாகுமா? அல்லது ஒரு சௌந்தர்ய சுந்தரியின் ஆலிங்கனங்கூட ஆசையற்ற மனத்தின் ஆனந்தத்திற்கு ஈடாகாது. தேவை என்பதே இல்லாதவனுக்குப் பிரபஞ்சத்தில் எதுதான் திருப்தியைக் கொடுக்கும்? அவன் மனம் எப்பொழுதும் ஆத்மாவில் லயமடைந்த வண்ணம் இருக்கும். உலக வியவகாரங்களைச் செய்துவந்தால் என்ன? பார்ப்போருக்கு அவன் விஷய சுகங்களில் மூழ்கிக்கிடப்பதுபோல் தோன்றினும், வாஸ்தவத்தில் அவன் மனம் எப்பொழுதும் ஆத்மத்தை விட்டு நழுவாமல் இருக்கும். பரபுருஷனை இச்சைகொண்ட ஒரு ஸ்திரீ பலவித தேக அசௌகரியங்கள், இடையூறுகள், மனோவேதனைகளையெல்லாம் ஒருவித சோகமுமின்றித் தாங்கிவருகிறாள்; எப்படியென்றால் ஆசைப் புருஷன் அவள் மனதில் சதா குடிகொண்டு அதைக் கவர்ந்து எல்லா அசௌகரியங்களையும் மதியாவண்ணம்

செய்துவிடுகிறான். ஆத்மாவைக் கண்ட ஞானியும் இவ்விதமே உலக வியவகாரங்களை நடத்தி வருவான். ஆகையால் அறிவாளிகளுக்கு ஆத்மத்தை அடையும்பொருட்டுச் செய்யவேண்டிய யத்தனங்களுக்கு உதவும் கருவியே தேகம். ஒரு உத்தம ஸ்திரீ விவாகத்திற்குச் சில காலத்திற்குப் பின் தன் ஆசை நாயகன் சண்டாளனென்று அறியவந்தால், அக்ஷணமே ஆசையெல்லாம் வெறுப்பாக மாறி அவனை அதே க்ஷணம் தியாகம் செய்கிறாள். அதுபோல, தேகத்தின் மித்யா சொரூபம் அறியப்பட்டவுடன் அதன் மேலுள்ள பற்றுதல் நீங்கும்.

### ஜீவன் முக்தர்கள் — உதாரணம்

இப்படி இருப்பவர்களே ஜீவன்முக்தர்கள். இவ்வித ஜீவன்முக்தர்கள் அநேகரை நாம் அறிவோம். ஜனகன் ஜீவன்முக்தனாக ராஜ்யபாரம் செலுத்திவருகிறான். பூர்வகாலத்தில் உன் குலத்திலே உதித்த திலீபனும், மானிடருக்கு ஆதி புருஷனான மனுவும், மகா சிரேஷ்டரான மாந்தாதாவும் இவ்விதம் இருந்தவர்களே. அசுரர்களில் பலிசக்கரவர்த்தியும், தானவர்களில் பிரஹ்லாதனும் ஜீவன் முக்தர்களே. இந்திர ஜாலங்களுக்கு அதிபதியாகிய சம்பரன், சம்சாரமாகிய இந்திரஜாலத்தையும் கடந்தவனாக விளங்குகிறான். அசுர குருவாகிய சுக்கிராசாரியரும் அவர் சிஷ்யனாகிய புதனும் சதா ஆகாயத்தில் சஞ்சரித்தவண்ணம் பூமிக்குப் பலனைக் கொடுத்து வரும் ஆத்ம ஞானிகளே. தேவ குருவாகிய பிரகஸ்பதியும், தன் பத்னியின் நிமித்தம் சந்திரனிடம் சண்டையிட்டபோதிலும் ஆத்ம ஞானியே. சந்திர சூரியர்களும் அப்படியே. பிரபஞ்சத்தின் உற்பத்

திக்குக் காரணமாகிய பிரம்மாவானவர், ஓய்வில்லாமல் இப் பிரபஞ்சம் விஸ்தரித்துக்கொண்டிருந்த போதிலும், சலிக்காமல் இதில் ஈடுபட்டே இருக்கிறார். விஷ்ணு, ஈசுவரன், சுப்ரமணியர் இவர்களும் இடைவிடாமல் தங்களுக்குண்டான கர்மங்களைச் செய்தே வருகின்றனர். பிருங்கி என்னும் ரிஷி, ஈசுவர பக்தியால் தன் தேகத்திலுள்ள ரத்த மாமிசம் எல்லாம் தியாகம் செய்தார். ஆத்மத்தில் பரிபூரணமாக லயப்பட்டதனுல்தான் இவ்வாறு செய்ய முடிந்தது. மூன்று லோகங்களிலும் சதா சஞ்சாரம் செய்து அவ்விடத்தில் நேரும் விஷயங்களையெல்லாம் கவனித்து வரும் நாரதரும் ஆத்ம ஞானி ஆவர். பிருகு, பரத்வாஜர், சுகர், இங்கிருக்கும் விசுவாமித்திரரும் ஜீவன் முக்தர்களே.

இன்னும் எவ்வளவோ ஆயிரக்கணக்கான ஜீவன்முக்தர்கள் நமக்குத் தெரிந்தும் தெரியாமலும் இருக்கலாம். ஒவ்வொருவரும் வெவ்வேறு விஷயங்களைக் கவனித்து வரலாம். சிலர் ராஜ்ய விஷயங்களைக் கவனிப்பதிலும், சிலர் சம்சாரத்தை நடத்துவதிலும் சிலர் உலக வியவகாரங்களைக் கவனிப்பதிலும். சிலர் நாட்டில் வாழ்வதிலும், சிலர் காட்டிலும் இப்படிப் பலவிதமாக இருக்கலாம். சிலர் இதர ஜனங்களுக்குத் தெரியும்படியும், சிலர் கண்ணுக்குப் புலப்படாமலும் இருக்கலாம்.

இவர் அனைவர்க்கும் மேலாகிய ஆத்மா எப்பொழுதும் எல்லாமுமாக இருந்து பிரபஞ்சத்தின் விஸ்தரிப்பைத் தாங்கிய வண்ணம் இருக்கிறது. இதுவே விஷ்ணு என்றும், ஈசுவரன் என்றும் பல

பெயர்களால் வழங்குவது. இவ்விஷயங்களில் நாம் ஒரு யுக்தியைக் கவனிக்கவேண்டும்.

அசத்திலிருந்து சத் ஏற்படுவது

கல்லாகிய மலத்திலிருந்து தங்கமாகிய திரவியத்தை அடைகிறோம். பாபம் என்ற பயத்தால் உலகம் நீதியை அனுசரிக்கின்றது. மேலும் பொய்யினால் நன்மையோ அல்லது உண்மையோ ஏற்படலாம். சத்யமான ஆத்மாவில் அசத்யமாகிய ஜகத்தோற்றம் ஏற்பட்டுக்கொண்டே இருக்கிறது. அநித்யமாகிய தேகத்தின் மூலமாக நித்யமாகிய ஆத்மாவை அடைகிறோம். சூன்யத்தை தியானம்செய்வதாலும் ஆத்மாவை அடைகிறோம். அசத்தியமான ஜகத்தில் சத்யமாகிய ஆத்மா வியாபித்திருக்கிறது. பாவம் – அபாவங்களின் தன்மை இவ்விதம் இருப்பதை அறிவது அவசியம்.

மோக்ஷத்திற்கு உரிமையுள்ளவர் எவர்?

சர்வமும் ஆத்மாவாக இருப்பதால், எல்லா ஜகத் சமூகங்களுக்கும் முக்தி ஏற்படுவது நிச்சயம். இதுவே நியதி. ஆனால் ஸ்தாவர இனமாகிய மரம், மட்டை, செடி, கொடிகளுக்கும், ஜங்கமப் பிராணி வர்க்கங்களுக்கும் பிரபஞ்சமென்ற மோகம்கிடையாது சங்கல்பவசத்தால் ஏற்படும் சுகதுக்க உணர்ச்சிகளும் கிடையாது; மனம் என்பதும் கிடையாது. ஆகவே இவைகளுக்கு முக்தியென்னும் ஸ்திதி ஒவ்வாது. மானிடவர்க்கம் ஒன்றே இப்பதவிக்கு ஏதுவாகும். ஒவ்வொரு மனிதனும் ஒரு காலத்தில் முக்தியை அடைந்தே தீரவேண்டும். ஆனால் பிரயத்தனத்தால் விவேகத்தையும் யுக்தியையும் அடைந்து ஆராய்ச்சி செய்துவந்தால் வாழ்வை இன்பத்துடன் நடத்தி முக்தியைச் சீக்கிரமே அடையலாம்.

வால்மீகி: வசிஷ்டர் இப்படிச் சொல்லிய பிறகு, ராமனுடைய குணாதிசயங்களை அறிந்தவராய், ஜீவன் முக்தனாவதற்கு அவன் உரியவன் என்றும், ஆகை யால் சம்சாரத்தைவிட்டு ஒதுங்கி நிற்கத் தேவை யில்லை என்றும் சொன்னார். சம்சாரத்தைப் பாம்பாக அறிவது சரியே; ஆனால் அதை அப்படி அறிந்த பிறகு பாம்புக்குக் கருடனாக இருந்து அத்துடன் பயமின்றி விளையாடலாம். அக்ஞானி சம்சாரத்தில் ஈடுபட்டுக் கொள்ளுகிறான், ஞானியோ சம்சாரத்தில் விளையாடு கிறான்.

### சித் ஸ்பந்தமே ஜகத்

வசிஷ்டர்: ஆகவே நாம் அறிந்ததாவது இந்த ஜகத்தாகிய தோற்றம் சித்தின் ஸ்பந்தத்தினால் ஏற்படும் அசத்யமே. ஜலத்தில் ஒரு சிறிய அலை கிளம்பியதும் அதைத் தொடர்ந்து பல அலைகள் உண்டாகின்றன. சூரியன் உதயமானதும் அதன் கிரணங்கள் உலகமெங்கும் பரவி இருட்டைப் போக் கடித்துப் பிரகாசத்தைக் கொடுக்கின்றன. அதே மாதிரி, சித்தாகிய சூரியன் இயங்கினதும் உலகமாகிய தோற்றத்தைப் புலப்படுத்துகிறது.

### ஸ்பந்தம் எப்படி ஓய்வடையும்?
### யோக, ஞான மார்க்கங்கள்

ராமன்: சித்தின் ஸ்பந்தந்தான் ஜகத் என்பது சரியே. ஆனால் இதை அறிவதில் லாபமென்ன? பிறகு இதை எப்படி அடக்குவது? இவைகளை எனக்கு விளக்கும்படி வேண்டிக்கொள்கிறேன்.

வசிஷ்டர்: பனிக்கட்டியும் அதன் வெள்ளை நிற மும் வெவ்வேறாகக் கருதப்படினும் அவை ஒன்றை விட்டு ஒன்று தனியாக நிற்காது. எள்ளும் எண்ணெ

யும் அல்லது பூவும் வாசனையும் அப்படியே. இவ் விதமேதான் சித்தும் ஸ்பந்தமும். ஒன்று நசித்தால் மற்றதும் கூடவே நசிக்கும்.

பிறகு இதை அடக்கும் மார்க்கங்கள் இரண்டு, அதாவது மேற்சொன்ன இரண்டு அம்சங்களைத் தழுவி. ஒன்று சித்த விருத்திகளைத் தடைசெய்யும் யோக மார்க்கம்; மற்றொன்று சித்தத்தின் நாசத்தையே தழுவிய ஞானமார்க்கம்.

**ராமன்:** பிராண அபான வாயுக்களைத் தடை செய்து மனதை அடக்கும்படியான யோக மார்க்கத்தைப் பற்றி எனக்கு உரைப்பீராக.

**வசிஷ்டர்:** நமது தேகம் அநேக நாடிகளால் வியாபிக்கப்பட்டு, இவைகளின் ஸ்பந்தத்தால் தேகத்தில் விசித்திரமான கிரியைகள் நடைபெறுகின்றன. இந்த நாடிகள் எல்லாவற்றின் ஸ்பந்தத்திற்கும் ஒரே பிராணன் தான் காரணம். அபான, வியான, உதான, சமானமென்று சொல்லப்படும் இதர ஸ்பந்தங்கள் கற்பனைகளே; ஒவ்வொரு தேக பாகத்தை ஒட்டி ஒரே பிராணனுக்கு வேறு பெயர்கள் கொடுக்கப்பட்டன. காலத்தை அனுசரித்துப் புஷ்பங்கள் எப்படி மலர்கின்றனவோ அப்படியே 'இரண்டு' என்ற பாவம் ஏற்பட்ட க்ஷணமே சித்தம் விஸ்தரிக்க ஆரம்பிக்கின்றது. இதனால் சங்கல்பங்கள் அலைகள்போல் அடுத்தடுத்து உதிக்கின்றன. ஆகவே ஸ்பந்தம் அல்லது பிராணன் தான் மனம்; ஸ்பந்தம் குறைந்தால் மனம் சாந்தி அடைகிறது. மனம் விஸ்தரித்தால் சம்சாரம் வலுக்கிறது. எப்படியென்றால் சூரியன் உதயமானதும் ஜனங்கள் பிரவிர்த்தியில் ஈடுபடுவதுபோல்.

### பிராணயாமம் செய்யும் முறை

இந்த மனதினுடைய ஸ்பந்தத்தைத் தடைசெய்யும் யோகமார்க்கம் பலவிதம் ஆனால் இதைப் பிரயாசமின்றிச்செய்வதே முக்கியம். பிராணனென்பது ஸ்பந்தம், வாயுஅல்ல. ஆகையால் வாயுவை அடக்கித் தேகத்தைத் துன்பப்படுத்துவதில் லாபமில்லை. ஸ்பந்தத்தை அடக்க ரேசகம், கும்பகம், பூரகம் என்பவைகளில் ஏதாவதொன்றை அனுசரித்து மனதை ஒருமுகப் படுத்துவதே பிராணயாமம் எனப்படும். மனோ விருத்திகளை அடக்கி ஒரே விஷயத்தில் மனதை நிறுத்தி அப்யசிப்பதே யோகமெனப்படும். இவைகளைத் தவிர வேறு அப்பியாசங்களும் உண்டு, அதாவது, நாசி நுனியிலோ அல்லது 12 அங்குலத்திற்கு அப்பாலோ, அல்லது புருவ மத்தியிலோ பார்வையை நிறுத்தி, மனதையும் அப்பார்வையிலே செலுத்துவது. எவ்வித அப்யாசமாயினும் மனதை வசப்படுத்துவதில் கண்ணாயிருக்கவேண்டும்.

### இருதயமென்பது எது?

ராமன்: பூத வர்க்கங்களின் இருதயத்தில் ஆத்மா பிரகாசிப்பதாகச் சொல்லப்படுகிறது. இந்த இருதயமாவது எது?

வசிஷ்டர்: இது இருவகைப்படும். முதலாவது ஜனங்களால் சாதாரணமாகச் சுட்டிக் காட்டப்படும் மாமிச பிண்டம்; இரண்டாவது விவேகிகளால் சொல்லப்படுவது, பதார்த்தங்களின் தத்துவம் அல்லது சொரூபந்தான்.

ராமன் : யோக மார்க்கத்தை அறிந்து கொண்டேன் ; இனி, ஞான மார்க்கத்தைப்பற்றிச் சொல்வீராக.

ஞான மார்க்கம்

வசிஷ்டர்: ஆதியும் அந்தமும் இல்லாத ஆத்மா ஒன்றுதான் சத்தியம். இதுவே பிரபஞ்சமுழுதும் வியாபித்தும் ஆதரித்தும் வருகிறது என்ற நிச்சயம் மனதில் ஏற்பட்டு, அதைச் சர்வதா சாதனம் செய்து வருவதே ஞான மார்க்கம். எக்காரியத்தைச் செய்யும் முன்னும், அல்லது எந்த எண்ணம் மனதில் உதித்த போதும், அந்த க்ஷணமே அது எதற்காக, எவ்விதம், யார் பொருட்டுச் செய்யப்படுவது என்ற விசாரணையைச் செய்து, இவைகளுக்கெல்லாம் சாக்ஷியாய் நிற்கும் அறிவின் உணர்ச்சிகளே என்பதை உணர்ந்து வருவதே சாதனமாகும். ஆகையால் இச்சாதனம் சும்மா யிருக்கும்பொழுது மாத்திரம் செய்யப்படும் அப்பியாசமல்ல; சதா செய்யப்பட வேண்டியது. எதைச் செய்த போதிலும் விசாரணை செய்த பின்னரே, காரியத்தைத் தொடரவேண்டும். இப்படிப் பயின்று வந்தால், நாளடைவில் மனம் ஆத்மாவை நோக்கியே செல்லும். இதனுல் காரியங்களுக்கு ஏதாவது குந்தகமேற்படலாம் என்ற பயமே வேண்டியதில்லை. காரியம் இன்னும் நன்றாக நடை பெறுவதோடுகூட, அதனுல் ஏற்படும் பலன்களில் பற்றுதலும் குறைந்துவிடும்.

ஞானிகளும், ஜீவன் முக்தர்களும் சதா இவ்வாராய்ச்சியைச் செய்துகொண்டே இருப்பார்கள். ஏனெனில் அப்படிச் செய்வதாலேதான் மனம் மறுபடியும் உலக வியவகாரங்களுக்கு நழுவாமலிருக்கும். சதா ஆராய்ச்சி செய்வதே ஞானத்திற்கு ஊன்றுகோல்.

### வீதஹவ்யன் விருத்தாந்தம்

வசிஷ்டர்: கேவலம் ஆராய்ச்சி செய்வதாலேயே ஞானமடையலாம் என்பதற்கு இன்னொரு திருஷ்டாந்தமும் உண்டு. அதை இப்பொழுது சொல்கிறேன்.

விந்தியமலைச் சார்பில் ஒரு காலத்தில் வசித்து வந்த வீதஹவ்யனென்ற முனிவர், சாஸ்திரங்களைப் படித்தும், கர்மானுஷ்டானங்களைச் செய்தும். வெகு காலம் ஞானோதயமாகாததைக் கண்டு மேலும் இவைகளைக் குறித்து ஆராய்ச்சி செய்யலானார். இதன் முடிவாகக் கர்மங்களுக்கு ஓய்வில்லை என்றும், ஞானத்தை அடைய ஆராய்ச்சியால்தான் முடியும் என்றும் தீர்மானித்து. அம்மார்க்கத்தையே கடைப்பிடித்துச் சில காலத்தில் பலனையும் கண்டார்.

இந்தப் பக்குவமான நிலையில் ஒரு நாள், நிர்விகல்ப சமாதியை அடைய எண்ணி, உடனே பர்ணசாலையில் உட்புகுந்து. பத்மாசனத்தில் அமர்ந்து, கண்களை மூடிக் கொஞ்ச நேரம் மனதை அடக்கிப் பிறகு, பின்வருமாறு ஆலோசிக்கலானார்:

### பந்தம் தேகத்தால் ஏற்படுவதில்லை

"கர்மங்களெல்லாம் இந்திரியங்களால் செய்யப்படுகின்றன. இவ்விந்திரியங்களோ ஜடப்பொருள்கள். இவைகளால் சுயேச்சையாக யாதொன்றும் செய்ய முடியாது. வெளி வஸ்துக்களுக்கும் இவைகளுக்கும் என்ன சம்பந்தம்? ஒரு பொருளைக் கண்களால் பார்க்கும்பொழுது, கண் அனுபவிப்பது ஒன்றுமில்லை. கண் கண்ணாகவும் பதார்த்தம் பதார்த்தமாகவுமே இருக்கின்றன. இவ்விரண்டையும் பிணைத்த சம்பந்தமும், பார்வையால் ஏற்படும் அனுபவமும்,

சாக்ஷியாய் எது நிற்கிறதோ அதில்தான். ஆகையால் பந்தம் இந்திரியங்களால் ஏற்பட முடியாது.

பந்தம் மனத்தாலும் ஏற்படுவதில்லை

பிறகு மனதைப்பற்றிக் கவனித்தால், இது குரங்கைப்போல் சதா சஞ்சலத்திலேயே கண்ணுயிருக்கிறது. இதற்கேற்றுப்போல் பஞ்ச இந்திரியங்களின் சகவாசமும் ஏற்பட்டுள்ளது. அவைகளை ஓட்டிப் பதார்த்தங்கள்மேல் இச்சை வைத்து வருத்தத்தைத் தேடிக்கொள்ளுகிறது, பிச்சைக்காரன் வீடுவீடாகப் போய்க் கெஞ்சுவதுபோல், சுகத்தை அடைவதாக எண்ணி ஒவ்வொருபதார்த்தமாகப் பார்த்துவருகிறது. கடைசியில் அடைவதோ துக்கம்! ஜட பதார்த்தங்களோடு கூடி இருப்பதும் ஜடம்தானே! ஆனால் மனம் நினைத்துக் கொள்வதோ, தானே எல்லாம் செய்வதாகவும் அடைவதாகவும்! ஜடத்தன்மையைப் பொருந்தியதற்குச் செயலும் போகமும் ஏது? ஜடப்பொருள்கள் அநித்தியம், ஆகவே அசத்தியம். ஒரு க்ஷணம் தோன்றி அடுத்த க்ஷணமே அழிகிறவைகளுக்கு இருக்கை என்ற தன்மை ஏது? ஆகையால் இவைகளெல்லாம் தோற்றங்களே, இல்லாதவைகளே. இந்த மனமும் அதே மாதிரி இல்லாததே. இல்லாதது கர்த்தாவாகவும் போக்தாவாகவும் எப்படி இருக்கமுடியும்? இத் தன்மைகள் சர்வ வியாபியாயிருக்கும் சித்துக்கே உரிமை. சித்திற்கும் மனத்திற்கும் பந்துத்வம் இருக்க முடியாது. ஏனெனில் சம ஜாதி அல்லது நிலைமையிலிருப்பவர்களுக்குத்தான் பந்துத்வமும், மித்ரத்வமும் ஏற்படும். சூக்ஷ்மமாய் இருக்கும் சித்துக்கும் ஜடமாகிய மனத்திற்கும் இந்த சம்பந்தங்கள் ஒவ்வாது. கண் ஒருபொருளைப் பார்க்கும்

பொழுது அவ்விரண்டிற்கும் என்ன சம்பந்தம்? மூக்குக்கும் மலரின் வாசனைக்கும் என்ன சம்பந்தம்? அதேமாதிரி ஜடப்பொருள்களையே பின்பற்றும் மனதிற்கும் சூக்ஷ்மமான சித்துக்கும் யாதொரு சம்பந்தமும் இருக்க முடியாது. அகங்காரமாகிய மோகத்தால்தான் மனம் தன்னைச் சித்தாகப் பாவித்துக் கொள்கிறது. அது சித்தாக இருந்தால், அது எல்லாமுமாக இருக்க வேண்டும்; நான், நீ யென்ற வித்யாசங்களை உணரக்கூடாது. உற்பத்தி, நாசம் என்றவைகளுக்கும் உட்படக்கூடாது.

ஆகையால் மனதை ஜடமாகப் பாவித்தால் அதற்குக் கர்த்தா போக்தா என்பது கிடையாது. அப்படியின்றி ஜடபாவனைகளை விட்டு இது ஆத்மத்தையடைந்தால், அப்பொழுதும் அதற்குக் கர்த்தா போக்தா என்ற தன்மைகள் ஒவ்வாது, ஏனெனில் அப்பொழுது அதுவே எல்லாமுமாகவும் ஒன்றாகவும் இருப்பதால். ஒன்று என்பதில் கர்த்தா-காரியம் என்ற இரட்டை பாவம் எப்படிப் பொருந்தும்? ஆகவே இவைகள் ஜடமாகிய வஸ்துக்களிலாவது அல்லது ஆத்மாவாகிய சத்தியத்திலாவது பொருந்தா. இரண்டு என்ற பாவனையால் ஏற்படும் தோற்றங்களே ஜடப்பொருள்கள்.

இவ்வாறு தீர்க்க ஆலோசனையில் வெகுகாலம் இருந்தபிறகு வீதஹவ்யனுக்குப் பரிபூர்ண ஞானம் ஏற்பட்டது. இந்த நிலையில் ஸ்திரமாக இருந்து கொண்டு தன் இந்திரியங்களையும் மனதையும் நோக்கி தனக்குத்தானே பின்வருமாறு சொல்லிக் கொண்டான். "உங்களை நான் இப்பொழுது நன்கு அறிந்துகொண்டேன். இவ்வளவு காலம் உங்களால்

நான் ஏமாற்றப்பட்டேன். இப்பொழுது எனக்கு அறிவு ஏற்பட்டது. விபரீதமான புத்தி இவ்வளவு காலம் என்னிடத்து நிலைநின்ற காரணம் உங்களை ஆத்மாவென்று நினைத்ததே. வாஸ்தவத்தில் நீங்கள் இல்லாதவர்கள், ஆகவே எப்படி ஆத்மாவாக இருக்கமுடியும்? ஆகையால் நீங்கள் போகலாம். உங்கள் சகவாசம் போதும். நீங்கள் நாசமானல், எல்லோருக்கும் க்ஷேமம்; உங்களுக்கும் க்ஷேமம். ஏனெனில் இல்லாமைதான் ஆத்மத்தின் சொரூபம். ஆகையால் உங்களுக்கும் மோக்ஷகதி ஏற்படும்.

இதற்குப் பிறகு வெகு காலம் மௌனமாய் சமாதியிலிருந்தான். வெளி உலகில் எவ்வளவோ சம்பிரமங்கள் நடந்தும், பல சப்தங்கள், ஜனங்களின் போக்குவரத்து, ஜலப் பிரவாகம், பூகம்பம் இன்னும் அநேகவித இடையூறுகள் ஏற்பட்டும் சமாதி கலையாமல் வீற்றிருந்தான். பிறகு ஒரு நாள் சமாதியிலிருந்து விழித்துச் சுற்றிப் பார்த்தான். தன் உடல் முழுதும் மண் புற்றுல் மூடப்பட்டிருந்தது. ஆனல் பிராண ஸ்பந்தம் லேசாக உடலில் இயங்கிக் கொண்டிருந்தது. பிறகு உள்ளும் வெளியும் இயங்கிய பிராண ஸ்பந்தமாகிய தோற்றங்கள் சில புலப்பட்டன. இதைத் தொடர்ந்து தன்னுடைய பூர்வ ஜன்மங்களின் போக்கை அறியும்பொருட்டுக் கண்ணை மூடி ஸ்மரிக்கையில், தான் கைலாசத்தில் சிவ பக்த முனியாக அநேக காலம் கழித்ததாகவும், இந்திரப் பதவியை சில காலம் வகித்ததாகவும், வித்யாதரனுக இருந்ததாயும் உணர்ந்தான்.

ராமன்: நீங்கள் சொல்வது கால தேசக் கிரமங்களுக்கு விரோதமாக இருக்கின்றதே! அநேக

காலத்து அனுபவங்களும், பல தேச அனுபவங்களும் சொல்ப நேரத்தில் ஒன்றன்பின் ஒன்ருகத் தோன்று வது எப்படிப் பொருந்தும்?

காலதேசக் கிரமங்கள் மனதில் அடங்கியவை

வசிஷ்டர்: காலம், தேசம் இரண்டும் நம்முடைய உணர்ச்சிகள். தன்னுடைய தற்காலத்துத் தன்மை யாகவே கால தேசங்களை மனம் உணருகின்றது. இவை இரண்டும் மனோ மாத்திர உணர்ச்சிகள். மனதைவிட்டுத் தனிப் பிரமாணங்களல்ல. மனதின் அசைவு எப்பொழுதும் ஒரேமாதிரி இருப்பதில்லை. ஒரு சமயத்தில் வெகு நிதானமாகவும் மற்றச் சமயங் களில் வெகு துரிதமாகவும், ஒரு க்ஷணம் வெகு சிறிய பிரதேசத்தில் அடங்கியபடியும் வேறு க்ஷணம் பூமி முழுவதையும் அடக்கியபடியும், இப்படித் தன் இஷ்டப்படியெல்லாம் காலத்தையும் தேசத்தையும் அனுபவித்து வருகிறது. ஆகையால் மனதின் வேகத் தைத் தழுவித்தான் காலம் ஒவ்வொரு க்ஷணமும் நிர்ணயிக்கப்படுகிறது.

வீதஹவ்யனின் மனத்தோற்றங்களைக் கவனிக்க, பூர்வ ஜன்மங்களில் இச்சைகளாகப் பாவிக்கப்பட்ட இந்திரப் பதவி, சிவபக்தனை முனி எல்லாம் அநேக ஆயிர வருஷங்களில் நடைபெறும் பாவனைகளாக இருந்தன. தற்சமயமிருக்கும் மனோ நிலையில் இவைகள் வெகு சீக்கிரம் நடைபெறும் தோற்றங்களாகக் காணப்பட்டன. மேலும் தேகத்தை அனுசரித்து நேரும் அநுபவங்களுக்குக் காலப் பிரமாணம் வேறு. அப்படியின்றி அநுபவங்கள் மனோ மாத்திரமாக இருப்பின், அவை வெகு சொல்ப காலத்தில் ஏற்படும். மேலும் ஆயிர வருஷத்திய அனுபவங்

களுக்கு, நடைபெறும்பொழுது அவ்வளவு காலம் வேண்டியிருப்பினும், தற்சமயம் இவைகளை மனதில் சிந்திக்கும்பொழுது, வெகு சொல்ப காலத்தில் பூரணமாகக் காணலாம்.

ராமன்: வீதஹவ்யன் ஜீவன்முக்தனாக இருந்தும் பந்தம் மோக்ஷம் என்ற நோக்கங்களை அடைந்ததேன்?

சித் என்பதை அனுசரித்துப் பேசும்பொழுது,
பந்தம் மோக்ஷம் என்பது பொருந்தாது

வசிஷ்டர்: ராமா! உனக்குத் திரும்பித்திரும்பி இந்த சந்தேகம் ஏற்படுவதேன்? வீதஹவ்யனின் சிதாகாசத்தில் இந்தப் பாவங்கள் ஏது? உன்னுடைய சிதாகாசத்திலும்கூட அவை ஏற்பட முடியாதே! ஏனென்றால் அவைகள் அசத் ரூபம்! ஜகத் முழுதும் சித்மயமாய் இருக்கும்பொழுது சித்தால் வேறொன்றை எவ்வாறு உணரமுடியும்? ஆனால் ஜகத் நோக்கம் ஏற்படும் பொழுது, அதாவது சித்தானது மனம் என்னும் நிலைக்கு இறங்கியதும், ஜீவன்முக்தன் புலப்படுபவைகளைக் காட்சிகளாகவே உணருகின்றான். இதர ஜனங்களோ இவைகளை வாஸ்தவம் எனக் கருதுகின்றார்கள்.

வீதஹவ்யன் முக்தி அடைதல்

வீதஹவ்யன் தன் தேக நிலையைக் கண்டதும் மறுபடியும் ஏன் இந்த உடலை அடைவது என்று எண்ணினான். அடுத்த க்ஷணம் தனக்குத் தேகம் இருந்தும் இல்லாமற்போயினும் எல்லாம் ஒன்றே, ஆகையால் இதை நாசம் செய்யும் பிரயத்தனம் தான் ஏன்? என்ற தீர்மானமடைந்து தேகத்தை மீண்டும் அடைய முயற்சி செய்தான். இதன் பொருட்டுச் சூரியனையும் பிங்களனையும் ஆசிரயித்து, தேகத்தில் உட்புகுந்து அதை இயங்கச் செய்தான்.

இப்படிச் சில காலம் கழித்த பிறகு, விதேகமுக்தியை அடையும் எண்ணம் உதித்தது. உடனே ஆசனத்தில் அமர்ந்து கர்மேந்திரியங்களையும் ஞானேந்திரியங்களையும் அவைகளைச் சேர்ந்த பூதங்களில் லயம் செய்து பிறகு மனதை நிர்மலமாகச் செய்து கொண்டான். இந்த நிலையில் மனம் அசைவற்று இருக்கும். இப்படி ஸ்படிகம்போலுள்ள மனதில் ஒரு பிரகாசம் ஏற்பட்டது. அதை அவன் கவனிக்க வில்லை. பிறகு அந்தகாரமாகிய இருள் தோன்றிற்று, அதையும் அவன் கவனிக்கவில்லை; அதன் பிறகு மனம் கேவலம் இருக்கையென்ற தன்மையை அடைந்தவாறே பரம ஆகாசத்தில் கலந்தது. வீதஹவ்யன் பரமாத்மாவாக ஆனான். அவன் தேகம் நாளடைவில் மண்ணுடன் கலந்தது.

ஞானம் சொந்த முயற்சியால்தான் சித்திக்கும்

இந்தக் கதையை அடிக்கடி ஆராய்ச்சி செய்து வந்தால், அநேக தத்துவங்கள் வெளிப்படும். இங்கே சொல்லப்பட்டவைகளும், இனி சொல்லப்போவதும் எல்லாம் என்னுடைய சொந்த அனுபவத்தால் அறியப்பட்டவைகள்; மேலும் வெகு காலம் ஜீவித்து இந்த நீண்ட ஆயுள் காலத்தில் அடிக்கடி ஆராய்ச்சி செய்து சாரமாய்க் கண்டவை களுமாகும். ஆகையால் இவைகளை மனதில் வாங்கிக் கொண்டு நீயும் அடிக்கடி ஆராய்ச்சி செய்துவருவா யாகில் ஜீவன் முக்தனாவதில் சந்தேகமில்லை. ஆனால் நான் சொல்வதிலேயே உனக்கு ஞானம் ஏற்படாது. உன் முயற்சியும் ஆராய்ச்சியுந்தான் பிரதானம்.

வீதஹவ்யன் தன்னுடைய சொந்த முயற்சி யாலும் ஆத்ம விசாரணை செய்து வந்ததாலுமே

பரமாத்மா ஆயினன். நீயும் அவ்விதம் சோகம், பயம், விசாரமின்றி, ஆராய்ச்சி செய்தவண்ணம் கர்மங்களைச் செய்துவருவாயாக.

ராமன்: ஜீவன் முக்தர்களாய் இருப்பவர்களுக்கு ஆகாயத்தில் சஞ்சரிப்பதும் இன்னும் இதர சித்திகளும் ஏற்படுவதுண்டா?

சித்திகளும் அவைகளின் அளவும்

வசிஷ்டர்: நீ சொல்லும் சித்திகளெல்லாம் பதார்த்தங்களுக்கு இயற்கையால் ஏற்பட்ட தன்மைகளையும் சக்திகளையும் தழுவியே அடையப்படும். இத்தன்மைகளையும் சக்திகளையும் மீறியோ அல்லது விரோதித்தோ யாதொரு சித்தியும் அடையப்பட முடியாது. எவ்வித சித்தியும் இந்தக் கட்டுப்பாடுகளுக்கு அடங்கியே இருத்தல்வேண்டும். அபூர்வப் பிரயத்தனத்தால் அடையப்படும் சித்திகள், வஸ்து, காலம், கிரியைகளைத் தழுவியே இருக்கவேண்டும். நியதிக்கு விரோதமாக பிரம்மா, விஷ்ணு, சிவனும் யாதொன்றும் செய்யத் தகாது. உதாரணமாக விஷம், மது இவ்விரண்டும் அததற்கு ஏற்ற பலனைத்தான் கொடுக்கும், ஏனெனில் அவ்வஸ்துக்களின் தன்மை அவ்விதம். அதே மாதிரி காலம், கிரியை, மந்திரம் இவைகளும் தங்களின் தன்மைக்கு ஏற்ற பலன்களைத்தான் கொடுக்கும். இவ்வஸ்துக்களின் சக்திகளைத் தவிர்த்து வேறு சித்திகளை அடைவது முடியாத காரியம்.

ஆனால் ஜீவன்முக்தர்களாக இருப்பவர்களுக்கு இவ்வித சித்திகளை அடையும் நோக்கமும் கருத்தும் கிடையாது. வஸ்துக்களின்மேல் சிந்தையும் ஆசையும் சென்றால் ஜீவனுக்கு முக்தி ஏது? எல்லாவற்றிலும்

மேலான ஆத்மத்தில் தங்கள் நோக்கத்தைச் செலுத்தியவர்கள் இந்தக் கேவல சித்திகளைக் குறித்து ஒரு பொழுதும் சிந்தியார். தேவை என்பதையே அறியாத நித்யதிருப்தர்களுக்குச் சித்திகளைக் குறித்த நோக்கம் எவ்விதம் ஏற்படும்?

ராமன்: வீதஹவ்யனுடைய தேகம் வெகு காலம் போஷிக்கப்படாமலும் கவனிக்கப்படாமலும் இருந்தும் எவ்விதம் துஷ்ட ஜந்துக்களாலாவது பஞ்ச பூதங்களாலாவது நாசமடையாமல் இருந்தது?

### வாசனைகளைக் கடந்தவர்களுக்கு எவ்விதத் தீங்கும் நேராது

வசிஷ்டர்: எவர்களிடத்து வாசனை என்பது முற்றிலும் ஒழிந்து சம்வித் ஞானம் ஒன்றே புலப்படுகின்றதோ, அவர்களிடத்து பஞ்சபூதங்களாவது, ஜீவ ஜந்துக்களாவது ஏதும் செய்யமுடியாது. ஆகையால்தான் இம்மகாபுருஷர்கள் வெகு காலம் தங்கள் தேகத்திற்கு யாதொரு தீங்கும் நேராமல் சமாதியில் காலத்தைக் கழிக்கிறார்கள். இதன் தத்துவம் என்னவென்றால் மனம் எதில் இச்சைகொள்கிறதோ அதாகவே மாறிநிற்கும். ஒரு வஸ்துவைக் கண்டதும் அவ்வஸ்துவாக மாறுகின்றது; சிநேகிதனைக் கண்டதும் சிநேகபாவமாகவும், சத்துருவைக் கண்டதும் விரோத பாவமாகவும் தோன்றுகின்றது. இது மனதினுடைய தன்மை. ஆகையால் மனனம் செய்யுமிடத்தில்தான் இதர மனங்களும் வேறுபாட்டை அடைகின்றன. உதாரணமாக அதிகாரியின் உத்தரவைக்கொண்டு வேலைக்காரன் பாதையிலிருக்கும் மரங்களை வெட்டுகிறான். அவ்வழியாகச் செல்லும் வழிப்போக்கர்களும் மரங்களை வெட்டுவதில் ஈடுபட்டுக்கொள்வார்களா?

அதேமாதிரி மனம் என்னும் இயக்கமில்லாத மகான்களிடத்து இதரர்கள் மனவேறுபாடு அடையார். காட்டு மிருகங்கள்கூட அவர்களுக்கு ஒரு தீங்கும் செய்வதில்லை.

இன்னொரு யுக்தியும் உண்டு. அதாவது தேகத்தில் இருவித அசைவுண்டு, வாயுவால் ஏற்படும் தேக அசைவும், ஸ்பந்த சக்தியாகிய மனதின் அசைவும். இவ்விரண்டும் நிரோதம் செய்யப்பட்டால் தேகம் மேருபர்வதத்தைப்போல அவ்வளவு ஸ்திரமாகி விடும். இந்த சித் இருக்கையென்ற தன்மையுடன் கூடியே இருத்தல் வேண்டும். ஸ்பந்தமற்ற நிலையில் யாதொன்றாலும் தேகத்திற்குத் தீங்கு நேரிடாது. இதை ஆசிரயித்துத்தான் யோகிகள் வெகுகாலம் ஜீவித்திருக்கிறார்கள்.

**ராமன்:** மனது நாசமடைந்த பிறகு சம நோக்கமென்பது எதற்கு ஒப்பும்? மனம் பிரம்மத்தில் லயமாய்விட்டால் சம நோக்கமாகிய குணம் எப்படிப் பரிணமிக்கக்கூடும்?

### மனதின் நாசம்

**வசிஷ்டர்:** மனம் அல்லது சித்தத்தின் நாசம் இருவகைப்படும், ஒன்று ஸரூப நாசம்: மற்றொன்று அரூப நாசம் - அதாவது சொரூபத்தைக் கூடியதும், சொரூபமற்றதும். முதல் சொல்லியது ஜீவன்முக்த ஸ்திதியைக் குறிப்பிடும். மற்றொன்று விதேக முக்த ஸ்திதியைக் குறிப்பிடும். சொரூபம் கூடிய ஸ்திதியில் சித்தம் நாசமடைந்தாலும் சித், சத்தை அல்லது இருக்கை என்ற தன்மையுடன் கூடியே இருத்தல் வேண்டும். இதுதான் சமகுணத்தை அடைந்ததாகக் கருதப்படும்.

ராமன்: மனம் நாசமடைந்தது என்று பேசுங்கால் (1) யாருடைய மனம் நஷ்டமென்று ஏற்படுகிறது? (2) பிறகு நாசமடைந்த மனம் எவ்வாறு இருக்கும்? (3) அதனுடைய நாசம் எவ்விதமானது? (4) நாசத்தினுடைய இருக்கை எப்படிப்பட்டது?

வசிஷ்டர்: நீ கேட்ட முறைப்படி பதில் சொல்கிறேன், கவனித்துக் கேள்.

எந்தத் தீரன், சுகமோ துக்கமோ ஏற்பட்ட நிலைகளில் மனவேறுபாடின்றிக் கவலையற்று மலைபோல் ஸ்திரமாய் இருக்கிறானோ அவன் மனம் நாசமடைந்ததாகக் கருதப்படும். 'இது நான், அது நானல்ல' என்னும் பாவனைகள் எவன் மனதில் உதிப்பதில்லையோ அவன் மனம் நாசமடைந்ததாகும். எந்த தீரன் ஆபத்துக்காலத்தில் சஞ்சலமின்றியும், சந்தோஷம் உண்டாகுமிடத்தில் உற்சாகமின்றியும், மதந் தருமிடத்தில் மந்த புத்தியின்றியும், எப்பொழுதும் சம குணத்துடன் பிரகாசிக்கிறானோ அவன் மனம் நாசமடைந்ததாகும். இப்படி நாசமடைந்த மனதை உடையவனே ஜீவன்முக்தனெனப்படுவான். மனதின் நாசமே சத்வத்தின் உதயம். சத்வத்தின் இருக்கை தான் மனதின் நாசத்திற்கு அறிகுறி. ஜனன மரணத்திற்குக் காரணமான வாசனை முற்றிலும் நாசமடைந்து பரிமளிக்கும் ஜீவன் முக்தனுடைய மனம் இருக்கையென்ற ஒரு தன்மையில்தான் தோற்றமளிக்கிறது ; இதுவே சத்வம் எனப்படும்.

நாசமடைந்ததென்று சொல்லப்பட்ட ஜீவன் முக்தனின் மனம் எப்பொழுதும் எல்லாவற்றிலும் சம நோக்கமுடையதாய் இருக்கும்; குண வேற்றுமைகளால் பாதிக்கப்படாமல் சர்வதா குளிர்ச்சியடைந்து

தாக இருக்கும். இதுவே ஸரூப மனோநாசம் என்பது. சொரூபமற்ற மனோநாசமானது விதேக முக்தி ஸ்திதியில் ஏற்படுவது. இந்த ஸ்திதியை, குணமுடையதென்றோ அல்லது குணமற்றதென்றோ, தேஜஸென்றோ அல்லது தமஸென்றோ, சத்தாகவோ அல்லது அசத்தாகவோ எவ்விதமும் கருதப்படாதபடி, ஆனால் பரம சூக்ஷ்மமாய் எல்லாவற்றையும் தன்னுள் அடக்கிக்கொள்ளும்படியான மகத்தான சத்திய மாகக் கொள்ளவேண்டும்.

பிரம்மாண்டத்தின் உற்பத்தி

ராமன்: இந்தப் பரம ஆகாச கோசத்தில், பிரம்மாண்டமானதும் திடமானதுமான பிரபஞ்சமும் அதனுள் அடங்கிய சகல வஸ்துக்கள், தாவர ஜங்கமப் பிராணிகள், மனிதர், அசுரர், தேவர் எல்லாம் எதைக் காரணமாகக்கொண்டு உற்பத்தி ஆயின? அந்த பீஜத்திற்கு எது காரணம்? இவைகளைப்பற்றி எனக்கு விவரமாய்ச் சொல்லும்படி வேண்டிக்கொள்ளுகிறேன். ஞானம் அடைவதற்குச் சாரமாய் இருப்பதைச் சொல்லவும்.

வசிஷ்டர்: எல்லாச் சுக துக்கங்களுக்கும் முதல் காரணம் சரீரம். செடி கொடிகளின் மலர்ச்சிக்கும் வளர்ச்சிக்கும் வசந்தகாலம் எப்படிக் காரணமாகின்றதோ, அதே மாதிரி இந்தத் தேகமும் சித்தின் பாவ-அபாவத் தன்மையால் ஏற்படும் சுக துக்கங்களின் விஸ்தரிப்புக்குக் காரணமாகிறது. இந்தச் சித்தின் பாவனைகள், சொப்பனம் ஏற்படுவதுபோலும் சங்கல்பத்தில் கந்தருவநகரம் ஏற்படுவது போலும் தான், உண்டாகின்றன. சித்தின் விஸ்தரிப்புக்குக் காரணம் இருவகைப்படும். அதாவது (1) பிராணனுடைய

ஸ்பந்தம்; (2) திடமாகிய பாவனை. காரணம் இரண்டென்று சொல்வது அனுபவத்திற்கும் விரோதமில்லை. உதாரணமாக ஜலம் எடுக்கும் விஷயத்தைக் கவனித்தால், ஜலமிருக்கும் இடமும் அதை எடுக்கப் பாத்திரமும் வேண்டும். ஒன்றுமட்டும் இருந்தால் போதாது. அதே மாதிரித்தான் சித்தின் விருத்திக்கும் இரு காரணங்கள் இருப்பது சகஜமே. நாடிகளில் பிராணனுடைய ஸ்பந்தம் ஏற்பட்டவுடன் சித்தும் ஏக காலத்தில் விஸ்தரிப்பை அடையத் தயாராக இருக்கின்றது. பிராணன் இயங்குவது நின்றால் சித்தின் அசைவும் நின்றுவிடும். பிராணன் நிரோதப்பட்டு அசைவின்றியிருந்தால் அப்பொழுதுதான் சாந்தி ஏற்பட்டதாகும். பிராணனின் அசைவு மறுபடியும் நேரும்பொழுது அதே க்ஷணம் உணர்ச்சியும் உண்டாகிறது. இந்த உணர்ச்சியானது தேகத்தில் ஸ்புரிக்கும் பொழுது, தோற்ற ஜாலங்கள் ஏற்படுகின்றன. எந்த இந்திரியத்தை அனுசரித்து நிற்கிறதோ, அதன் பலம் அந்த க்ஷணம் தோற்றமுண்டாகும். சுழன்றுகொண்டிருக்கும் சக்கரத்தில் உட்கார்ந்திருப்பவன் காணும் காட்சிகளைப்போல் உணர்ச்சிகள் ஓடும் வழியெல்லாம் காட்சிகள் தோன்றுகின்றன. ஆகவே சம்வித் அல்லது உணர்ச்சியை நிரோதம் செய்தால் சாந்தம் உண்டாகுமென்று ஏற்படுகிறது. ஆனால் உணர்ச்சிகள் அநேகம். இவைகளை ஒவ்வொன்றாக நிரோதம் செய்வது சாத்யமல்ல. ஆதலால் இவ்வுணர்ச்சிகள் ஏற்படுமிடத்து இவைகளை அங்கீகரிப்பதில்லையென்ற நிச்சயம் வைத்துக்கொண்டால், அவைகளால் யாதொரு மனோவேற்றுமையும் ஏற்படாது. இப்படி உணர்ச்சிகளினிடையில் அசைவற்றிருப்பதே உன்னதமான பதவி.

மேலே சொன்ன பிராண ஸ்பந்தத்தை நிரோதம் செய்யும்பொருட்டே, யோக மார்க்கத்தைக் கடைப் பிடித்தவர்களால் பிராணுயாமம், தியானம் என்ற முறைகள் எடுத்துக் காட்டப்பட்டன.

ஞான மார்க்கம்

ஆனால் ஞான மார்க்கத்தை அனுசரிப்பவர்களால் சொல்லப்படுவது வேறாகும். அதாவது ஆத்மத்தில் சித்தத்தின் உற்பத்திக்குக் காரணம் வாசனையே. இவ்வாசனையைப்பற்றி, பெரியோர்களால் சொல்லப் பட்டதைக் கேள்.

விசாரணை செய்யாமல் ஒரு பதார்த்தத்தைப் பார்க்கும்பொழுது மனதில் ஒரு பாவனை ஏற்படு கிறது. இந்தப் பாவனை திடமானதும், அது வாசனை யாக நிற்கும். இவ்வாசனையின் காரணத்தால் பாவனை தீவிரமாகி, உணர்ச்சியென்ற ஸ்பந்தம் உணரப்படும் வஸ்துவாக மாறி நிற்கும். ஆக ஒன்றுக்கொன்று காரணமாய், உணரப்படும் வஸ்துக்களுக்கு அதீன மாயிருக்கும் நிலையே மனம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே, இந்த மனமாக நிற்கும் நிலைக்கு விசாரணை செய்யாத துர்திருஷ்டியே காரணம் — அதாவது அக்ஞானம். பிறப்பு — இறப்புக்கும் இம் மனமே காரணம். ஆகவே பாவனை, வாசனை இவ்விரண்டில் ஏதாவது ஒன்று அழிந்தால் மற்றொன்றும் கூடவே அழியும். பாவனை ஏற்படாமல் வாசனை ஏற்பட முடியாது; அல்லது வாசனை முற்றிலும் அழிந்தால் பாவனையும் ஏற்படக் காரணமில்லை.

எவன் உணர்ச்சி என்னும் தன்மையில் ஈடுபடா மல் நிர்மலமான அறிவின் தன்மையில் இருக்கிறானே அவனே மனமற்றவனாவான். அவனே ஜீவன்முக்தன்.

வறுக்கப்பட்ட விதைபோல் யாதொரு கிளர்ச்சிக்கும் ஆதாரமில்லாதவனுவான். எக்காரியத்தைச் செய்தாலும் இயந்திரத்தைப்போல், பாவனையின்றி இருக்கும் ஸ்திதியே அந்நிலை. இவ் வாசனை பாவனை இரண்டும் எள்ளும் எண்ணையும் போலவும், விதையும் மரமும் போலவும் ஒன்றுக்கொன்று காரணமாகும். ஆனல் உணர்ச்சியானது உணருகிறவனின்றி இருக்க முடியாது. உணருகிறவனுடைய நோக்கமே உணர்ச்சியாகும், உணர்ச்சியே பிறகு வஸ்துவாகும். ஆகையால் உணருகிறவன் தான் வஸ்துவாகப் பிரதிபலிக்கின்ருன். உணர்ச்சியின் அழிவே வஸ்து ஜாலங்களின் நாசம் ஆகும். உணருகிறவனுடைய சங்கல்பமே உணர்ச்சி, ஆகவே பதார்த்தமும். சங்கல்பம் ஏற்படாத நிலையில் அறிகிறவனும், அறியப்படும் பொருளும் கேவலம் "அறிவாய் அதாவது ஒன்ருய் நிற்கும்". ஆகையால் அறிவில் எது தோன்றினுலும் அதை உடனே அழித்தால், பிறகு உணர்ச்சி ஜாலங்களே அதாவது சம்சாரமே ஏற்படாது. இதுவே மோக்ஷத்திற்கு உபாயமாகும். ஆகையால் நீ உணர்ச்சியென்னும் தன்மையில் இருந்துகொண்டு, ஒன்றையும் உணராமல் இருப்பாயாக. உணர்ச்சியே இல்லாமலிருப்பது ஜாட்யமாகும்; தமோ குணத்தால் நிறையப்பட்டது. ஆகையால் உணர்ச்சியேயின்றி இருத்தலாகாது.

**ராமன் :** அதாவது ஜடமற்ற உணர்ச்சி ஏற்பட வேண்டுமென்று ஆகும். அது எப்படி முடியும்? ஏனெனில் உணர்ச்சியானது ஜாட்யம்.

**உணர்ச்சியின் தத்துவம்**

**வசிஷ்டர் :** உணர்ச்சியே இல்லாமல் இருக்க முடியாது. நித்திரையில் மாத்திரம் தான் இது ஏற்பட

லாம். நித்திரை ஒரு ஜாட்ய அவஸ்தை. விழிப்பில் உணர்ச்சிகள் ஏற்பட்டுக்கொண்டே இருக்க அவை களை ஏற்றுக்கொள்ளாமலிருப்பது, அதாவது அவை களால் யாதொரு வேறுபாடில்லாமல் தன் சுய நிலையில் இருப்பதே அஜாட்யமான உணராமை. வேறுபாடு அடையும்பொழுதுதான் மனம் இருப்பதாக அறி கிறோம். வேறுபாடு இல்லாமலிருந்தால் மனம் அழிந்து கேவல அறிவாய் நிற்பதைக் காண்போம். யோகிகளும், ஞானிகளும் அதாவது ஜீவன்முக்தர்கள் இந்நிலையில்தான் இருக்கிறார்கள். பட்டுப் பூச்சி தானே தன் வலையில் சிக்கிக்கொள்வதுபோல் அறிவானது அறியும் தன்மையில் ஈடுபட்டுக்கொண்டு, பதார்த்தங் களாக விஸ்தரித்து, சம்சாரத்தில் சிக்கிக்கொண்டு, திண்டாடிக் கடைசியில் துயரங்களால் மதியடைந்து மறுபடியும் பூர்வ அறிவு நிலையை அதாவது மோக்ஷத்தை அடைகின்றது. எதிலிருந்து நழுவியதோ அதையே மறுபடியும் அடைகிறது. ஆகவே பிரபஞ் சமெல்லாம் அறிவைத் தவிர வேறல்ல. நான், நீ, பதார்த்தம் என்னும் பாவனைகளெல்லாம், அறிவி னுடைய சங்கல்பங்களே. இச் சங்கல்பமே பாவனை, வாசனை இவ்விரண்டிற்கும் மூல காரணம்.

ஜகத்தின் முடிவு

ஆகவே பிரபஞ்சமெல்லாம் சம்வித் அல்லது அறி வில் முடிவை அடைகிறது. இந்த ஸ்திதி தேகத்தைக் கூடியிருக்கும் நிலையைத் தழுவிச் சொல்லப்பட்டது. இந்த ஸ்திதியில் வாசனை, பாவனை இவைகளுக்கு மூலமாகிய சங்கல்பம் முற்றிலும் ஒழிந்து, அறிவு தனிப்படையாக நிற்கும். பிறகு தேகம் நசித்ததும் இவ்வறிவும் ஒரு முடிவை அடையவேண்டும்.

ஏனெனில் அறிவு இயங்குவதற்கு யாதொரு நிமித்தமும் இல்லை. ஆகையால் கேவலம் இருக்கையென்ற தன்மையை அடைகின்றது. இதுவே ஒன்ருகவும் பலவாகவும் கருதப்படும். ஆனால் பலவாகக் கருதுவது சரியல்ல. ஏனெனில் இவ்வொவ்வொன்றிலும் "இருக்கை" என்பதுதான் சாஸ்வதமாக இருப்பது. ஆகையால் அதுதான் பலவற்றினுடைய நிஜ சொரூபம்.

இந்த இருக்கை என்பதுதான் எல்லாவற்றிற்கும் மூலகாரணம். இதற்குக் காரணம் ஒன்றுமில்லை. இதுவே வாக்குக்கும் மனதிற்கும் எட்டாத நிலை. இதை இருப்பதாகவோ அல்லது இல்லையென்ருே சொல்லமுடியாது. அது தேஜஸுமில்லை தமஸும் இல்லை, அது காலமுமில்லை காலமற்றதுமில்லை. எல்லாமும் அதுவே, ஒன்றும் அது இல்லை.

ராமன்: மேல் சொல்லிய இரண்டுவித உபாயங்களில் எதை அனுசரித்தால் வெகு சீக்கிரம் மோக்ஷ பதவியை அடையலாம்?

ஞானமார்க்கமே உயர்ந்தது

வசிஷ்டர்: இது வரையில் அநேக உபாயங்கள் சொல்லப்பட்டன. இவைகளில் யோகமார்க்கமும் ஞானமார்க்கமும் முக்கியமாகும். ஆனால்யோகமார்க்கம் நல்ல குரு உபதேசம் பெற்று, வெகு காலம் பிரயாசைப்பட்டுப் பழகி வந்தால் ஞான மார்க்கத்துக்கு உபாயமாகும். அம்மார்க்கத்தால் மாத்திரம் ஞானத்தை அடைய முடியாது. ஏனெனில் அது உணர்ச்சி சமுதாயத்தை ஒட்டியே நிற்பது. உணர்ச்சியில் ஈடுபட்டிருக்கும் பரியந்தம், ஞானம் எவ்விதம்

சித்திக்கும்? ஆகையால் வீணாகக் காலத்தை கழிக்காமல் நேராக ஞான மார்க்கத்தையே அனுசரிப்பது தான் உசிதம்.

இம்மார்க்கத்தைக் கவனித்தால், வாசனையை ஒழிக்கும் முறையை மேற்கொள்வது தவறு. மேரு பருவதத்தை அசைத்தாலும் வாசனையைத் தனியாக அழிப்பது அசாத்தியம். எவ்வளவு காலம் முயற்சி செய்தாலும் அதைச் செய்ய முடியாது. சித்தம் (மனம்) நசிக்காமல் வாசனை போகாது, வாசனை போகாமல் சித்தம் அழியாது. ஆத்மா உணரப் படாமல் சித்தம் நசிப்பதில்லை, வாசனையும் க்ஷீணிப்பதில்லை. வாசனையும் சித்தமும் அழியாமல் ஆத்ம உணர்ச்சி ஏற்படுவதில்லை. ஆகவே மூன்றையும் ஆசிரயித்து, பௌருஷத்துடனும் விவேகத்துடனும் யத்தனம் செய்து வந்தால் காலக் கிரமத்தில் ஆத்ம தத்துவம் அறியப்படும். இதுவே எல்லாவற்றுக்கும் தாழ்ந்த முறை. அநேகர் இதைத்தான் அனுசரிக்க முடியும். இதற்கு மேலான மார்க்கம் உணர்ச்சிகளை நிரோதம் செய்து வருவது. இதையும் வெகுகாலம் கிரமமாகவும் ஊக்கத்துடனும் பழகிவந்தால் பலனை அடையலாம். இதைவிட வெகு சீக்கிரம் ஆத்ம பதவியை அடைய சத்ய சமான்ய ஸ்திதியைப் பௌருஷத்துடனும், யுக்தியுடனும் அனுசரித்து வருவது. இந்த சத்ய சாமான்ய ஸ்திதியின் எல்லையாகிய "கேவலம் இருக்கை" யென்ற தன்மையை ஒரு க்ஷண நேரமாவது விவேகத்தால் அடைந்தால், ஆத்ம பதவி உடனே சித்திக்கும்.

மனிதனாய்ப் பிறந்து, கொஞ்சமாவது ஆத்ம விசாரணையில் ஈடுபடாமலும், சேதனம் என்பதைக்

கொஞ்சமாவது அடக்கிப் பழகாமலும் இருந்தால் அந்த ஜன்மம் வியர்த்தமே. ஆசாபாசங்களில் கொஞ்சமாவது வைராக்கியம் ஏற்படாமலிருந்தாலும் அந்த ஜன்மமும் வீணே. இவைகளால் திரும்பித் திரும்பி ஜன்மமெடுத்து துக்க சாகரத்தில் மூழ்கிக் கிடக்க வேண்டும்.

விவேகிகளாய் இருப்பவர்கள் மேல் சொல்லிய மார்க்கங்களில் ஏதாவதொன்றை அனுசரித்துக் காலக் கிரமத்தில் ஞானத்தை அடைந்து பிறகு சுகியாய் இருப்பர். ஞானமே பலம், ஞானமே சுபம், ஞான வானே தைரியசாலி, ஞானவானே மனிதன், மற்ற வர்களெல்லாம் பசுவிற்குச் சமானம். ஆகையால் நீயும் ஞானியாகக் கடவது. ஞானம் என்பது சம்பந்தம், அதாவது அறிகிறவன் அறியப்படுவதில் லயமாவது. இதுவே பந்தமுமாகும். இங்கே இரண்டு என்ற பாவம் பந்தத்திற்குக் காரணம், ஒன்று என்ற பாவம் மோக்ஷத்திற்கு உபாயம். இவ்வித ஐக்கிய மின்றி ஞானமும் ஏற்படாது, பந்தமும் ஏற்படாது. இவ்விரண்டிலுமுள்ள வித்தியாசம் என்னவென்றால் ஒரு நிலையில் பற்றுதலில்லாமலும், மற்றொரு நிலையில் பற்றுதலோடு கூடியும் இருப்பதே.

ஆகையால் நீ இனி உன் வாழ்நாட்களை நடத்த வேண்டிய முறையாவது, மனதை சஞ்சலமற்றதாக வைத்துக்கொண்டு யாதொரு கர்மத்திலாவது விஷயத்திலாவது நோக்கத்தைச் செலுத்தாமல், ஆனால் யதேச்சையாக ஏற்படும் கர்மங்களைப் பற்றுத லின்றிச் சரிவரச் செய்தும், பிறகு எவ்வித சம்பவத் திலும் அதாவது சுகத்திலும் துக்கத்திலும், ஆபத்

திலும் செளகரியத்திலும், மனம் கலங்காமல் 'நான் ஆத்மா' என்ற நிச்சயத்தை நழுவ விடாமல் ஸ்திரமாயும் சமமாயும், மௌனமாயும் இருப்பதே. இவ்வாறு இருந்தால், நீ ஜீவன்முக்தன் ஆவாய்.

உபசமப் பிரகரணம் முற்றிற்று.



# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| viii | 9 | பர்தருஹரி | பர்த்ருஹரி |
| 1 | 4 | அகஸ்தியர் | அகஸ்தி |
| 7 | 13 | பற்றுமில்லாமல் | பற்று இல்லாமலும் |
| 8 | 5 | தவம் | யாகம் |
| 22 | 20 | விடாமுயற்கியும் | விடாமுயற்சியும் |
| 24 | 8 | காலத்திவ் | காலத்தில் |
| 28 | 23 | சாத்தியமாகவே | சத்தியமாகவே |
| 33 | 25 | சொருபத்தை | சொரூபத்தை |
| 36 | 6 | அகங்காரத்தீற்குக் | அகங்காரத்திற்குக் |
| 36 | 8 | . | , |
| 37 | 14 | வழிதெரியாமவ் | வழிதெரியாமல் |
| 38 | 22 | அசாத்தியமான | அசத்தியமான |
| 45 | 1 | டுதரிவித்தான் | தெரிவித்தான் |
| 57 | 1 | கித்தான | கித்தான் |
| 79 | 5 | அதனுலேதான் தேகமும் ஏற்பட்டது. | omit |
| 83 | 28 | செய்காள் | செய்தாள் |
| 85 | 1 | காடாந்தா | காடாந்தர |
| 85 | 8 | புரிவதையும். | புரிவதையும், |
| 87 | 24 | பூர்த்திகெய்யும் | பூர்த்திசெய்யும் |
| 90 | 26 | விதூரதம் | விதூரதன் |
| 92 | 14 | சொப்ா | சொப்ப |
| 96 | 15 | எதிர்த் | எதிரித் |
| 101 | 24/25 | சொல்பம் | உத்தமம் |
| 106 | 13 | உணருகிறது | உணருகிருன் |
| 111 | 2 | ராஜ | ராஜ்ய |
| 114 | 17 | யாது | யாதது. |
| 115 | 19 | போல | போன்ற |
| 117 | 1 | எபபடியோ | எப்படியோ |
| 129 | 21 | மயிலுக் | மைலுக் |
| 136 | 17 | விருத்தராந்தம் | விருத்தாந்தம் |
| 140 | 3 | யென்பதிலிருந்து | என்பதிலிருந்து |
| 145 | 6 | என்பன | என்பது |

| | | | |
|---|---|---|---|
| 150 | 23 | அவகர்ளின் | அவரவர்களின் |
| 154 | 6 | செய்தலும் | செய்தல் |
| 160 | 9 | கடைசிபில் | கடைசியில் |
| 161 | 6 | பதார்த்தங்களில்லை | பதார்த்தங்களில் இல்லை |
| 161 | 14 | நிற்கலாம் | நிற்கலாம், |
| 161 | 15 | ஓருமுகப்பட்டால் | ஒருமுகப்பட்டால் |
| 166 | 27 | சாத்யமல்ல | சத்யமல்ல. |
| 182 | 26 | லோகத்தின் | இந்திரலோகத்தின் |
| 187 | 2 | பிரமத்தில் | பிரம்மத்தில் |
| 192 | 14 | இப்பொழுது | அப்பொழுது |
| 193 | 18 | கர்மமின்றிக் | கர்மமின்றி |
| 194 | 1 | சொல்லத்தகாதது | சொல்லத்தகாது |
| 195 | 25 | போலில் | போல் |
| 199 | 15 | தலைவர்களுக்கும் | தலைவர்களுக்கு |
| 204 | 6 | அஸ்த்மன | அஸ்தமன |
| 224 | 7 | ஜனகளின் | ஜனகளின் |
| 224 | 7 | தீர்க்காலோசனை | தீர்க்காலோசனை |
| 234 | 15 | ஆகையால் | ஆகையால் |
| 234 | 16 | ராஜ்ய | ராஜ்ய |
| 248 | 10/11 | ராஜ்யத்தின் | ராஜ்யத்தின் |
| 250 | 29 | முறறிலும் | முற்றிலும் |
| 251 | 22 | சரியல்ல | சரியல்ல; |
| 252 | 10 | வாழக்கையில் | வாழ்க்கையில் |
| 252 | 21 | மெலலாம் | மெல்லாம் |
| 252 | 23 | துவந்த்வ | துவந்தவ |
| 252 | 27 | துவந்த்வ | துவந்தவ |
| 267 | 2 | ஆசிரயத்திருப்பேன் | ஆசிரயித்திருப்பேன் |
| 272 | 2 | சர்வ சதா | சர்வதா |
| 279 | 8 | தோற்றும் | தோன்றும் |
| 295 | 25 | ஓவ்வொரு | ஒவ்வொரு |
| 298 | 10 | யோச | யோக |
| 299 | 10 | உணர்ச்சிகளே என்பதை | உணர்ச்சிகளே இது என்பதை |
| 302 | 14 | ஆத்மத்தை | ஆத்மத்வத்தை |